# குறள்.

மூலமும் உரையும்.



இதிலே

புறத்துப்பாலும் பொருட்பாலும்

அடங்கியிருக்கிறது.

TRANQUEBAR,
PRINTED BY F. F. HOBUSCH AT THE E. L. M. PRESS.
1873.

# குறள்.

க.

## அறத்துப்பால்.



## 1. கடவுள் வாழ்த்து.

**1.** அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. க

முதல - முதன்மையாகவுடையன. முதற்றே - முதன்மையாகவுடையது. (ஏ, தேற்றேகாரம்.)

எழுத்துக்களெல்லாம் அகரத்தை முதன்மையாகவுடையன. உலகம் ஆதிபகவனைமுதன்மையாகவுடையது.

**2.** கற்றதனாலாய பயனென் கொல்வாலறிவ
னற்றாடொழாஅ ரெனின். உ

ஆய - உண்டான. என் - என்ன. (கொல், அசைநிலை.) வால் - மெய். எனின் - ஆனால். (நற்றாடொழாஅர்: ன், நல், தாள், தொழார். ஆஅர், உயிரளபெடை.)

மெய்யறிவையுடையவனின் பாதத்தை வணங்காவிட்டால் படிப்பினால் உண்டாகும் பிரயோசனமென்ன.

**3.** மலர்மிசையேகினான் மாணடிசேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ்வார். ங

மிசை - மேல். ஏகினான் - நடந்தவன். மாண் - பெருமை. நீடு - நெடுங்காலம்.

மலர்மேல் நடந்தவனின் பெருமை பொருந்திய பாதத்தைச் சேர்ந்தவர்கள் நிலத்திற்குமேல் நெடுங்காலம் வாழ்வார்கள்.

**4.** வேண்டுதல் வேண்டாமை யிலானடிசேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பையில. ச

இலான் - இல்லாதவன். யாண்டும் - எக்காலத்திலும். இடும்பை - துன்பம். இல - இல்லை.

விரும்புதல் விரும்பாமை யில்லாதவனின் பாதத்தைச் சேர்ந்தார்க்கு எக்காலத்திலுந் துன்பம் இல்லை.

**5.** இருள்சேரிருவினையுஞ் சேராவிறைவன்
பொருள்சேர்புகழ்புரிந்தார்மாட்டு. ரு

சேரா - சேராத. இறைவன் - கடவுள். புரிந்தார் - விரும்பினவர். மாட்டு - இடத்தில்.

கடவுளின் பொருள் சேர்ந்த புகழை விரும்பினவரிடத்தில் இருட்டோடு கலந்த இருவினைகளுஞ் சேராது.

6. பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ்வார். ௬

வாயில் - வழிகள், அவித்தான் - அவித்தவன், தீர் - அற்ற. ஒழுக்கநெறி - நல்லவழி.

பொறிகள் வழியாயுண்டாகும் ஐந்து ஆசைகளை அவித்தவனின் பொய்யற்ற ஒழுக்கவழியில் நின்றவர்கள் நெடுங்காலம் வாழ்வார்கள்.

7. தனக்குவமையில்லாதான்றாள்சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலைமாற்றலரிது. ௭

உவமை - நிகர். அல்லால் - அல்லாமல்.

தனக்கு நிகரற்றவனின் பாதத்தைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல் (மற்றவர்க்கு) மனக்கவலையை மாற்றுதல் அரிது.

8. அறவாழியந்தணன்றாள் சேர்ந்தார்க்கல்லாற்
பிறவாழி நீந்தலரிது. ௮

ஆழி - கடல், அந்தணன் - கிருபையுள்ளவன், அல்லால் - அல்லாமல்.

தர்மக்கடலாகிய அந்தணனின்பாதத்தைச்சேர்ந்தவர்க்கு அல்லாமல் (மற்றவர்க்கு) வேறுகடலை நீந்துதல் அரிது.

9. கோளில்பொறியிற்குணமிலவே எண்குணத்தான்
றாளை வணங்காத்தலை. ௯

கோளில் - கொள்ளுதல்இல்லாத, இலவே - இல்லையே.

எண்குணத்தானின் பாதத்தைவணங்காத தலைகள் கொள்ளுதல் இல்லாத பொறிகளைப்போல் பிரயோசனமில்லாதவைகளாகும்.

10. பிறவிப்பெருங்கடனீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேராதார். ௰

பிறவி - பிறப்பு.

பிறப்பாகிய பெரிய கடலை நீந்துவார்கள்; கடவுளின் பாதத்தைச் சேராதவர்கள் நீந்தார்கள்.





## 2. வான்சிறப்பு.

**11.** வானின்றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற்பாற்று. ௧

வானின்று - மழை இடைவிடாமல். உணரற்பாற்று - அறியப்படுந் தன்மையையுடையது. (பாற்று, பால்து.)

மழை இடைவிடாமல் நிற்க உலகம் விர்த்தியாகி வருவதினால் அது அமிர்தமென்று அறியப்படுந் தன்மையுடையது.

**12.** துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉமழை. ௨

துப்பார்க்கு - உண்பவர்க்கு. துப்பாய - உணவாகிய. (துப்பாயதூஉம், துப்பாயதும்).

உண்பவர்க்கு போசனமாகிய உணவுகளை உண்டாக்கி உண்பார்க்குத்தானும் உணவாய் நிற்பது மழை.

**13.** விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. ௩

பொய்ப்பின் - பொய்த்துப்போனால். விரி - பெரிய. வியன் - விசாலமான. உடற்றும் - வருத்தும். (துண்ணின்று: து, உள், நின்று.)

விண்ணின்றுமழை பொய்க்குமானால் விரிந்த நீரையுடைய விசாலமான உலகத்தின் பசி நின்று வருத்தும்.

**14.** ஏரினுழா அருழவர் புயலென்னும்
வாரிவளங் குன்றிக் கால். ௪

(உழாஅர், உழார்). புயல் - மேகம். வாரி - வெள்ளம். குன்றிக்கால் - குறைந்தால்.

புயல் என்னும் வாரிவளங் குறைந்தால் உழவர் ஏரினால் உழார்.

15. கெடுப்பதூஉங்கெட்டார்க்குச்சார்வாய்மற்றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. ௫

சார்வாய் - துணையாய். (மற்றாங்கு, அசை நிலை.)

கெடுப்பதுங் கெட்டவர்க்குச் சார்பாகி அவர்களை எடுத்து விடுவதும் மழை.

அறத்துப்பால். ௫

16. விசும்பிற் றுளி வீழினல்லான் மற்றாங்கே
பசும் புற்றலைகாண்பரிது. ௬

விசும்பின் - மேகத்திலிருந்து. வீழினல்லான் - விழா விட்டால்.

மேகத்திலிருந்து மழை விழாதிருந்தால் பசும்புல்லின் தலையையுங் காண்பதரிது.

17. நெடுங்கடலுந்தன்னீர்மைகுன்றுந்தடிந்தெழிலி
தானல்காதாகிவிடின். ௭

குன்றும் - குறையும். தடிந்து - குறைத்து. எழிலி - மேகம். நல்காதாகிவிடின் - பெய்யாவிட்டால்.

மேகந்தடிந்துப் பொழியாவிட்டால் நெடுங்கடலுந் தன் இயல்பில் குறையும்.

18. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. ௮

பூசனை - பூசை. வறக்கும் - பெய்யும்.
ஏல் - இல்லாவிட்டால். ஈண்டு - இங்கே.

மழை பெய்யாவிட்டால் வானோர்க்கும் இவ்வுலகில் சிறப்போடு பூசை நடவாது.

19. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்காதெனின். ௯

தங்கா - நில்லாது.

மழைபெய்யாவிட்டால் இந்த விரிந்த உலகத்தில் தானம் தவம் இரண்டுந் தங்கியிருக்காது.

20. நீரின்றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின்றமையாதொழுக்கு. ௰

இன்று - இல்லாமல். ஒழுக்கு - ஒழுக்கம்.

நீரில்லாமல் யார்யார்க்கும் உலகியல் அமையாது; ஒழுக்க மும் மழையின்றி அமையாது.





## 3. நீத்தார் பெருமை.

**21.** ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. க

நீத்தார் - துறந்தார். பனுவல் - நூல். துணிவு - நிச்சயம்.

நூல்களின் நிச்சயம் ஒழுக்கத்து நீத்தவரின் பெருமையை மேலானதென்று சொல்லும்.

**22.** துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. உ

துணைக்கூறின் - அளவு சொன்னால். அற்று - போலும்.

துறந்தவர் பெருமையின் அளவுசொன்னால் பூமியில் இறந்தவரை எண்ணிக்கொண்டது போலாம்.

**23.** இருமைவகை தெரிந்தீண் டறம்பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. ௩

ஈண்டு - இவ்விடத்தில். பிறங்கிற்று - உயர்ந்தது.

இருமையின் வகைகளை அறிந்து இவ்வுலகில் அறவறத்தை மேற்கொண்டவர் பெருமை உயர்ந்தது.

**24.** உரனென்னுந் தோட்டியானோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து. ௪

உரன் - அறிவு. தோட்டியால் - அங்குசத்தினால். வரன் - மோட்சம். வைப்பு - நிலம்.

அறிவு என்னுந்தோட்டியால் ஐம்பொறிகளையுங் காப்பவன் மோட்சம் என்னும் நிலத்துக்கு ஓர் வித்து ஆவான்.

25. ஐந்த வித்தா னாற்றலகல் விசும்புளார் கோமா
னிந்திரனே சாலுங்கரி. ரு

ஆற்றல் - வல்லமை. சாலுங்கரி - போதுமானசாட்சி.

ஐந்தாசைகளையும் அவித்தவனின் வல்லமைக்கு, அகன்ற வானத்திலே உள்ளவர்களுக்கு எசமானாகிய தேவேந்திரன் போதுமானசாட்சி.



26. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார். சு

செய்கலாதார் - செய்யமாட்டாதவர்.

செய்வதற்கு அருமையானவைகளைச் செய்பவர் பெரியோர், சிறியர் செய்வதற்கு அரியவைகளைச் செய்யாதவர்.

27. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. எ

கட்டு (கண், டு) - இடத்தில்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்கிற ஐந்தின் வகையைத் தெரிந்துகொள்பவனிடத்தில் உலகமுண்டு.

28. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும். அ

நிறை - நிறைந்த. மறைமொழி - மந்திரம்.

நிறைந்த மொழியையுடைய மனிதரின் பெருமையை அவர்கள் மந்திரங் காட்டிவிடும்.

29. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தலரிது. கூ

குன்று - மலை. வெகுளி - கோபம்.

குணமென்னும் மலையில் ஏறி நின்றவரின் கோபத்தைக் கணப்பொழுதாகிலுங் காத்தல் அருமை.

30. அந்தணரென் போரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுகலான். ௰

செந்தண்மை - செவ்வையான அருள்.
பூண்டு - வைத்து. ஒழுகலான - நடத்தலால்.

எல்லா உயிர்களிடத்திலுஞ் செவ்வையான அருள்வைத்து நடக்கிறதினால் அந்தணரென்பவர் அறமுள்ளவர்களாம்.





## 4. அறன் வலியுறுத்தல்.

31. சிறப்பீனுஞ் செல்வமுமீனுமறத்தினூஉங்
காக்கமெவனோ வுயிர்க்கு. ௧

ஈனும் - கொடுக்கும். ஊங்கு - மேலான. ஆக்கம் - செல்வம். எவனோ - என்ன.

சிறப்பையுங் கொடுக்கும்; செல்வத்தையுங் கொடுக்கும்; உயிர்க்கு அறத்திலும் மேலான செல்வம் என்ன.

32. அறத்தினூஉங்காக்கமுமில்லையதனை
மறத்தலினூஉங்கில்லைகேடு. ௨

அறத்திற்கு மேற்பட்ட செல்வமுமில்லை. அதைமறத்தலுக்கு மேற்பட்ட கெடுதியுமில்லை.

33. ஒல்லும் வகையாலறவினையோவாதே
செல்லும் வாயெல்லாஞ்செயல். ௩

ஒல்லும்-கூடும். ஓவாதே-ஒழியாமல். செயல்-செய்க.

செல்லும் இடங்களிலெல்லாங்கூடியமாத்திரந்தர்மச்செய்கையை ஒழியாமல் செய்க.

34. மனத்துக்கண் மாசிலனாதலனைத்தற
னாகுல நீரபிற. ௪

இலனாதல் - இல்லாதவனாகுதல். ஆகுலநீர - ஆரவாரத்தன்மையையுடையவை.

மனசில் குற்றமில்லாதவனாகுதல் அவ்வளவுதான் அறம்.

மற்றவை ஆரவாரத்தன்மையை உடையன.

35. அழுக்காறவாவெகுளியின்னாச்சொன்னான்கு
மிழுக்காவியன்றதறம். ௫

அழுக்காறு - பொறாமை. அவா - ஆசை. வெகுளி - கோபம். இன்னாச்சொல் - கடுஞ்சொல். இழுக்கா - வழுவாமல். இயன்றது - நடந்தது.

பொறாமை, ஆசை, கோபம், கடுஞ்சொல் ஆகிய நான்கையும் வழுவாமல் நடந்ததே அறம்.



36. அன்றறிவாமென்னாதறஞ் செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத்துணை. ௬

பொன்றுங்கால் - சாகும்போது. பொன்றா - அழியாத.

அன்று அறிவோமென்னாது அறஞ்செய்க. அது இறக்கும்போது அழியாததுணையாம்.

37. அறத்தாறிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தானிடை. ௭

சிவிகை - பல்லக்கு. பொறுத்தான் - தூக்கினவன். ஊர்ந்தான் - ஏறியிருக்கிறவன்.

தருமத்தின் பிரயோசனம் இதுவென்று சொல்லவேண்டுவதில்லை. பல்லக்கைச் சுமக்கிறவனையும் அதிலேறியிருக்கிறவனையும் பார்த்தறிக.

38. வீழ்நாள்படாஅமை நன்றாற்றினஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங்கல். ௮

வீழ் - ஒழியும். ஆற்றின் - செய்தால்.

ஒழியும் நாளுண்டாகாமல் நன்மைசெய்தால் அது வாழும் நாளின் வழியை அடைக்குங்கல்லாகும்.

39. அறத்தான்வருவதே யின்பமற்றெல்லாம்
புறத்த புகழுமில. ௯

புறத்த - புறம்பானவைகள். இல - அல்ல.

தர்மத்தால் வருவதுதான் இன்பம்; மற்றவையெல்லாம் புறம்பானவைகளும் புகழற்றவையுமாம்.

10. செயற்பாலதோரு மறனே யொருவற்
குயற்பாலதோரும்பழி. ம

பாலது - தன்மையையுடையது. உயல் - ஒழியல். (ஓரும், அசைநிலை.)

செய்யும் பாலது தர்மம். ஒழிக்கும் பாலது பாவம்.



அறத்துப்பால்.

## 5. இல்வாழ்க்கை.

41. இல்வாழ்வானென்பானியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றினின்றதுணை. க

இயல்பு - நிலைமை. மூவர் - பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி.

இல்லறத்தோடு கூடிவாழ்புவன் நிலைமைகளையுடைய மூவருக்கும் நல்லவழியில் நிலைத்திருக்குந் துணையாவான்.

42. துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வானென்பான்றுணை. உ

துவ்வாதவர் - ஏழைகள்.

துறந்தவர்களுக்கும் ஏழைகளுக்கும் இறந்தவர்களுக்கும் இல்லறத்தான் துணை.

43. தென்புலத்தார்தெய்வம்விருந்தொக்கலுனென்றாங்
கைம்புலத்தாறோம்பறலை. ந

தென்புலத்தார் - பிதிர் தேவதைகள். ஒக்கல் - சுற்றத்தார். புலத்து - இடத்தில்.

பிதிர்கள், தெய்வம், விருந்ினர், சுற்றத்தார், தான் என்ற ஐந்திடத்திலுஞ் செய்யவேண்டிய தர்மத்தைப் பாதுகாப்பது சிறந்ததாம்.

44. பழிபஞ்சிப்பாத்தூணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சலெஞ்ஞான்றுமில். ௪

பாத்து - பகுத்து. எஞ்சல் - குறைதல்.
எஞ்ஞான்றும் - எப்போதும்.

குற்றத்துக்கு அஞ்சிப் பகுத்து உண்பதை இல்வாழ்க்கை யுடையதானால் சந்ததி எப்போதுங் குறையாது.

45. அன்புமறனு முடைத்தாயினில் வாழ்க்கை
பண்பும் பயனுமது. ரு

பண்பு - குணம்,

இல்வாழ்க்கை அன்பையும் அறத்தையுமுடையதானால் அது தகுதியும் பயனுமாம்.

அறத்துப்பால். ௰௪

46. அறத்தாற்றினில் வாழ்க்கையாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவதெவன். ௬

ஆற்றின் - வழியில். ஆற்றில் - செலுத்தினால்.
(போஒய், போய்).

ஒருவன் இல்வாழ்க்கையைத் தர்மவழியில் செலுத்தினால் அவன் அதற்குப்புறம்பான வழியில்போய்ப்பெறுவது என்ன.

47. இயல்பினானில் வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல் வாருளெல்லாந் தலை. எ

முயல்வார் - தவஞ்செய்பவர்.

இல்வாழ்க்கைக்குரிய தன்மையோடு வாழுகிறவன் தவஞ்செய்வாரெல்லாரையும் பார்க்க உயர்ந்தவன்.

48. ஆற்றினொழுக்கி யறனிழுக்காவில் வாழ்க்கை
நோற்பாரினோன்மையுடைத்து. அ

ஒழுக்கி - நடத்தி. இழுக்கா - தவறாத. நோற்பார் - தவசிகள். நோன்மை - பெருமை.

தவஞ் செய்வாரை அவர்கள் வழியில் நடத்தித் தர்மத்தினின்றுந் தவறாத இல்வாழ்க்கை தவசிகளினும் பெருமை யுடையது.

49. அறனெனப்பட்டதே யில்வாழ்க்கையஃதும்
பிறன் பழிப்பதில்லாயினன்று. ௯

இல்லாயின் – இல்லாவிட்டால்.

அறனென்னப்பட்டது இல்வாழ்க்கை. அதுவும் (தவமும்) பிறரால் பழிக்கப்படாதிருக்குமாகில் நன்மையாம்.

50. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப்படும். ௰

வாழ்வாங்கு – வாழவேண்டியபடி. உறையும் – வாசம்பண்ணும்.

பூமியில் இல்லறத்தன்மையோடு வாழுகிறவன் வானத்தி லிருக்குந் தேவர்களுக்குள் வைக்கப்படுவான்.





## 6. வாழ்க்கைத் துணை நலம்.

51. மனைத்தக்க மாண்புடையளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. ௧

மாண்பு – சிறப்பு. தற்கொண்டான் – தன்புருஷன். வளத்தக்காள் – வரவுக்குத்தக்கவள்.

இல்லறத்துக்குத்தகுந்த மாட்சிமையுடையவளாகித் தன் புருஷனின் வரவுக்குத்தக்கபடி செலவு செய்கிறவள் வாழ்க் கைக்குத் துணையாவாள்.

52. மனைமாட்சியில்லாள் கணில்லாயின்வாழ்க்கை
யெனைமாட்சித்தாயினுமில். ௨

எனை – எவ்வளவு.

இல்லறத்துக்குத்தக்க சிறப்பு அவளிடத்தில் இல்லாதிருந் தால் அவ்வில்வாழ்க்கை எவ்வளவு சிறப்புடையதாகிலும் ஒன் றும் இல்லை.

53. இல்லதெனில்லவண் மாண்பானாலுள்ளதெ
னில்லவண் மாணாக்கடை. ௩

மாணாக்கடை - மாட்சியில்லாத இடத்தில்.

மனைவி மாண்பானால் இல்லாதது என்ன. அவள் மாண் பற்றவளானால் உள்ளது என்ன.

54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின். ௪

பெருந்தக்க - பெருமையுள்ள. திண்மை - பலம்.

கற்பென்னும் பலத்தைப் பெற்றிருந்தால் பெண்ணைப் பார்க்கிலும் மாட்சிமையுள்ளவை என்ன.

55. தெய்வந்தொழாஅள்கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப்பெய்யுமழை. ௫

கொழுநன் - புருஷன்.

தெய்வத்தைத்தொழாமல் தன் புருஷனைத்தொழுது எழுந் திருப்பவள் பெய்யென்று சொல்ல மழைபெய்யும்.



56. தற்காத்துத் தற்கொண்டாற்பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். ௬

பேணி - காத்து. தகை - நன்மை. சான்ற - நிறைந்த.

தன்னைக்காத்துத் தன் புருஷனைப்பேணி நன்மை நிறைந்த சொல்லைக்காத்துச் சோர்வில்லாதவள் பெண்ணாவாள்.

57. சிறைகாக்குங் காப்பெவன் செய்யுமகளிர்
நிறைகாக்குங் காப்பேதலை. ௭

எவன் - என்ன. நிறை - கற்பு.

பெண்களைச்சிறையில் வைத்துக் காக்குங் காப்பு என்ன செய்யும்; அவர்களே தங்கள் கற்பைக்காத்தல் தலையாம்.

58. பெற்றாற்பெறிற்பெறுவர்பெண்டிர்பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழுமுலகு. ௮

புத்தேளிர் - தேவர்.

மனைவிகள் தங்கள் கணவனை வணங்கினால் தேவர்வாழும் உலகில் பெருஞ் சிறப்பைப்பெறுவார்கள்.

59. புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற்பீடு நடை. ௯

புரிந்த - விரும்பின. ஏறு - ஆண்சிங்கம். பீடு - பெருமை.

புகழை விரும்பும் மனைவியில்லாதவர்களுக்கு இகழ்பவர்களுக்குமுன் ஆண்சிங்கம் போல்நடக்கும் பெருமைபொருந்திய நடையிராது.

60. மங்கலமென்பமனை மாட்சி மற்றத
னன் கலனன் மக்கட்பேறு. ௰

கலம் - ஆபரணம். பேறு - பெறுதல்.

மனைவியின் மாட்சியை மங்கலமென்று சொல்லுவார்கள். நல்லபிள்ளைகளைப்பெறுதலை நல்ல ஆபரணம் என்பார்கள்.





## 7. புதல்வரைப்பெறுதல்.

61. பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மக்கட்பேறல்ல பிற. ௧

பெறும்வஸ்துக்களில் அறியவேண்டியவைகளை அறிந்த பிள்ளைகளைப் பெறுதலையன்றி மற்றவைகளை நாம் மதிப்பதில்லை.

62. எழுபிறப்புந் தீயவைதீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட்பெறின். ௨

தீண்டா - தொடாது. பிறங்கா - உண்டாகாத.

ஒருவன் பழியுண்டாகாத தகுதியான மக்களைப் பெற்றால் எழுபிறப்பிலும் அவனைத் தீயவை தொடாது.

63. தம்பொருளென்பதம் மக்களவர் பொரு
டந் தம் வினையான்வரும். ௩

(டந்தம்: ள், தம்தம்.)

தங்கள் பிள்ளைகளைத் தங்கள் பொருளென்று சொல்லு வார்கள். அவர்கள் தேடின பொருள் தங்கள் தங்கள் வினை யால் வரும்.

64 அமிழ்தினு மாற்றவினிதே தம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ். ௪

ஆற்ற - மிகவும். அளாவிய - அளைந்த.

தமது பிள்ளைகளின் சிறுகை அளாவியகூழ் அமிர்தத்தி னும் மிகவும் இனிது.

65. மக்கள்மெய்தீண்டலுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு. ௫

பிள்ளைகள் உடம்பைத்தொடுதல் தேகத்துக்கின்பம். அவர் கள் சொல்லைக் கேட்டல் காதுக்கு இன்பம்.

[illegible] [illegible]

66. குழலினிதியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளாதவர். ௬

யாழ் - வீணை.

தங்கள் பிள்ளைகளின் மழலைச் சொல்லைக் கேளாதவர்கள் குழல்இனிது, வீணை இனிது எனபார்கள்.

67. தந்தை மகற்காற்று நன்றியவையத்து
முந்தியிருபபச் செயல். ௭

மகற்கு - மகனுக்கு. ஆற்றும் - செய்யும். அவையம் - சபை.

தகப்பன் பிள்ளைக்குச் செய்யும் நன்மையானது சபையில் முந்தியிருக்கும்படி செயதலாம.

68. தம்மிற்றம் மக்களறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க்கெல்லா மினிது. ௮

தம்மில் - தங்களைப்பார்க்கிலும். மன் - நிலைபெற்ற.

தங்களைப பார்க்கிலும தங்கள் பிள்ளைகள் அறிவுடையவர் களாயிருபபது மாஉலகத்தில் நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம் இனிது.

69. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந்தன்மகனைச்
சான்றோனெனக் கேட்டதாய். ௯

பொழுதில் - காலத்திலும். உவக்கும் - மகிழும்.

தன் மகனை அறிவுடையவனென்று கேட்ட தாய் அவனைப் பெற்றகாலத்தில் அடைந்த சந்தோஷத்திலும் அதிகச் சந்தோஷமடைவாள்.

70. மகன்றந்தைக் காற்று முதவியிவன்றந்தை
என்னோற்றான் கொல்லெனுஞ்சொல். ௰

ஆற்றும் - செய்யும். நோற்றான் - தவஞ்செய்தான்.

மகன் தகப்பனுக்குச் செய்யுமுதவி, இவனுடைய தந்தை என்ன தவஞ்செய்து பெற்றானோ எனனுஞ் சொல்லை யுண்டாக்குதலாம்.





## 8. அன்புடைமை.

71. அன்பிற்கு முண்டோவடைக்குந்தாழார்வலர்
புன்கணீர் பூசறரும். ௧

தாழ் - தாழ்ப்பாள். ஆர்வலர் - அன்புடையவர். பூசறரும் (பூசல், தரும்) - தூற்றும்.

அன்பிற்கும் அடைக்குந் தாழ்ப்பாளுண்டா. அன்புடையவரின் புல்லிய கண்ணீர் அதைத் தெரிவிக்கும்.

72. அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடையா
ரென்புமுரிய பிறர்க்கு. ௨

என்பு - எலும்பு.

அன்பில்லாதவர் எல்லாவற்றிலுந் தமக்கே உரியவர்; அன்புடையவர் எலும்பும் பிறருக்கு உரியது.

73. அன்போடியைந்த வழக்கென்பவாருயிர்க்
கென்போடியைந்த தொடர்பு. ௩

இயைந்த - பொருந்திய. வழக்கு - நடபடி. ஆர் - அரிய. தொடர்பு - தொடர்ச்சி.

அரிய உயிர்க்கு எலும்போடு கூடிய சம்பந்தத்தை அன்போடுகூடிய வழக்கென்பார்.

74. அன்பீனுமார்வமுடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச்சிறப்பு. ச

ஆர்வமுடைமை - ஆசை. நாடா - கெடாத.

அன்பு ஆசையைக் கொடுக்கும், அது சிநேகமென்னுங் கெடாத சிறப்பைத் தரும்.

75. அன்புற்றமர்ந்த வழக்கென்பவையகத்
தின்புற்றாரெய்துஞ் சிறப்பு. ரு

உற்று - ஆகி. உற்றார் - அநுபவித்தவர். எய்தும் - அடையும்.

இவ்வுலகில் இன்பத்தை அநுபவித்தவர்கள் அடையுஞ் சிறப்பை அன்போடு கூடியவழக்கென்பார்.



76. அறத்திற்கே யன்புசார்பென்ப வறியார்
மறத்திற்குமஃதே துணை.

மறம் - கோபம்.

அறியாதவர்கள் அறத்திற்கு அன்பு உதவியென்பார்கள், கோபத்திற்கும் அதுவே துணை.

77. என்பிலதனை வெயிற் போலக்காயுமே
யன்பிலதனை யறம். எ

எலும்பில்லாததை வெயில் சுடுவதுபோல் அன்பில்லாததைத் தருமக்கடவுள் சுடும்.

78. அன்பகத்தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த்தற்று. அ

வன்பாற்கண் - பாலைநிலத்தில். வற்றல் - காய்ந்த.

மனதில் அன்பற்ற உயிர்வாழ்க்கை கடினமானபூமியிலுள்ள உலர்ந்த மரந்தளிர்த்தது போலாம்.

79. புறத்துறுப்பெல்லா மெவன் செய்யும் யாக்கை
யகத்துறுப்பன்பிலவர்க்கு. கூ

எவன் - என்ன. யாக்கை - சரீரம்.

உடம்பின் அகமாகிய அவயவத்தில் அன்பில்லாதவர்க்கு புற உறுப்புகள் எல்லாம் என்னசெய்யும்.

80. அன்பின் வழியதுயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பு. ௰

உயிர்நிலை - சரீரம்.

அன்பின் வழிப்பது சரீரம்; அன்பில்லாதவர்களுக்கு எலும்பு தோல் மூடின உடம்பாகும்.





## 9. விருந்தோம்பல்.

81. இருந்தோம்பியில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. ௧

ஓம்பி - காப்பாற்றி. வேளாண்மை - உபகாரம்.

இல்லறத்திலிருந்து பொருளைப்பாதுகாத்து வாழ்வதெல் லாம் விருந்தினரைக்காப்பாற்றி அவர்களுக்கு உபகாரஞ்செய் யும் பொருட்டாம்.

82. விருந்து புறத்ததாத்தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற்றன்று. ௨

புறத்தது - வெளியே இருக்க. (ஆ - ஆக.)

தேவ அமிர்தமாயிருந்தாலும் விருந்தாடிகள் வெளியே இருக்கத் தான் சாப்பிடுதல் தக்கதல்ல.

83. வருவிருந்து வைகலுமோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதலின்று. ௩

வரு - வந்த. வைகலும் - நாள்தோறும். பரு - வருத்தம். பாழ்படுதலின்று - கெடுதலில்லை.

தன்வீட்டிற்கு வந்த விருந்தாடிகளை ஒவ்வொருநாளும் பாதுகாப்பவனின் வாழ்க்கை வருந்திக்கெடுவதில்லை.

84. அகனமர்ந்து செய்யாளுறையு முகனமர்ந்து
நல்விருந்தோம்புவானில். ௪

அகன் - மனம். அமர்ந்து - பொருந்தி. செய்யாள் - இலட்சுமி. உறையும் - வாசம்பண்ணும்.

முகம்மலர்ந்து நல்லவிருந்தாடிகளைப் பாதுகாப்பவன்வீட் டில் இலட்சுமி அகமலர்ந்து வாசம்பண்ணுவாள்.

85. வித்துமிடல் வேண்டுங் கொல்லோவிருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். ௫

இடல் - விதைத்தல். மிச்சில் - மீந்திருக்கிறது. மிசைவான் - உண்பான். புலம் - வயல்.

விருந்தினரைப்பாதுகாத்து மீந்திருப்பதைச் சாப்பிடுகிற வனின் வயலுக்கு விதையும் விதைக்கவேண்டுமோ.



86. செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத்தவர்க்கு. ௬

செல்லுகிற விருந்தினரைப்பாதுகாத்து வரும் விருந்தின ருக்கு எதிர்பார்த்திருப்பவன் தேவர்களுக்கு நல்ல விருந்தாடி யாவான்.

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன். ௭

இனை - இன்ன. துணைத்து - அளவையுடையது. வேள்வி - உபகாரம்.

உபகாரத்தின் பிரயோசனம் இன்னின்ன அளவையுடைய தென்று சொல்லக்கூடாது. விருந்தின் அளவே அளவாம்.

88. பரிந்தோம்பிப் பற்றற்றேமென்பர் விருந்தோம்பி
வேள்வித்தலைப்படாதார். ௮

பரிந்து - வருந்தி. பற்றற்றேம் - ஆதாரமற்றவர்களா னோம். தலைப்படாதார் - அடையாதவர்.

விருந்தினரைக்காப்பாற்றி அதினால் உண்டாகும் பிரயோ சனத்தை அடையாதவர்கள் பொருளை வருந்திப் பத்திரப் படுத்தி ஆதாரமற்றுப் போனோமென்பார்கள்.

89. உடைமையு ளின்மை விருந்தோம்பலோம்பா
மடமை மடவார்க ணுண்டு. ௯

இன்மை - தரித்திரம். மடமை - பேதைமை.

விருந்தோம்பலாகிய உபகாரத்தைச்செய்யாத அறிவீனம் பொருளிருக்குங்காலத்தில் தரித்திரம். அது அறிவீனரிடத்து உண்டு.

90. மோப்பக்குழையு மனிச்சமுகந் திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. ௰

குழையும் - வாடும். திரிந்து - வேறுபட்டு. (மோப்ப, நோக்க.)

மோந்தால் அனிச்சப்பூவாடும். முகம் வேறுபட்டு நோக்கினால் விருந்தாடி வாடுவான்.

2*



## 10. இனியவைக் கூறல்.

91. இன்சொலாலீரமளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச்சொல். ௧

ஈரம் - அன்பு. அளைஇ - கலந்து. படிறு - வஞ்சனை. செம்பொருள் - அறப்பொருள். (அளைஇ, உயிரளபெடை.)

அன்போடுகலந்து வஞ்சனையற்றனவாகவிருக்கும் அறப் பொருளைக் கண்டறிந்தவருடைய வாயின் சொற்களே இனிய சொற்களாம்.

92. அகனமர்ந்தீதலினன்றே முகனமர்ந்
தின்சொலனாகப் பெறின். ௨

அமர்ந்து - மகிழ்ந்து. ஈதல் - கொடுத்தல்.

முகம்மலர்ந்து இனியசொல்லையுடையவனாயிருத்தல் அகம் மலர்ந்து கொடுத்தலினும் நல்லது.

93. முகத்தானமர்ந்தினிது நோக்கியகத்தானா
மின்சொலினதே யறம். ௩

முகத்தால் விரும்பி இனிதாகநோக்கி மனதோடுகூடிய இன்சொல்லையுடையதே அறம்.

94. துன்புறூஉந்துவ்வாமையில்லாகும்யார்மாட்டு
மின்புறூஉமின்சொலவர்க்கு. ௪

துன்பு - துன்பம். உறூம் - உண்டாகும். துவ்வாமை - வறுமை. இல்லாகும் - இல்லை.

யாவரிடத்திலும் இன்பத்தைக்கொடுக்கும் இனியசொல்லையுடையவர்க்குத் துன்பத்தைக்கொடுக்கும் வறுமையில்லை.

95. பணிவுடையனின் சொலனாதலொருவற்
கணியல்ல மற்றுப்பிற. ௫

அணி - ஆபரணம். (மற்று, அசைநிலை.)

வணக்கமுடையவனாயிருத்தலும் இனியசொல்லையுடையவனாயிருத்தலும் ஒருவனுக்கு ஆபரணமாம், மற்றது ஆபரணமல்ல.



96. அல்லவை தேய வறம் பெருகு நல்லவை
நாடி யினியசொலின் ௬

அல்லவை - பாவம். தேய - குறைய.

நல்லவைகளை நாடி இனியசொற்களைச் சொன்னால் பாவங் குறையத் தர்மம் பெருகும்.

97. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற்றலைப்பிரியாச்சொல் ௭

நயன் - நீதி. பயக்கும் - தரும். பண்பில் - குணத்திலிருந்து. தலைப்பிரியா - நீங்காத.

பயனை உண்டாக்கி நற்குணத்தினின்றும் நீங்காதசொல் நீதியைக்கொடுத்து நன்மையைத்தரும்.

98. சிறுமையுணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையுமின்பந் தரும். ௮

சிறுமை - வறுமை.

சிறுமையினின்று நீங்கிய இனியசொல் மறுமையிலும் இம்மையிலும் இன்பந்தரும்.

99. இன்சொலினிதீன்றல் காண்பானெவன்கொலோ
வன்சொல் வழங்குவது. ௯

வன்சொல் - கடுஞ்சொல்.

இனியசொல் இனிமையைக்கொடுக்கிறதைக் காண்பவன் கடுஞ்சொல்லைச் சொல்லுவதேன்.

100. இனியவுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந்தற்று. ய

இன்னாத - இன்பமற்ற. கவர்ந்தற்று - சாப்பிட்டால் போலும். (இருப்ப, இருக்க.)

இனியசொற்கள் உண்டாயிருக்க இன்பமற்றவைகளைச் சொல்லுதல் பழம் இருக்கக் காயைச்சாப்பிட்டதுபோலாம்.





## 11. செய்ந்நன்றியறிதல்.

101. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமுமாற்றலரிது. க

வையகம் - பூமி. வானகம் - வானம். மாற்றல் - கைம்மாறுககொடுத்தல்.

தனக்கு முனனொரு நன்மையுஞ் செய்யாதிருக்கையில் செய்த உதவிக்கு வானமும் பூமியுங் கைம்மாறுகக்கொடுத்தல் போதாது.

102. காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப்பெரிது. உ

மாண - மிகவும்.

(அன்ப) காலத்தில் செய்த நன்மை சிறிதாகிலும் அது பூமியைபபார்க்க மிகவும் பெரியது.

103. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
னன்மை கடலிற் பெரிது. ௩

தூக்கார் - ஆராயாதவர். தூக்கின் - ஆராய்ந்துபார்த்தால்.

பயனை ஆராயாதவராய்ச் செய்த உதவியின் நன்மையை ஆராய்ந்தால் அது கடலினும் பெரியதாம்.

104. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன் றெரிவார். ௪

துணை - அளவு.

தினை அளவு நன்றிசெய்தாலும் பயனை அறிந்தவர்கள் அதைப்பனையளவாகக்கொள்வார்கள்.

105. உதவிவரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின்வரைத்து. ௫

வரைத்து - அளவுடையது. சால்பின் - தகுதி.

உதவியானது உதவியின் அளவையுடையதல்ல. உதவியைப்பெற்றவரின் தகுதி (அறிவு) அளவாம்.

அறத்துப்பால். ௨௩

106. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட்டுப்பாயார் நட்பு. ௬

கேண்மை - சிநேகம். துப்பாயார் - சகாயமானவர்.

மாசற்றவரின் சிநேகத்தை மறவாதே. துன்பகாலத்தில் சகாயஞ் செய்தவர் அன்பைவிடாதே.

107. எழுமை யெழுபிறப்புமுள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. ௭

எழுமை - எழுமைத்தனம். உள்ளுவர் - நினைப்பார்.
விழுமம் - கண்ணீர்.

தங்கள் கண்ணீரைத் துடைத்தவரின் சிநேகத்தை ஏழ்மைத் தனமுடைய எழுபிறப்பிலும் நினைப்பார்கள்.

108. நன்றிமறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. ௮

ஒருவர் செய்த நன்றியை மறப்பது நல்லதல்ல. அவர் செய்த தீமையை உடனே மறப்பது நன்மை.

109. கொன்றன்ன வின்னா செயினுமவர் செய்த
வொன்று நன்றுள்ளக்கெடும். ௯

அன்ன - போலும். இன்னா - துன்பம்.

கொன்றதை யொத்ததுன்பஞ் செய்தாலும் அவர் செய்த ஒரு நன்மையை நினைத்தால் அது இல்லையாகும்.

110. எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. ௰

கொன்றார் - கெடுத்தவர். உய்வு - ஈடேற்றம்.

எந்த அறத்தைக்கெடுத்தவர்களுக்கும் ஈடேற்றம் உண்டாம், செய்த நன்றியை அழித்தவனுக்கு ஈடேற்றமில்லை.





## 12. நடுவுநிலைமை.

111. தகுதியெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட்டொழுகப்பெறின். ௧

தகுதி - நடுவுநிலைமை. பகுதி - பிரிவு. பாற்பட்டு - முறைமை காத்து.

பிரிவினால் முறைமையை விடாமல் நடந்தால் தகுதி என்கிற ஒன்று நல்லதுதான்.

112. செப்பமுடையவனாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற்கேமாப்புடைத்து. ௨

செப்பம் - நடுவுநிலைமை. சிதைவு - கேடு. எச்சம் - பிள்ளைகள். ஏமாப்பு - உறுதி.

நடுவு நிலைமையுடையவனின் செல்வங் கெடுதலில்லாமல் அவன் சந்ததிக்கு உறுதியாயிருக்கும்.

113. நன்றே தரினு நடுவிகந்தாமாக்கத்தை
யன்றே யொழியவிடல். ௩

தரினும் - தந்தாலும். இகந்து - நீங்கி.

நன்மையைத்தந்தாலும் நடுவுநிலைமை தப்பிவருஞ் செல்வத்தை உடனே ஒழித்துவிடுக.

114. தக்கார் தகவிலரென்பதவரவ
ரெச்சத்தாற் காணப்படும். ௪

தகவு - நடுவுநிலைமை.

நடுவு நிலைமையுடையவரோ அது இல்லாதவரோ என்பது அவரவர் சந்ததியாற் காணப்படும்.

115. கேடும் பெருக்கமுமில்லலல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கணி. ரு

கோடாமை - சாயாமை.

கெடுதலும் பெருகுதலும் இல்லாதவையல்ல, (ஆதலால்) மனதில் கோணாதிருப்பதே சான்றோருக்கு ஆபரணம்.



116. கெடுவல் யானென்பதறிக தன்னெஞ்ச
நடுவொரீஇ யல்லசெயின் ௬

கெடுவல் - கெடக்கடவன். ஒரீஇ (ஒருவி) - நீங்கி.

ஒருவன் மனம் நடுவுநிலைமையிலிருந்து நீங்கிப்பாவமானதைச்செய்தால் நான் கெட்டுப்போவேனென்பதை யறியக்கடவன்.

117. கெடுவாக வையாதுலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான்றாழ்வு. ௭

தங்கியான் - நிலைத்திருந்தவன். (நன்றிகட் - நன்றிகண்.)

நடுவுநிலைமையில் தரித்திருந்தவனுக்குண்டாகும் வறுமையைக்கெடுதியாக உயர்ந்தோர் நினைக்கமாட்டார்கள்.

118. சமன்செய்துசீர் தூக்குங்கோல்போலமைந்தொரு
கோடாமை சான்றோர்க்கணி. [பாற் அ

சமன்செய்து - சமமாக்கி. பால் - பக்கம்.

சமமாக நின்று தன்னில் வைப்பதைச் சரியாய்க்காட்டுந் துலாக்கோலைப்போல் அமைந்து ஒருபக்கத்திலுஞ் சாயாம லிருப்பதே சான்றோருக்கு ஆபரணம்.

119. சொற்கோட்டமில்லது செப்பமொருதலையா
வுட்கோட்டமின்மை பெறின். ௯

கோட்டம் - கோணல்.

மனதில் ஒருபக்கஞ்சாயுங் கோணலில்லாமையைப்பெற் றால் சொல்லில் கோணலில்லாமையே நடுவு நிலைமையாம்.

120. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். ௰

பிறருடைய பொருட்களைத் தமது பொருட்களைப்போல் பேணிச்செய்தால் வியாபாரஞ் செய்பவர்களுக்கு நல்ல வியா பாரமாம்.





## 13. அடக்கமுடைமை.

121. அடக்கமமாருளுய்க்கு மடங்காமை
யாரிருளுய்த்துவிடும். ௧

அமரர் - தேவர். உய்க்கும் - செலுத்தும். ஆர் - நிறைந்த.

அடக்கந் தேவர் இருக்கு மிடத்தில் செலுத்திவிடும். அடங் காமை இருள் நிறைந்த நரகத்தில் செலுத்திவிடும்.

122. காக்க பொருளா வடக்கத்தையாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. ௨

ஊங்கு (ஊஉங்கு) - மேற்பட்ட.

அடக்கத்தை ஆஸ்தியாகக் காப்பாராக. அதற்குமேற் பட்ட செல்வம் ஆத்துமாவுக்கு இல்லை.

123. செறிவறிந்து சீர்மை பயக்குமறிவறிந்
தாற்றினடங்கப்பெறின். ௩

செறிவு - அடக்கம். சீர்மை - சிறப்பு.

அறியவேண்டியவைகளை அறிந்து நல்வழியில் நடந்தால் அவ்வடக்கம் அறியப்பட்டுச் சிறப்பைக்கொடுக்கும்.

124. நிலையிற்றிரியாதடங்கியான் றோற்ற
மலையினுமாணப் பெரிது. ௪

தோற்றம் - உயர்ச்சி. மாண - மிக.

தன் நிலையில் வேறுபடாமல் அடங்கினவனின் தோற்றம் மலையிலும் மிகப் பெரிதாம்.

125. எல்லார்க்கு நன்றாம் பணிதலவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. ௫

தகைத்து - தகுதியானது.

அடக்கம் எல்லாருக்கும் நன்றாகும். அவர்களுக்குள்ளுஞ் செல்வமுடையவருக்கே அது செல்வத்தின் தகுதியையுடையதாகும்.



126. ஒருமையுளாமைபோ லைந்தடக்கலாற்றி
னெழுமையு மேமாப்புடைத்து. ௬

ஒருமை - ஒருபிறப்பு. ஆற்றின - செய்தால்.

ஒருவன் ஒருபிறப்பில் ஆமையைப்போல் ஐந்துறுப்புகளையும் அடக்கவல்லவனாகில அது அவனுக்கு எழுபிறப்பிலும் உறுதியாகும்.

127. யா காவாராயினு நா காக்க காவாக்காற்
சோகாப்பர் சொலலிழுககுபபட்டு. ௭

சோகாப்பர் - துன்பப்படுவர். இழுக்குப்பட்டு - குற்றத்திலகபபட்டு.

எல்லாவற்றையுங் காக்காவிட்டாலும் நாவைக்காக்கக்கடவார். அதைக்காக்காவிட்டால சொல குற்றத்திலகப்பட்டுத்

துனபம அடைவார்.

128. ஒன்றானுந் தீச்சொற்பொருட் பயனுண்டாயி
னன்றாகா தாகி விடும். அ

தீயசொல்லின் பொருளால் ஒரு பயனுவது வந்தாலும் அவனிடத்திலுள்ள நன்மை எல்லாந் தீமையாகிவிடும்.

129. தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. கூ

நெருப்பினுல் சுட்டபுண் உள்ளேஆறிப்போகும். நாவினுற் சுட்டவடுஆருது.

130. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான்செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து. ௰

கதம் - கோபம். ஆற்றுவான் - வல்லவன். செவ்வி - சமயம்.

கோபம்வாாமல் காத்துப் படித்து அடங்கவல்லவனின் சமயத்தை அறக்கடவுள் பார்த்து அவன் வழியில நுழையும்.





## 14. ஒழுக்க முடைமை.

131. ஒழுக்கம் விழுப்பந்தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும். க

விழுப்பம் - சிறப்பு. ஓம்பு - காக்க.

ஆசாரஞ் சிறப்பைத் தருகிறபடியால் அவ்வாசாரஞ் சீவனைப் பார்க்கிலுங் காக்கப் படவேண்டியது.

132. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. உ

பரிந்து-வருந்தி. ஓம்பி - பேணி. தேரின்-தெளிந்தால்.

ஒழுக்கத்தை வருத்திப் பேணிக்காக்கக் கடவாய். (பலவற்றை) ஆராய்ந்து தெளிந்தாலும அதுவேஉனக்குத்துணையாகும்.

133. ஒழுக்கமுடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும். ௩

குடிமை - குலம். இழுக்கம் - தவறுதல். இழிந்த - தாழ்ந்த.

ஆசாரமுடைமை உயர்குலமாம். ஆசாரத்தினின்று வழுவுதல் இழிகுலமாம்.

134. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். ௪

ஓத்துக்கொளல் - கற்றுக்கொள்ளல்.

பார்ப்பான்படித்ததை மறந்துபோனால் அதைத்திரும்பவுங் கற்றுக்கொள்ளலாம்; தன் பிறப்பொழுக்கங்குறைந்தால் அது கெடும்.

135. அழுக்கா றுடையான்க ணாக்கம் போன்றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு. ௫

அழுக்காறு - பொறாமை.

பொறாமையுடையவனிடத்தில் செல்வம் இல்லாததுபோல் ஒழுக்கமில்லாதவனிடத்தில் உயர்வில்லை.



136. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து. ௬

ஒல்கார் - தளரார். உரவோர் - பெரியோர். ஏதம் - இழிவு. படுபாக்கு - உண்டாக.

ஒழுக்கத்தவறுதல் இழிவுண்டாவதை அறிவுடையோர் அறிந்து ஒழுக்கத்தினின்று தளரார்.

137. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி. ௭

எய்துவர் - அடைவர். எய்தா - அடையக்கூடாத.

ஒழுக்கத்தினால் மேன்மையை அடைவார். இழுக்கத்தினால் அடையத்தகாத பழியையடைவார்.

138. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். ௮

நல்லொழுக்கம் நன்மைக்கு விதையாகும். தீயவொழுக்கம் எப்பொழுதுந் துன்பத்தைத் தரும்.

139. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். ௯

ஒல்லா - கூடாது. வழுக்கி - மறந்து.

மறந்துந் தீயவைகளை வாயால் சொல்லல் ஒழுக்கமுடைய வர்களுக்குக்கூடாது.

140. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். ௰

ஒட்ட - பொருந்த.

உயர்ந்தோரோடு பொருந்த நடத்தலைப் படியாதவர் பல வற்றைக்கற்றாலும் அறிவில்லாதவராவார்.





## 15. பிறனில்விழையாமை.

141. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞா
தறம்பொருள் கண்டார்க ணில். [லத் ௧

பொருளாள் - பெண்சாதி. பெட்டு - இச்சித்து.

பிறன் பெண்சாதியை இச்சித்து நடக்கும் அறிவின்மை பூமியில் அறம்பொருள் கண்டவரிடத்தில் இல்லை.

142. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். ௨

அறன்கடை - அறத்துக்குப்புறம்பே. பிறன்கடை - பிறன்வீட்டின் தலைக்கடை.

பாவவழியில் நிற்கிற எல்லாருள்ளும் பிறன் தலைக்கடையில் நின்றவரைப் பார்க்க அறிவீனரில்லை.

143. விளிந்தாரின் வேறல்லர் மன்றதெளிந்தாரிற்
றீமைபுரிந்தொழுகுவார். ௩

விளிந்தார் - செத்தவர். மன்ற - நிச்சயமாக.

சந்தேகமின்றித் தெளிந்தவரின் மனைவியிடத்தில் தீமை செய்து நடப்பவர் செத்தவருக்கு ஒத்தவர்.

144. எனைத்துணையராயினுமென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். ௪

தேரான் - உணராமல்.

தினையளவும் உணராமல் பிறன்வீட்டில் புகுகிறவர்கள் எவ்வளவு பெருமையுடையவர்களாயிருந்தாலும் என்ன பிரயோசனம்.

145. எளிதெனவில லிறப்பானெய்து மெஞ்ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. ௫

இறப்பான் - புகுவான். விளியாது - நீங்காமல்.

எளிதென்று பிறன்வீட்டில் நுழைபவன் என்றைக்கும் நீங்காமல் நிற்கும் பழியை அடைவான்.



146. பகைபாவ மச்சம்பழியென நான்கு
இகவா வாமில்லிறப்பான் கண். ௬

இகவாவாம்- நீங்காதாம்.

பகை, பாவம், அச்சம், பழிஎன்னும் நான்கும் பிறன்வீட்டில் புகுபவனைவிட்டு நீங்காது.

147. அறனியலா னில்வாழ்வானென்பான்பிறனியலாள்
பெண்மை நயவாதவன். ௭

இயலால் - இயல்புடைய. நயவாதவன் - விரும்பாதவன்.

பிறன் சொத்தாகிய பெண்சாதியை விரும்பாதவன் அறமாகிய இல்வாழ்வானென்னப்படுவான்.

148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு. ௮

பேராண்மை - பெரியஆண்மை. ஆன்ற - நிறைந்த.

பிறன் பெண்சாதியை நோக்காத பெரும்ஆண்மை சான்றோர்க்குத் தர்மமாத்திரமா; நிறைந்த ஒழுக்கமுமாம்.

149. நலக்குரியார் யாரெனினாம நீர்வைப்பிற்
பிறற்குரியா டோடோயாதார். ௯

நலம் - நன்மை. நாமம் - அச்சம். டோடோயாதார் (ள், தோள், தோயாதார்) - சேராதவர்.

அச்சந்தரும் நீரால் சூழப்பட்டிருக்கிற பூமியில் நன்மைக் குரியவர் யாரெனில் பிறன மனைவியின் தோளைச் சேராதவராம்.

150. அறன் வரையானல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. ௰

வரையான் - உரிமையுள்ளவன்.

தர்மஞ் செய்யாமல் பாவஞ் செய்கிறவனாயிருந்தாலும் பிறன அதனுக்குள பட்டவளை விரும்பாமை நன்மையாம்.





## 16. பொறையுடைமை.

151. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தறலை. ௧

அகழ்வார் - தோண்டுகிறவர்கள்.

தன்னைத்தோண்டுகிறவர்களைத் தாங்கும் நிலத்தைப்போல் தன்னை இகழ்வாரைப் பொறுத்தல் தலையானதாம்.

152. பொறுத்தலிறப்பினை யென்றுமதனை
மறத்தலதனினு நன்று. ௨

இறப்பினை - இகழ்ச்சியை.

மற்றவர்களால் உண்டாகும் இகழ்ச்சியை எப்போதும் பொறுத்துக்கொள். அதை மறத்தல் அதனிலும் நல்லது.

153. இன்மையுளின்மை விருந்தொரால்வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. ௩

ஒரால் - தள்ளிவிடுதல். வன்மை - வல்லமை. மடவார் - அறிவீனர். பொறை - தாங்குதல்.

தரித்திரத்துள் தரித்திரம் விருந்தினரைத் தள்ளிவிடுதல்; வல்லமையுள்வல்லமை அறிவில்லாதவரைப் பொறுத்தல்.

154. நிறையுடைமை நீங்காமைவேண்டிற் பொறையு
போற்றி யொழுகப்படும். [டைமை ௪

உடைமை - தன்மை.

நிறைந்த தன்மை நீங்காதிருக்க விரும்பினால் பொறுமையுடைமையைக் காத்து நடக்கவேண்டும்.

155. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப்பொன் போற்பொதிந்து. ௫

ஒறுத்தார் - தண்டித்தவர். ஒன்றாக - ஒருபொருளாக. பொதிந்து - பத்திரப்படுத்தி.

பதிலுக்குப்பதில் செய்தவரை ஒரு பொருளாகவையார். பொறுத்தவரைப் பொன்போல் பத்திரப்படுத்திவைப்பார்.



156. ஒறுத்தார்க்கொருநாளை யின்பம்பொறுத்தார்க்குப்
பொன்றுந்துணையும் புகழ். ௬

பொன்றுந்துணையும் - அழியுமளவும்.

தண்டித்தவர்க்கு ஒருநாளை இன்பம்; பொறுத்தவர்க்கு உலகம் அழியுமளவும் புகழாம்.

157. திறனல்ல தற்பிறர் செய்யினுநோநொந்
தறனல்ல செய்யாமை நன்று. ௭

திறன் - அறம். நோநொந்து - துன்பத்திற்கு வருந்தி.

அதர்மமானவைகளைத் தனக்குப் பிறர்செய்தாலும் வருந்தி அவர்களுக்குத் தர்மமல்லாதவைகளைச் செய்யாமை நன்று.

158. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல். ௮

மிகுதி - அகங்காரம். மிக்கவை - தீயவை.

அகங்காரத்தால் தீயவைகளைச் செய்தவரைத் தாம் தமது பொறுமையினால் மேற்கொள்ளக்கடவர்.

159. துறந்தாரிற் றூய்மையுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற்பவர். ௯

துறந்தாரில் - முனிவரைப்பார்க்க. தூய்மை - பரிசுத்தம். இன்னா - கடும். நோற்கிறவர் - பொறுப்பவர்.

நல்வழியைக்கடந்தவரின் வாயிலிருந்து பிறக்குங் கடுஞ்சொல்லைப்பொறுப்பவர் துறந்தவரைப்பார்க்கிலும் தூய்மையுடையவராவர்.

160. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின். ௰

நோற்பவர் - பொறுப்பவர்.

பிறர்சொல்லுங் கடுஞ்சொல்லைப் பொறுப்பவர் சாப்பிடாமல் தவஞ் செய்கிறவர்களிலும் பெரியவராவர்.







## 17. அழுக்காறாமை.

161. ஒழுக்காறாக்கொள்க வொருவன் றன்னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு. ௧

அழுக்காறு - பொறாமை.

ஒருவன் தன்மனதில் பொறாமையில்லாத தன்மையை ஒழுக்கத்தின் வழியாகக் கொள்ளக்கடவன்.

162. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லை யார்மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின். ௨

விழுப்பேற்றின் - சிறந்தபேறுகளுள். அஃதொப்ப தில் - இன்றும். அழுக்காமை - அல்லாததன்மையை.

யாவரிடத்திலும் பொறாமையற்றிருக்குதலை ஒருவன் பெறுவானானால் சிறந்த பேறுகளுள் அதற்கு ஒப்பானது இல்லை.

**163.** அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். ௩

பேணாது - பாதுகாக்காமல்.

பிறன் செல்வத்தைப் பாதுகாக்காமல் பொறாமைப்படுபவன் தர்மமுஞ்செல்வமுந் தனக்குவேண்டியதில்லை என்பான்.

**164.** அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. ௪

இழுக்காற்றின் - தீயவழியால். ஏதம் - துன்பம். படுபாக்கு - உண்டாக.

அறிவுடையோர் தீயவழியில் குற்றமுண்டாவதை அறிந்து பொறாமையினால் தகாதவைகளைச் செய்யார்.

**165.** அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. ௫

சாலும் - போதும். ஒன்னார் - பகைவர். வழுக்கியும் - மறந்தும்.

பொறாமையுடையவர்க்கு அதுபோதும். பகைவர் மறந்தாலும் அதினால் அவர்களுக்குக் கேடுண்டாகும்.



**166.** கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும். ௬

மற்றவர்களுக்குக் கொடுக்கப்படுவதைப்பற்றிப் பொறாமைப்படுபவனின் பந்துக்கள் உடுப்பதும் உண்பதும் இன்றிக் கெடுவார்கள்.

**167.** அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும். ௭

அவ்வித்து - பொறாமைப்பட்டு. செய்யவள் - இலட்சுமி. தவ்வை - மூத்தசகோதரி.

பொறாமையுடையவனை இலட்சுமி பொறுக்காமல் அவனை மூதேவிக்குக் காட்டிவிடுவாள்.

168. அழுக்காறென வொருபாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். அ

திரு - செல்வம். செற்று - கெடுத்து. தீயுழி - தீயவிடத்தில். உய்த்துவிடும் - செலுத்திவிடும்.

பொறாமை என்னும் ஒருபாவி செல்வத்தைக்கெடுத்து நரகத்தில் செலுத்திவிடுவான்.

169. அவ்விய நெஞ்சத்தானாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப்படும். கூ

அவ்வியம் - பொறாமை. செவ்வியான் - நடுவு நிலைமையுடையவன்.

பொறாமையுள்ள மனதுடையவனின் செல்வமும் நடுவு நிலைமையுடையவனின் கேடும் நினைக்கப்படும்.

170. அழுக்கற்ற கன்றாருமில்லை யஃதிலார்
பெருக்கத்திற்றீர்ந்தாருமில். ய

அகன்றார் - பெருகினவர். இலார் - இல்லாதவர். தீர்ந்தாரும் - நீங்கினவரும்.

பொறாமைப்பட்டுப் பெருகினவருமில்லை; அதில்லாதவராகிப் பெருக்கத்திலிருந்து நீங்கினவருமில்லை.







## 18. வெஃகாமை.

171. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமுமாங்கே தரும். க

நடுவு - நடுவுநிலைமை. வெஃகில் - விரும்பினால்.
பொன்றி - கெட்டு. ஆங்கு - அப்போது.

நடுவுநிலைமை யில்லாதவனாகி நல்லபொருளை ஒருவன் இச்சித்தால் அது குடிகெடுத்து அப்போதே குற்றத்தையுந் தரும்.

**172.** படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணுபவர். ௨

படும் - உண்டாகும். படுவ - உண்டாகிற. நாணுபவர் - அஞ்சுபவர்.

நடுவு நிலைமையல்லாததற்கு அஞ்சுகிறவர்கள் வரும் பிரயோசனத்தை விரும்பிப் பழியுண்டாகுஞ் செய்கைகளைச் செய்யமாட்டார்கள்.

**173.** சிற்றின்பம் வெஃகியறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டுபவர். ௩

பரம இன்பத்தை விரும்புகிறவர் சிற்றின்பத்தை ஆசித்து அதர்மமானவைகளைச் செய்யமாட்டார்.

**174.** இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சியவர். ௪

இலம் - இல்லாதவர்களாயிருக்கிறோம். புன்மை - அற்பம். காட்சியவர் - அறிவையுடையவர்.

ஐம்புலன்களையும் வென்ற தெளிவான அறிவையுடையவர் நாம வறியோமென்றுநினைத்து (பொருளை) விரும்பமாட்டார்.

**175.** அஃகியகன்றவறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். ௫

அஃகி - நுட்பமாகி. வெறிய - வெறுக்கத்தக்க.

யாவரிடத்திலும் (பொருளை) விரும்பி வெறுக்கத்தக்கவைகளைச் செய்தால் நுட்பமும் விரிவுமுள்ள அறிவினால் என்ன ஆகும்.



**176.** அருள்வெஃகியாற்றின் கணின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். ௬

ஆற்றின்கண் - நல்லவழியில். சூழ - நினைக்க.

உருளைவிரும்பி நல்வழியில் நின்றவன் பொருளை இச்சித்துப்பொல்லாதவைகளை நினைததால் கெட்டுப்போவான்.

177. வேண்டற்க வெஃகி யாமாக்கம் விளைவயின்
மாண்டற்கரிதாம் பயன். எ

விளைவயின் - விளையுங்காலத்தில். மாண்டற்கு - மாட்சிமைப்படுவதற்கு.

இச்சித்தலால் உண்டாகுஞ் செல்வத்தை விரும்பாதே. அதின் பயன் விளையுமாகில் நன்றாகாது.

178. அஃகாமை செல்வத்திற்கியாதெனின்வெஃகாமை
வேண்டும் பிறன் கைப்பொருள். அ

அஃகாமை - குறையாமை.

செல்வத்திற்குக் குறையாமை யாதென்றால் பிறன் கைப்பொருளை இச்சியாதிருத்தலாம்.

179. அறனறிந்து வெஃகா வறிவுடையார்சசேருந்
திறனறிந்தாங்கேதிரு. கூ

திறன் - சமயம். திரு - லெட்சுமி.

தர்மத்தையறிநது (பொருளை) இச்சியாத அறிவுடையவரை இலட்சுமி நல்ல சமயம்பார்த்து அங்கே சேருவாள்.

180. இறலீனுமெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. ௰

இறல் - அழிவு. விறல் - வெற்றி.

(பின்வருவதை) எண்ணாமல் பொருளை விரும்பினால் அது அழிவைத்தரும். வேண்டாமை என்னும் பெருமை வெற்றியைத்தரும்.

கூஅ அறத்துப்பால்.

## 19 புறங்கூறாமை

181. அறங்கூறானல்ல செயினு மொருவன்
புறங்கூறானென்றலினிது. க

கூறான் - சொல்லாதவன். அல்ல - அறமில்லாதவை.

ஒருவன் தர்மத்தைப்பற்றிச் சொல்லாதவனுகிப் பாவ மானவைகளைச் செய்தாலும் இவன் புறங்கூருதவனென்று சொல்லப்படுதல இனிமையாகும்.

182. அறனழீஇ யல்லவை செய்தலிற்றீதே
புறனழீஇப்பொய்த்து நகை. உ

(அழீஇ, அழித்து). புறன் - புறத்திலுள்ளவன்.

தர்மத்தை அழித்து அதாமமானவைகளைச் செய்தலைப் பார்க்கிலும் பின்னுல் இகழ்ந்து முன்னுல் பொய்யாய் மகிழ்தல் தீமையுடையதாம்.

183. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந்தரும். ௩

பின்னுல் புறங்கூறி முன்னே புகழ்ந்து உயிர்வாழ்வதிலுஞ் சாகிறது தர்மநூல் சொல்லும் பயனைத் தரும்.

184. கண்ணின்று கண்ணறச்சொல்லினுஞ்சொல்லற்க
முன்னின்று பின்னேக்காச் சொல். ௪

கண்ணற - கண்ணேட்டமற. (முன்னின்று - முன், இன்று.)

பிறனுக்கு எதிரில் நின்று தாட்சணியமில்லாமல் பேசினுலும் அவன் இல்லாதவிடத்தில் பிற்பாடு குற்றம் விளையுஞ் சொற்களைச் சொல்லாதே.

185. அறஞ்சொல்லுநெஞ்சத்தானன்மை புறஞ்சொல்
புன்மையாற் காணப்படும். [லும் ரு

புன்மை - இழிவு.

..றக்கைச்சொல்லும் நெஞ்சத்தானல்லாமை புறங்கூறும் இழிவினுல் காணப்படும்.



186. பிறன்பழிகூறுவான் றன்பழியுள்ளுந்
திறன்றெரிந்து கூறப்படும். ௬

பழி - குற்றம்.

பிறனுடைய குற்றத்தைச் சொல்லுகிறவனின் குற்றங்களி லுள்ள பலமானவைகள் ஆராய்ந்து சொல்லப்படும்.

187. பகச்சொல்லிக்கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடறேற்றாதவர். எ

பக - பகையானவைகளே. கேளிர் - பந்துக்கள். நட் பாடல் - சினேகித்தல். தேற்றாதவர் - அறியாதவர்.

மகிழும்படிசொல்லிச் சிநேகஞ்செய்ய அறியாதவர் புறங் கூறிச் சுற்றத்தாரைப் பிரிப்பார்கள்.

188. துன்னியார் குற்றமுந் தூற்று மரபின
ரென்னை கொலேதிலார்மாட்டு அ

துன்னியார் - பந்துக்கள். மரபினர் - இயல்பினை யுடையவர். ஏதிலார் - அந்நியர்.

பந்துக்களின் குற்றத்தையுந் தூற்றுந் தன்மையையுடைய வர் அந்நியரிடத்தில் என்னதான் செய்யார்கள்.

189. அறநோக்கியாற்றுங்கொல்வையம் புறநோக்கிப்
புன்சொலுரைப்பான் பொறை. கூ

ஆற்றும் - சுமக்கும். பொறை - பாரம்.

ஒருவனுக்குப் பின்னால் அவன் குற்றங்களைச் சொல்லுகிற வனின் பாரத்தைப் பூமி தர்மம் நோக்கியா சுமக்கும்.

190. ஏதிலார் குற்றம்போற்றங்குற்றங்காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னுமுயிர்க்கு. ௰

அந்நியர் குற்றங்களைப்போல் தமது குற்றத்தையுங் காண் பாரானால் நிலைபெற்ற உயிர்க்குத் தீதுமுண்டோ.





## 20 பயனில சொல்லாமை.

191. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாருமெள்ளப்படும். ௧

முனிய - வெறுக்க. எள்ளப்படும் - இகழப்படும்.

பலரும் வெறுக்கப் பிரயோசனமற்றவைகளைச் சொல்ப வன் யாவராலும் இகழப்படுவான்.

192. பயனில பல்லார் முற்சொல்லனயனில
நட்டார்கட் செய்தலிற்றீது. ௨

இல - இல்லாதவைகளை. நட்டார் - உறவோர்.

பலர்முன் பயனற்றவைகளைச் சொல்லுவது நயனற்றவை களைச் சிநேகிதரிடத்தில் செய்வதிலுங் கெட்டது.

193. நயனிலனென்பது சொல்லும் பயனில
பாரித்துரைக்கு முரை. ௩

பாரித்து - விரித்து.

பயனில்லாதவைகளை விரித்துப் பேசுதல் இவன் நன்மை யற்றவனெனபதைக்காட்டும்.

194. நயன்சாரா நன்மையினீக்கும் பயன்சாராப்
பண்பில் சொற்பல்லாரகத்து. ௪

நயன் - இன்பம். சாரா - சேராதவை.

பிரயோசனத்தோடு சேராததும் பண்பில்லாததுமான சொற்கள் பலருக்கும் பிரியத்தைக்கொடாமல் நன்மையி னின்று நீக்கும்.

195. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மையுடையார் சொலின் ௫

சீர்மை - புகழ் நீர்மை - சற்குணம்.

சற்குணர் பிரயோசனமற்றவைகளைச் சொன்னால் அவர் களின் நன்மை சிறப்போடு நீங்கிப்போகும்.

அறத்துப்பால். ௪௧

196. பயனில் சொற் பாராட்டுவானை மகனெனல்
மக்கட்பதடியெனல். ௬

பாராட்டுவோன் - புகழ்ந்துசொல்பவன். பதடி - பதர்.

பயனற்ற சொற்களைப் புகழ்ந்துசொல்பவனை மனிதன் என்னுதே; மக்களில் பதர் என்று சொல்லு.

197. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. எ

சான்றோர் இன்பமற்ற சொற்களைச் சொன்னாலும், சொல்லட்டும். பயனற்றவைகளைச் சொல்லாமை நல்லது.

198. அரும்பயனாயுமறிவினார் சொல்லார்
பெரும் பயனில்லாத சொல் அ

ஆயும் - ஆராயும். அறிவினார் - அறிவையுடையவர்.

அருமையான பிரயோசனங்களை ஆராயும் அறிவுடையார் பெரும் பிரயோசனமில்லாத சொற்களைச்சொல்லமாட்டார்.

199 பொருடீர்ந்தபொச்சாந்துஞ்சொல்லார்மருடீர்ந்த
மாசறுகாட்சியவர். கூ

பொச்சாந்தும் - மறந்தும். மருள் - மயக்கம்

மயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவுடையவர் மறந்தும் பயனற்றவைகளைச் சொல்லார்.

200. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். ம

சொன்னல் பயனுடைய சொற்களைச் சொல்லக்கடவன். சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருக்கக்கடவான்.



உஉ. அறத்துப்பால.

## 21. தீவினையச்சம்.

201. *தீவினையாரஞ்சார் விழுமியாரஞ்சுவர்*
*தீவினையென்னுஞ் செருக்கு.* ௧

*விழுமியார் - சிறப்புடையவர். செருக்கு - அகங்காரம்.*

*தீவினை என்னும் அகங்காரத்திற்குத் தீவினையுடையவர் அஞ்சார். சிறப்புடையவர் அஞ்சுவார்.*

202. *தீயவைதீய பயத்தலாற் றீயவை*
*தீயினுமஞ்சப்படும்.* ௨

*பயத்தலால் - தருதலால்,*

*தீவினைகள் துன்பத்தைத் தருவதினால் அத்தீயவைகளுக்குத் தீயைப்பார்க்கிலும் பயப்படவேண்டும்.*

203. *அறிவினுளெல்லாந் தலையென்ப தீய*
*செறுவார்க்குஞ் செய்யாவிடல்.* ௩

*செறுவார் - பகைஞர்.*

*பகைஞருக்குந் தீயவைகளைச் செய்யாதிருத்தலை அறிவுகள் எல்லாவற்றிலும் முதன்மை என்பார்கள்.*

204. *மறந்தும் பிறன் கேடு சூழற்க சூழி*
*னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.* ௪

*சூழற்க - எண்ணாதிருக்கக்கடவன்.*

*மறந்தும் பிறன்கேட்டை எண்ணாதிருக்கக்கடவன். அதை எண்ணினால் அறக்கடவுள் எண்ணினவனுக்குக் கெடுதியை எண்ணுவான்.*

205. *இலனென்று தீயவை செய்யற்க செய்யி*
*னிலனாகுமற்றும் பெயர்த்து.* ௫

*பெயர்த்து - மறுபடியும்.*

*ஒருவன் தான் தரித்திரனென்று நினைத்துத் தீயவைகளைச் செய்யாதிருக்கக்கடவன். செய்தால் மறுபடியும் அதிகத்தரித்திரனாவான்.*



206. *தீப்பாலதான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால*
*தன்னை யடல் வேண்டாதான்.* ௬

பால - தன்மையுடையன. அடல் - வருத்தம்.

துன்பஞ் செய்யுந் தன்மையையுடையவைகள் தன்னை வருத்தப்படுத்தலை விரும்பாதவன் தீயதன்மையையுடைய வைகளைப் பிறருக்குச் செய்யாதிருக்கக்கடவான்.

207. எனைப்பகையுற்றாருமுய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்றடும். எ

எனை - எவ்வளவு. உய்வர் - பிழைப்பர்.
வீயாது - நீங்காமல். அடும் - கொல்லும்.

எவ்வளவு பெரிய பகைவரிருந்தாலுந் தப்புவார். தீவினையாகிய பகை நீங்காமல் பின்சென்று கொல்லும்.

208. தீயவைசெய்தார் கெடுதனிழறன்னை
வீயாதடி யுறைந்தற்று. அ

உறைந்தற்று - தொடர்ந்தால்போலும்.

தீயவைகளைச் செய்தவர்களின் கெடுதல் நிழல் தன்னை விடாமல் தன் அடியினிடத்தில் தங்கியதை யொக்கும்

209. தன்னைத்தான் காதலனாயினெனைத் தொன்றுந்
துன்னற்க தீவினைப்பால. கூ

காதலன்-சிநேகிக்கிறவன். துன்னற்க-செய்யாதொழிக.
ஒருவன் தன்னைத் தான் சிநேகித்தால் தீவினைத் தன்மையுடையதை எவ்வளவாயினுஞ் செய்யாதிருக்கக்கடவான்.

210. அருங்கேடனென்பதறிக மருங்கோடித்
தீவினை செய்யானெனின். ௰

அருங்கேடன் - கேட்டை அரிதாக வுடையவன்.
மருங்கு - பக்கம்.

ஒருவன் கெட்டவழியில் சென்று தீவினை செய்யாதிருப்பானானால் அவன் அரிதாகிய கேடில்லாதவனென்பதையறியக் கடவான்.





## 22. ஒப்புரவறிதல்.

211. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. க

கடப்பாடு - உபகாரம். ஆற்றும் - செய்யும்.

உபகாரம் பிரதி உபகாரத்தை விரும்பாது; உலகம் மேகத்துக்கு என்னப்பிரதி உபகாரஞ் செய்யும்.

212. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. உ

தாள் - முயற்சி. தந்த - சம்பாதித்த. வேளாண்மை- உபகாரம்.

ஒருவன் முயற்சிசெய்து சம்பாதித்துவைத்த பொருளெல்லாந் தகுந்தவர்க்கு உபகாரஞ் செய்யும்படிக்குத்தான்.

213. புத்தேளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற. ௩

தேவர் உலகத்திலும் இவ்வுலகத்திலும் உபகாரம்போல் நல்லவையாகிய வேறு செயல்களைப் பெறுவதரிதாம்.

214. ஒத்ததறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப்படும். ௪

ஒத்தது - உலகநடை.

உலகநடையையறிந்து செய்பவன் உயிரோடு கூடிவாழ்பவனாவான். மற்றவர்கள் செத்தவர்களுள் வைக்கப்படுவார்கள்.

215. ஊருணி நீர்நிறைந்தற்றே யுலகவாம்
பேரறிவாளன் றிரு. ரு

ஊருணி - ஊரார் ஜலமுண்ணுங் குளம். அவாம் - விரும்பும்.

உலக நடையை விரும்பிச் செய்யும் பெரிய அறிவையுடையவனின் செல்வம் ஊருணி நீர் நிறைந்தது போலும்.

அறத்துப்பால. ௪ரு

216. பயன் மரமுள்ளூர்ப் பழுத்தற்றாற்செல்வ
நயனுடையான்கட் படின். ௬

படின் - உண்டானால். (ஆல், அசைநிலை).

செல்வம் உபகாரஞ்செய்பவனிடத்திலுண்டானல் அது பலன் கொடுக்கும் மரம் ஊர்நடுவே பழுத்தது போலாகும்.

217. மருந்தாகித்தப்பா மரத்தற்றாற்செல்வம்
பெருந்தகையான் கட் படின். எ

நகையான் - தன்மையையுடையவன்.

செல்வம் பெருந்தன்மையுடையவனிடத்தில் உண்டானல் தப்பாமல் மருந்துக்கு உபயோகப்படுகிறமரத்தைப்போலாகும்.

218. இடனில் பருவத்து மொப்புரவிற்கொல்கார்
கடனறி காட்சியவர். அ

ஒல்கார் - தளரார்.

தாம் செய்யவேண்டிய கடமையை யறிந்த விவேகிகள் செல்வமற்ற காலத்திலும் உபகாரஞ் செய்கிறதற்குத் தளரார்.

219. நயனுடையா னல்கூர்ந்தானுதல் செயுநீர்மை
செய்யாதமைகலா வாறு. கூ

நல்கூர்ந்தான் - வறுமைப்பட்டவன். அமைகலா - சம்மதியாத.

உபகாரஞ் செய்கிறவன் வறுமைப்பட்டவனாதல் தான் செய்யவேண்டிய தர்மங்களைச் செய்யக்கூடாமையினால்தான்.

220. ஒப்புரவினல் வருங்கேடெனினஃதொருவன்
விற்றுக்கோட் டக்கதுடைத்து. ம

கோட்டக்கது (கோள், தக்கது) - வாங்குந்தன்மையையுடையது.

உபகாரஞ் செய்தலினல்கேடுவருமென்றால்ஒருவன் தன்னை விற்றாயினும் அதைக் கொள்ளத்தக்க தன்மையுடையதாம்.





அறத்துப்பால்.

## 23. ஈகை.

**221.** வறியார்க்கொன் றீவதே யீகைமற்றெல்லாங்
குறி யெதிர்ப்பை நீரதுடைத்து. க

குறி - குறித்த. எதிர்ப்பை - பதிலுக்குப்பதில்.

ஏழைகளுக்குக் கொடுப்பதுதான் ஈவு. மற்றதெல்லாம் பதிற்பலனை விரும்புந் தன்மையை யுடையது.

**222.** நல்லாறெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. உ

நல்லவழி என்றாலும் இரத்தல் தீமை, மேலுலகம் இல்லையென்றாலும் ஈதல் நல்லது.

**223.** இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணேயுள. ௩

எவ்வம் - இழிவு.

நான் ஏழையெனனும் இழிவுசொல் சொல்லாமையும் ஈதலும் நற்குடியில பிறநதவனிடத்தில் உண்டு.

**224.** இன்னாதிரக்கப்படுத லிரந்தவ
ரின்முகங் காணுமளவு. ௪

இன்னாது - இனிதாகாது.

யாசகரது இனியமுகத்தைக்காணும்மட்டும் இரக்கப்படுதல் இனிமையாகாது.

**225.** ஆற்றுவாராற்றல் பசியாற்றலப்பசியை
மாற்றுவாராற்றலிற் பின் ௫

தவஞ் செய்பவரின் வல்லமை பசியைப்பொறுத்தலாம். அதைப்பார்க்க அப்பசியை மாற்றுவாரின் வல்லமைபெரியது.



**226.** அற்றாரழி பசி தீர்த்தலஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி. ௬

அற்றார் - தரித்திரர். அழி - அழியும். உழி - இடம்

தரித்திரரின் மிகுந்த பசியைத் தீர்த்தல் பொருளைப்பெற்ற ஒருவன அதை வைக்கும் இடமாம்.

**227.** பாத்தூண்மரீஇ யவனைப்பசியென்னுந்
தீப்பிணி தீண்டலரிது. ௭

மரீஇ (மருவி) - பழகி. தீண்டல் - தொடுதல்.

பசுத்து உண்ணுதலில் பழகியவனைப் பசியென்னும் தீப்பிணி தொடுதல் அரிதாகும்.

228. ஈத்துவக்கு மின்பமறியார் கொறாமுடைமை
வைத்திழக்கும் வன்கணவர். அ

உவக்கும்-மகிழும். (கொறாமுடைமை-கொல், தாமுடைமை.)

தமது பொருளை ஏழைகளுக்குக் கொடாமல் வைத்து இழக்கும் அருளில்லாதவர்கள் கொடுத்தலின் மகிழ்ச்சியை யறியார்களோ.

229. இரத்தலினின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியருணல். கூ

மன்ற - நிச்சயம். தமியர் - தனித்து.

(பொருளின் குறைவை) நிறைவாக்கும்படி தாம் தனித்திருந்து சாப்பிடுதல நிச்சயமாகவே இரத்தலினுங் கெட்டது.

230. சாதலினின்னாத தில்லை யினிததூஉ
மீதலியையாக் கடை. ய

இயையா - இசையாத.

சாவைப்போல் இனிமையில்லாததொன்றுமில்லை. அதுவும் யாசகருக்குக் கொடுக்கக் கூடாதகாலத்தில் இனிமையாகும்.





## 24. புகழ்.

231. ஈதலிசைபட வாழ்தலதுவல்ல
தூதியமில்லை யுயிர்க்கு. க

ஊதியம் - இலாபம்.

ஈதலினால் புகழுண்டாக வாழக்கடவாய். அதையன்றி உயிர்க்கு வேறு பலனில்லை.

232. உரைப்பாருரைப்பவை யெல்லாமிரப்பார்க்கொன்
றீவார் மேனிற்கும் புகழ் உ

சொல்லுகிறவர்களால் சொல்லப்படுகிறதெல்லாம் இரப்பவர்க்கு ஒன்றைக் கொடுப்போர் மேல் நிற்கும் புகழாம்.

233. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன்றில். ௩

ஒன்றா - ஒப்பில்லாத. பொன்றாது - அழியாது.

ஒப்பற்ற உயர்ந்த புகழையல்லாமல் உலகத்தில் அழியாமல் நிற்பது வேறொன்றுமில்லை.

234. நிலவரை நீள்புகழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தேளுலகு. ௪

நில - நிலம். வரை - எல்லை.

ஒருவன் பூமியின் எல்லையில் அழியாமல் நிற்கும் புகழை அடைவானானால் தேவலோகம் தன்னிடத்தில் வந்திருக்கிற ஞானிகளைத் துதியாது.

235. நத்தம்போற் கேடுமுளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க்கல்லாலரிது. ௫

நத்தம் - பெருக்கம். சாக்காடு - மரணம். வித்தகர் - ஞானிகள்.

ஞானிகளுக்கல்லாமல் மற்றவர்களுக்குக்கேடும் மரணமும் பெருக்கத்தைப்போல் உண்டாகுதல் அரிதாகும்.



236. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. ௬

தோன்றினால் புகழோடு தோன்றக் கடவான். அதில்லாதவர்கள் தோன்றலினுந் தோன்றாமை நல்லது.

237. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவதெவன். ௭

நோவார் - நோவாதவராகி.

புகழ்பட வாழாதவர்கள் தங்களை நோவாதவராகித் தம்மை இகழ்பவரை நோவது என்.

238. வசையென்பவையத்தார்க்கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறுஅவிடின். அ

வசை - பழிப்பு.

புகழ்ச்சியென்னும் பிள்ளையைப் பெறுவிட்டால் வையத்தார்க்கெல்லாம் அது நிந்தையாகும் என்று சொல்லுவார்கள்.

239. வசையிலா வண்பயன் குன்றுமிசையிலா
யாக்கை பொறுத்த நிலம். கூ

வண் - வளம். யாக்கை - உடம்பு.

புகழில்லாத உடம்பைச்சுமந்த பூமியில் பழிப்பற்ற வளமையுள்ள விளைவு குறையும்.

240. வசையொழியவாழ்வாரே வாழ்வாரிசையொழிய
வாழ்வாரே வாழாதவர். ம

நிந்தை யில்லாமல் வாழ்பவர்கள் தான் வாழ்பவர்கள். புகழின்றிவாழுகிறவர் வாழாதவர்.





## 25. அருளுடைமை.

241. அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம்பொருட்
பூரியார் கண்ணுமுள. [செல்வம் க

பூரியார் - கீழ்மக்கள்.

அருளாகிய செல்வம் செல்வங்களுக்குள் செல்வமாம்; பொருளாகிய செல்வங் கீழ்மக்களிடத்திலுமுண்டு.

242. கல்லார்ப்பட்டு அருளாள்க பல்லார்ப்பார்த்
தேரினுமஃதே துணை. உ

நல்லவழியில் நின்று அருளுடையவராகக்கடவார். பல சமயநூற்களை ஆராய்ந்து பார்த்தாலும் அதுதான் துணையாகும்.

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கில்லையிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல். ௩

இன்னா - துன்பம்.

இருள்சேர்ந்த துன்ப உலகம் புகுதல் அருள் சேர்ந்த நெஞ்சை யுடையவர்க்கு இல்லை.

244. மன்னுயிரோம்பி யருளாள்வாற்கில்லென்ப
தன்னுயிரஞ்சும் வினை. ௪

ஓம்பி - காப்பாற்றி.

மன்னுயிர்களைக்காப்பாற்றி (அவைகளிடத்தில்) கிருபையுள்ளவனாயிருப்பவனுக்குத் தன்னுயிர் அஞ்சும் பாவமில்லை என்பார்கள்.

245. அல்லலருளாள்வார்க்கில்லை வளிவழங்கு
மல்லன் மா ஞாலங் கரி. ௫

அல்லல் - துன்பம். வளி - காற்று. மல்லல் - வளப்பம்.

அருளுடையவர்க்குத் துன்பமில்லை. காற்று உலாவுகிற வளப்பமுள்ள பெரிய பூமி அதற்குச்சாட்சி.



246. பொருணீங்கிப் பொய்ச்சார்ந்தாரென்பாருணீங்கி
யல்லவைசெய் தொழுகுவார். ௬

பொய்ச்சார்ந்தார் - மறந்தார்.

அருளின்றித் தீயவைகளைச்செய்து நடப்பவர் உறுதிப் பொருளை நீங்கி அதை மறந்துபோனவரென்பார்.

247. அருளில்லார்க் கவ்வுலகமில்லை பொருளில்லார்க்
இவ்வுலக மில்லாகியாங்கு. எ

இல்லாகியாங்கு - இல்லாததுபோல்.

ஆஸ்தியில்லாதவர்களுக்கு இவ்வுலகமில்லாததுபோல் அருளில்லாதவர்க்கு அவ்வுலகம் இல்லை.

248. பொருளற்றார் பூப்பரொருகாலருளற்
றற்றார் மற்றாதலரிது. அ

பூப்பர் - செம்மைப்படுவர்.

ஆஸ்தியில்லாதவர்கள் ஒருகாலத்தில் செம்மைப்படுவார். அருளற்றவர் அழிந்தவராவார். அவர்கள் பின்னால் சீர்படுவது அரிது.

249. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற்றேரி
னருளாதான் செய்யுமறம். க

தெருளாதான்-ஞானமில்லாதவன். தேரின் - ஆராய்ந்தால்.

அருளற்றவன் செய்யும் அறத்தை ஆராய்ந்தால் ஞானமில்லாதவன் மெய்ப்பொருளைக் கண்டதுபோலாம்.

250. வலியார் முற்றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார் மேற்செல்லுமிடத்து. ய

ஒருவன் தன்னைப்பார்க்கிலும் ஏழையானை வருத்தும்படி போகும்போது வலியவன் முன்னிற்கத் தன்னை நினைக்கக்கடவான்.



4.

நூ. அறத்துப்பால்.

## 26. புலான்மறுத்தல்.

251. தன்னூன் பெருக்கற்குத் தான் பிறிதூனுண்பா
னெங்ஙன மாளுமருள். க

ஊன் - உடம்பு. எங்ஙனம் - எப்படி.

தன் உடம்புபெருக்கும்படிக்கு மற்ருென்றின் உடலை உண்பவன் எப்படிக் கிருபையுடையவனுவான்.

252. பொருளாட்சி போற்ருதார்க்கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின்பவர்க்கு. உ

ஆட்சி - உரிமை. போற்ருதார் - பாதுகாக்காதவர்.

பொருளுரிமை காப்பாற்ருதவர்க்கில்லை. அதுபோல் அருள்பயன் ஊன்தின்பவர்க்கு இல்லை.

253. படைகொண்டார் நெஞ்சம் போனன்றூக்காதொ
ருடல்சுவை யுண்டார் மனம். [ன்ற ௩

படை - வாளாயுதம். ஊக்காது - மேற்கொள்ளாது.

ஓர் உயிரின் உடலைச் சுவைப்பட உண்டவரின் நெஞ்சு வாளாயுதத்தைக் கையிற் கொண்டவர் மனம்போல் நன்மையை விரும்பாது.

254. அருளல்லதியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன்றினல். ௪

கோறல் - கொல்லல்.

அருள் யாதெனில் கொல்லாமையாம். அருளில்லாமை என்ன வென்ருல் கொல்லுதலாம்; கொன்றவூனைத்தின்னுதல் அதர்மம்.

255. உண்ணுமையுள்ளதுயிர் நிலை யூனுண்ண
வண்ணுத்தல் செய்யாதளறு. ரு

அண்ணுத்தல் - வாய்திறத்தல். அளறு - நரகம்.

(ஊனைச்) சாப்பிடக்கூடாதது உயிர்நின்றஉடம்பு. ஊனைச் சாப்பிட்டால அவனை நரகம் வாய்திறந்து உமியாது.

அறத்துப்பால். ருக

256. தினற்பொருட்டாற்கொள்ளாதுலகெனின்யாரும்
விலைப்பொருட்டாலூன் றருவாரில். ௬

உலகம் ஊனைத்தின்னும் பொருட்டுக் கொள்ளாவிட்டால் விலைப்படும் பொருட்டு ஊனை விற்பாரில்லை.

257. உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். எ

புலால் - இறைச்சி. பிறிது - வேறு.

புலால் மற்றொன்றின் புண் என்று உணர்வாரைப் பெற்றால் அதைச்சாப்பிடாதிருக்கவேண்டும்.

258. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப் பிரிந்த வூன். அ

செயிர் - மயக்கம். தலைப்பிரிந்த - நீங்கின. காட்சியார் - ஞானிகள்.

மயக்கத்தினின்று நீங்கின ஞானிகள்ஓர்உயிரினின்று நீங்கி வந்த மாமிசத்தின்னார்கள்.

259. அவிசொரிந்தாயிரம் வேட்டலின்றொன்ற
னுயிர் செகுத்துண்ணாமை நன்று. கூ

அவி - நெய். வேட்டல்-யாகம். செகுத்து - கொன்று.

நெய்யை ஊற்றி ஆயிரம் யாகஞ் செய்தலிலும் ஒன்றின் உயிரைப்போக்கி உண்ணாமை நல்லது.

260. கொல்லான் புலாலை மறுத்தானைக்கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். ய

கொல்லான் - கொல்லாதவன்.

. எந்த உயிரையுங் கொல்லாதவனாய்ப் புலாலை உண்ணாதவனை எல்லாவுயிருங் கைகுவித்துத்தொழும்.



௨௬ அறத்துப்பால்.

## 27. தவம்.

261. உற்றநோய் நோன்றலுயிர்க்குறுகண்செய்யாமை
யற்றே தவத்திற்குரு. க

உற்ற - உண்டான. நோன்றல் - சுமத்தல். உறு கண் - துன்பம். அற்றே - அதே. உரு - வடிவு.

உண்டான நோவைப்பொறுத்தலும் உயிர்க்குத்துன்பஞ் செய்யாமையுமாகிய அதே தவத்திற்கு வடிவம்.

262. தவமுந் தவமுடையார்க் காகுமவமதனை
யஃதிலார் மேற்கொள்வது. உ

அவம் - வீண்.

தவமுந் தவத்தையுடையவர்க்கு ஆகும்; அது இல்லாதவர் அதைச்செய்வது வீணாகும்.

263. துறந்தார்க்குத் துப்புரவுவேண்டிமறந்தார்கொ ன்
மற்றையவர்கடவம். ௩

துப்புரவு - உதவி. (கடவம்: கள், தவம்.)

இல்லறத்தார் துறந்தாருக்கு உதவிசெய்ய விரும்பித் தவத் தின் பெலனை மறந்தாரோ.

264. ஒன்னார்த்தெறலுமுவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும். ௪

ஒன்னார் - பகைஞர். தெறல் - அழித்தல். உவந்தார் - விரும்பினவர்.

எண்ணிப்பார்த்தால் பகைஞரை அழித்தலுஞ் சிநேகிதரை உயர்த்தலுந் தவத்தால் உண்டாகும்.

265. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்செய்தவ
மீண்டுமுயலப்படும். ரு

ஆங்கு - படியே.

வேண்டியவைகளை வேண்டியபடியே பெறுதலால் செய்யுந் தவம் இங்கேயும் முயற்சிசெய்யப்படும்.



266. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற்றல்லா
ரவஞ் செய்வாராசையுட் பட்டு. ௬

தவஞ்செய்கிறவர்கள் தங்கள் கருமத்தைச் செய்கிறவர்களாவார். மற்றவர்கள் ஆசையுள்பட்டு வீண்கருமஞ்செய்பவராவார்.

267. சுடச்சுடப் பொன்போலொளிவிடுந்துன்பஞ்
சுடச்சுட நோற்கிற்பவர்க்கு. எ

புடமிடப்புடமிடப்பொன் ஒளிவிடுவதுபோல் துன்பஞ் சுடச்சுட அற தவஞ்செய்பவர்களுக்குப் பிரகாசிக்கும்.

268. தன்னுயிர் தானறப்பெற்றானை யேனைய
மன்னுயிரெல்லாந் தொழும். அ

அற - முழுதும். ஏனைய - மற்றவை.

தன் உயிரைத்தனக்கு உரித்தாகப்பெற்றவனை மற்ற மன்னுயிரெல்லாந் தொழும்.

269. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்றறலைப்பட்டவர்க்கு. கூ

கூற்றம் - இயமன். குதித்தல் - கடத்தல். கைகூடும் - அடையும். (ஆற்றறலை: ஆற்றல், தலை.)

தவபலத்தையடைந்தவர்க்கு எமனுக்கு நீங்குதலும் கைகூடும்.

270. இலர் பலராகிய காரணநோற்பார்
சிலர் பலர் நோலாதவர். ய

இலர் - வறியவர்.

ஏழைகள் அநேகராயிருப்பதற்குக்காரணம் தவசிகள் சிலருந் தவஞ் செய்யாதார் பலருமாயிருப்பதுதான்.



## 28. கூடாவொழுக்கம்.

271. வஞ்சமனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். க

படிறு - பொய்.

வஞ்சகமனத்தானின்பொய் ஒழுக்கத்தைக் (கண்டு) அவன் ஐம்பூதங்களும் உள்ளத்தில் நகைக்கும்.

272. வானுயர் தோற்றமெவன்செய்யுந்தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின் ௨

அறி - அறிந்த. படின் - படிந்தால்.

தான் அறிந்த குற்றத்தினால் தன்மனம் தாழுமானால்வான் போல்உயர்ந்த வேடம் என்னசெய்யும்.

273. வலியினிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று. ௩

வலி - வலிமை. பெற்றம் - பசு.

வலிமையில்லாத நிலைமையையுடையவனின் பலமான தோற்றம் பசு புலியின் தோலைப்போர்த்துக்கொண்டு மேய்தல்போலாம்.

274. தவமறைந்தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட் சிமிழ்த்தற்று. ௪

புதன் - புதர். புள் - பட்சி. சிமிழ்த்து - பிடித்து.

தவவேஷத்தில் மறைந்துகொண்டு பாவங்களைச்செய்தல் வேடன் புதரில் மறைந்து பறவைகளைப்பிடித்தல் போலாம்.

275. பற்றற்றேமென்பார் படிற்றொழுக்கமெற்றெற்
றேதம் பலவுந் தரும். [றென் ௫

பற்று - ஆசை. படிறு - வஞ்சனை. ஏதம் - துன்பம். எற்று - எது.

ஆசையற்றவர்களாயிருக்கிறோமென்பவரின்வஞ்சனையான ஒழுக்கம் அதென்ன அதென்ன என்று (அழும்படி) பலதுன்பங்களையுந் தரும்.



276. நெஞ்சிற்றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணாரில். ௬

மனதில துறவாதவராகித் துறந்தவர்போல் வஞ்சித்து வாழ்கிறவர்களைப்பார்க்கிலும் இரக்கமற்றவரில்லை.

277. புறங்குன்றி கண்டனையரேனுமகங் குன்றி
மூக்கிற் கரியாருடைத்து. எ
குன்றி - குன்றுமணி.

புறம்பே குன்றுமணியைப்போல் செம்மையாய்த் தோற்றினாலும் அகத்தில் குன்றுமணியின் மூக்கினுங் கருமையுள்ளவரை (உலகம்) உடையது.

278. மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். அ
மாண்டார் - மாட்சிமையுள்ளவர்.

குற்றம் மனதிலிருக்க மாட்சிமையுள்ளவராய் நீரிலே முழுகி மறைந்து நடக்கும் மனிதர் அநேகர்.

279. கணைகொடிதியாழ் கோடு செவ்விதாங்கன்ன
வினைபடு பாலாற் கொளல். கூ
கணை - அம்பு. கோடு - கோணல். அன்ன - அப்படிப்பட்ட. படு - செய்கிற. பாலால் - பகுதியால்.

(செவ்வையான) அம்பு கொடியது; கோணலான வீணை இனியசத்தமுள்ளது; அப்படி அவர்கள் செய்கையின் பகுதியால் அவரை அறியவேண்டும்.

280. மழித்தலுநீட்டலும் வேண்டா வுலகம்
பழித்ததொழித்து விடின் ய
மழித்தல் - மொட்டையாக்கல்.

உயர்ந்தோர் பழிப்பதை நீக்கிவிட்டால் (தலைமயிரை) அழித்தலும் நீட்டலும் வேண்டியதில்லை.





## 29. கள்ளாமை.

281. எள்ளாமை வேண்டுவானென்பானெனைத்தொன்

கள்ளாமை காக்க தன்னெஞ்சு. [றுங் க

எள்ளாமை - இகழாமை. கள்ளாமை - திருடாமை.

(முற்றிலை) இகழாமல் வேண்டுபவன் யாதொன்றையுந் திருடாமல் தனமனதைக் காப்பானாக.

282. உள்ளத்தாலுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேமெனல். உ

(எனல் - என், அல்.)

மனத்திலே நினைத்தலுந் தீமையாகும். (ஆதலால்) பிறன் பொருளைத் திருட்டுத்தனமாய்க் கவர்ந்துகொள்ளுவோமென்னாதே.

283. களவினாலாகிய வாக்கமளவிறந்
தாவது போலக் கெடும். ங

களவுசெய்தலினால் உண்டாகிய செல்வம் அளவுகடந்து விர்த்தியாவதுபோல கெட்டுப்போகும்.

284. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். ச

கன்றிய - மிகுந்த. காதல் - ஆசை. வீயா - அழியாத.
விழுமம் - துன்பம்.

களவிலுள்ள மிகுந்தஆசை பலன்கொடுக்கும்போது தொலையாத துன்பத்தைத் தரும்.

285. அருள்கருதியன்புடையராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார் கணில். ரு

பொச்சாப்பு - மறதி.

அருளைவிரும்பி அன்புடையவராதல் பொருளைக் கோரி (பிறர்) சோர்வைப்பார்ப்பவரிடத்தில் இல்லை.



286. அளவின்கணின்றொழுகலாற்றார் களவின்கட்
கன்றிய காதலவர். சு

(கணின்று - கண்ணின்று.)

களவில் அதிக ஆசையுள்ளவர் ஞான வழியிலேநின்று நடக்கமாட்டார்.

287. களவென்னுங்காரறி வாண்மை யளவென்னு
மாற்றல புரிந்தார் கணில். எ

கார் - இருண்ட. அளவு - அளந்தல்.

களவென்னும் இருண்ட அறிவீனம் அளந்தலென்னும் பெருமையை விரும்பினவரிடத்திலில்லை.

288. அளவறிந்தார் நெஞ்சத்தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. அ

கரவு - வஞ்சனே.

ஞான அளவையறிந்தவரின் நெஞ்சில் அறம் நிற்கிறதுபோல் களவையறிந்தவர் நெஞ்சில வஞ்சனே நிற்கும்.

289. அளவல்லசெய்தாங்கே வீவர்களவல்ல
மற்றையதேற்றாதவர். கூ

வீவா - கெடுவா. தேறாதவர் - அறியாதவர்.

களவு அல்லாத மற்றவைகளே அறியாதவர் அளவுஅல்லாதவைகளேச்செய்து அப்போதே கெடுவார்.

290. கள்வார்க்குத் தள்ளுமுயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேளுலகு. ம

உயிர்நிலை - சரீரம்.

திருடருக்கு அவர்கள் உடம்புந் தவறும். திருடாதவரைத் தேவலோகந் தள்ளிவிடாது.





## 30. வாய்மை.

291. வாய்மையெனப்படுவதியாதெனின் யாதொன்றுந்
தீமையிலாத சொலல். க

வாய்மை - உண்மை.

உண்மை யெனப்படுவது ஏதென்றால் கொஞ்சமாகிலுந் தீமையில்லாதவைகளைச் சொல்லுதலாம்.

292. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின். உ

பொய்ம்மை - பொய். புரை - குற்றம்.

குற்றமற்ற நன்மையைக் கொடுக்குமாகில் பொய்யானதும் மெய்க்கு ஒப்பாகும்.

293. தன்னெஞ்சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச்சுடும். ௩

ஒருவன் தன் மனமறிந்ததைப் பொய்யாதிருப்பானாக. பொய் சொன்னால் தன்மனது தன்னைச்சுடும்.

294. உள்ளத்தாற் பொய்யாதொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லாமுளன். ௪

ஒழுகின் - நடந்தால்.

ஒருவன் தன் மனதறியப் பொய்சொல்லாமல் நடப்பானாகில் அவன் உலகத்தாரின் எல்லாமனங்களிலும் இருப்பான்.

295. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய்வாரிற் றலை. ௫

ஒருவன் மனத்தோடு பொருந்த உண்மையைச் சொல்வானாகில் அவன் தவத்தோடு தானஞ்செய்வாரிலுந் தலையாவான்.



296. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும். ௬

அன்ன - ஒத்த. எய்யாமை - வருந்தாமை.

பொய் சொல்லாமைக்கு ஒப்பான புகழில்லை. அது (உடம்பு) வருந்தாமல் எல்லாஅறமுந் தரும்.

297. பொய்யாமை பொய்யாமை யாற்றினறம்பிற
செய்யாமை செய்யாமைநன்று. எ

ஒருவன் பொய் சொல்லாமல் இருநதால் பொய்யாமை யானது அறம்; வேறுகாரியங்களைச்செயயாமலிருந்தால செய்யாமை நல்லது.

298. புறந்தூய்மை நீரானமையுமகந் தூய்மை
வாய்மையாற் காணப்படும். அ

உடம்பின் சுத்தம் நீராலுண்டாகும்; மனச்சுத்தம் உண்மையால் அறியப்படும.

299. எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளககே விளக்கு. கூ

பெரியோருக்கு எல்லாவிளக்கும் விளக்கல்ல; பொய்யாமையாகிய விளக்கே விளக்காம்.

300. யாமெய்யாக் கண்டவற்றுளில்லையெனைத் தொன்
வாய்மையினல்ல பிற. [றும் ம

எனைத்து - எது.

நாம் மெய்யாய்க் கண்டவைகளில உண்மையைப்பார்க்கிலும் நல்லவையாகிய பிறகாரியங்கள் யாதொன்றுமில்லை.





## 31. வெகுளாமை.

301. செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பானல்லிடத்
காககிலென் காவாக்காலென். [துக் க

செல் - போகும். என் - என்ன.

சினஞ் செல்லுமிடத்தில் காப்பவன் அதைக்காப்பவனாவான். செல்லாவிடத்தில்அதைக் காததாலென்ன. காக்காவிட்டாலென்ன.

302. செல்லாவிடத்துச்சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற. ௨

செல்லாத விடத்தில் கோபம் தீமையாம்; செல்லுமிடத்தில் அதைப்பார்க்கத் தீமையுடையது வேறொன்றுமில்லை.

303. மறத்தல்வெகுளியை யார்மாட்டுந்தீய
பிறத்தலதனான் வரும். ௩

வெகுளி - கோபம்.

யாவரிடத்திலுங் கோபத்தைமறப்பாயாக, அதினால் தீயவைகள் உண்டாகும்.

304. நகையு முவகையுங் கொல்லுஞ்சினத்திற்
பகையுமுளவோ பிற. ௪

உவகை - மகிழ்ச்சி.

நகைப்பையும் மகிழ்ச்சியையுங் கெடுக்கும் கோபத்தைப் பார்க்கிலும் வேறுபகையுமுண்டா.

305. தன்னைத்தான் காக்கிற்சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். ௫

ஒருவன் தன்னைத்தான் காக்க நினைக்கில் கோபம் வாராமல் காக்கக்கடவான். காக்காவிட்டால் கோபம் அவனையே அழிக்கும்.



306. சினமென்னுஞ்சேர்ந்தாரைக்கொல்லியினமென்னு
மேமப்புணையைச் சுடும். ௬

சேர்ந்தாரைக்கொல்லி - நெருப்பு. ஏமம் - காவல்.
புணை - கப்பல்.

கோபம் என்னும் நெருப்பு சுற்றம் என்னுங் காவல் கப்பலையுஞ்சுடும்.

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன்கேடு
நிலத்தறைந்தான் கைபிழையாதற்று. ௭

நிலத்தில் அறைந்தவனின் கைதப்பாமல் படுவதுபோல்

கோபத்தைப் பொருளென்று கொண்டவனின் கேடு தப்ப மாட்டாது.

308. இணரொரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. அ

இணர் - சுடர். எரி - தீ. தோய்வு - சுற்றுதல். வெகு ளாமை - கோபமில்லாமை.

பலசுடர்களையுடைய தீ சுற்றிக்கொள்வதுபோல் ஒருவன் தீமைசெய்தாலும் கோபமில்லாமை கூடுமாகில் நல்லது.

309. உள்ளியவெல்லாமுடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின். கூ

உள்ளான் - நினையான்.

ஒருவன் தன் உள்ளத்தில் கோபத்தை நினையானாகில் அவன் நினைத்ததெல்லாம் உடனே பெறுவான்.

310. இறந்தாரிறந்தாரனையர் சினத்தைத்
துறந்தார்துறந்தார்துணை. ய

இறந்தார் - மிகுத்தவர். அனையர் - ஒப்பானவர்.

கோபத்தில் மிகுத்தவர் செத்தவருக்கு ஒப்பாவார். கோபத்தைவிட்டு விட்டவர் துறவிகளுக்கு ஒப்பாவார்.



கூ௨ அறத்துப்பால்.

## 32. இன்னாசெய்யாமை.

311. சிறப்பீனுஞ் செல்வம்பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார்கோள். க

இன்னா - துன்பம். கோள் - கொள்கை.

சிறப்பைக்கொடுக்குஞ் செல்வத்தைப்பெற்றாலும் பிறர்க் குத் துன்பஞ் செய்யாமை குற்றமற்றவரின் கொள்கையாம்.

312. கறுத்தின்னா செய்தவக்கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். உ

கறுத்து - கோபித்து.

ஒருவன் கோபித்துத் துன்பப்படுத்தின அவ்விடத்திலும் அதற்குப்பதிலுக்குப்பதில் செய்யாமை மாசற்றவரின் கொள்கையாம்.

313. செய்யாமற் செற்றார்க்குமின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும். ௩

செற்றார் - பகைவர். உய்யா - தப்பாத. விழுமம் - துன்பம்.

முகாந்திரமில்லாமல் பகைக்கிறவர்களுக்குந் தீமைகளைச் செய்தபின் அது தப்பாததுன்பத்தைத்தரும்.

314. இன்னாசெய்தாரை யொறுத்தலவர் நாண
நன்னயஞ் செய்து விடல். ௪

ஒறுத்தல் - தண்டித்தல். நயம் - இனிமை.

துன்பஞ் செய்தவர்களைத் தண்டித்தலாவது அவர்கள் வெட்கும்படி அவர்களுக்கு இனிமையானவைகளைச் செய்து விடுதலாம்.

315. அறிவினானாகுவதுண்டோ பிறிதினோய்
தந்நோய் போற்போற்றாக்கடை. ௫

பிறிது - வேறு. போற்றாக்கடை - எண்ணாதவிடத்தில்

மற்றவைகளுக்குண்டான வருத்தத்தைத் தமது வருத்தம்போல் எண்ணாதவிடத்தில் அறிவினாலாகும் பயன் என்ன.



316. இன்னாவெனத்தானுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். ௬

துன்னாமை - பொருந்தாமை.

இவை துன்பந்தருமென்றுதான் அறிந்தவைகளைப் பிறருக்குச் செய்யாமல் நீக்கிவிடவேண்டும்.

317. எனைத்தானுமெஞ்ஞான்றும்யார்க்கு மனத்தானு
மாணு செய்யாமை தலை. எ

மாணு - துன்பம்.

எக்காலத்திலும் யார்க்கும் மனம் பொருந்தி எவ்வளவா கிலுந் தீமைசெய்யாமை முதன்மையாம்.

318. தன்னுயிர்க்கின்னாமை தானறிவானென்கொலோ
மன்னுயிர்க்கின்னா செயல். அ

தன்னுயிர்க்குத் துன்பஞ் செய்யுமவைகளை அறிபவன் மற்றஉயிர்களுக்குத் துன்பஞ் செய்வானேன்.

319. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். கூ

பிறருக்குத்துன்பங்களை முற்பகலில் செய்தால் தனக்கு இனிமையல்லாதவைகள் பிற்பகலில் தானே வரும்.

320. நோயெல்லா நோய்செய்தார் மேலவாநோய்செய்
நோயின்மை வேண்டுபவர். [யார் ய

துன்பம் எல்லாந் துன்பஞ் செய்தவர்க்கு வரும். துன்ப மின்மையை விரும்புகிறவர் துன்பஞ் செய்யார்.



KURAL I. 5

கஉ
கூ துறவறவியல்.

## 33. கொல்லாமை.

321. அறவினையாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாந் தரும். க

கோறல் - கொல்லுதல்.

தர்மச்செய்கை ஏதென்றால் கொல்லாமையாம். கொல்லு தல் பாவச்செய்கைகள் யாவையுந் தரும்.

322. பகுத்துண்டு பல்லுயிரோம் புதனூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. ௨

பங்கிட்டுச் சாப்பிட்டுப் பலஉயிர்களையுங் காப்பாற்றல் நூலோர் தொகுத்தவற்றுளெல்லாந் தலைமையாம்.

323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. ௩

சார - நிற்க.

ஒப்பற்றதாக நல்லது கொல்லாமை. அதற்குப்பின் பொய் யாமை நன்று.

324. நல்லாறெனப் படுவதியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி. ௪

சூழும் - நினைக்கும்.

நல்லவழி என்னப்படுவதியாதென்றால் யாதொன்றையுங் கொல்லாதிருக்க நினைக்கும் வழியாம்.

325. நிலையஞ்சி நீத்தாருளெல்லாங் கொலை யஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. ௫

நிலைக்குப் பயந்து துறந்தவர்களெல்லாருள்ளுங் கொலைக்கு அஞ்சிக் கொல்லாமையை நினைப்பவன் உயர்ந்தோன்.



326. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்
செல்லா துயி ருண்ணுங்கூற்று. [நாண்மேற் ௬

கூற்று - இயமன்.

உயிரைக் கொண்டுபோகும் எமன் கொல்லாமையைச் சிறந்ததாக எண்ணி நடப்பவனின் ஆயுள் நாள்மேல் செல்ல மாட்டான்.

327. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான் பிறி
தின்னுயிர் நீக்கும்வினை. எ

நீப்பினும் - போனாலும்.

தன் உயிர்போனாலுந் தான்வேறொன்றின் இனிய உயிரைப்போக்குந் தொழிலைச் செய்யாதிருப்பானாக.

328. நன்றாகுமாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகுமாக்கங் கடை. அ

(யாகத்தில் கொன்றால்) நன்மையாகுஞ் செல்வம் பெரிதாகினுஞ் சான்றோர்க்குக் கொல்லுதலால் உண்டாகும் ஆக்கம் இழிவானது.

329. கொலைவினையராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவாரகத்து. கூ

வினையர் - தொழிலையுடையவர். புலை - நீசம்.
புன்மை - இழிவு.

கொலைத் தொழிலைச் செய்யும் மனிதர் அதின் இழிவை அறிபவரின் மனதில் நீசத்தொழிலுடையவராய்த் தோற்றுவார்.

330. உயிருடம்பினீக்கியா ரென்பர் செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கையவர். ய

செயிர் - நோய். தீ - கெட்ட.

நோய் உடம்புடனே வறுமையோடு கூடிய வாழ்வையுடையவரை உயிரை உடம்பிலிருந்து நீக்கினவரென்பார்கள்.







## 34. நிலையாமை.

331. நில்லாதவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறிவாண்மை கடை. ௧

புல்லறிவு - அற்பப்புத்தி. கடை - இழிவு.

நிலையற்றவைகளை நிலையுள்ளவைகளென்று நினைக்கும் அற்பப்புத்தி இழிவானது.

332. கூத்தாட்டவைக் குழாத்தற்றே பெருஞ்செல்வம்
போக்குமது விளிந்தற்று. ௨

அவை - சபை. குழாம் - கூட்டம். விளிந்து - கலைந்து.

அதிகச் செல்வஞ் சேருதல் கூத்தாடுகிற சபையில் கூட்டங் கூடுகிறதுபோலாம். அச்செல்வம் போகுதல் கூட்டங் கலைவது போலாம்.

333. அற்கா வியல்பிற்றுச் செல்வமது பெற்றா
லற்குப வாங்கே செயல். ௩

அற்கா - நிலையாத. அற்குப - நிலையுள்ளவைகள்.

செல்வம் நிலையாத தன்மையையுடையது. அதைப் பெற்றால் நிலையுள்ளதாகிய தர்மத்தை உடனே செய்யக்கடவாய்.

334. நாளெனவொன்று போற் காட்டியுயிரீரும்
வாளதுணர்வார்ப் பெறின். ௪

ஈரும் - அறுக்கும்.

நாளென்று தன்னை ஒருபொருள்போல் காட்டினாலும் அது சீவனை அறுக்கும் வாள் என்பதை அறிபவர்களைப்பெற்றால் நன்மையாம்

335. நாச்செற்றுவிக்குண் மேல் வாராமுன்னல்வினை
மேற்சென்று செய்யப்படும். ௫

செற்று - அடக்கி. மேற்சென்று - சீக்கிரமாய்ப்போய்.

நாவை அடக்கி விக்கல் எழுவதற்குமுன்னமே நல்வினை சீக்கிரஞ் செய்யப்படும்.

336. நெருநலுள னொருவனின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ்வுலகு. ௬

நெருநல் - நேற்று.

நேற்றிருந்தவன் இன்றைக்கில்லை யென்று சொல்லும் பெருமையை இவ்வுலகுடையது.

337. ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப
கோடியுமல்ல பல. ௭

கருதுப - நினைப்பார்கள்.

ஒரு சணப்பொழுதும் வாழ்வதை அறியாதவர்கள் கோடியளவு மாத்திரமல்ல அதிலும் அதிகமானவைகளை நினைப்பார்கள்.

338. குடம்பை தனித்தொழியப் புட் பறந்தற்றே
யுடம்போடுயிரிடை நட்பு. ௮

குடம்பை - முட்டை.

சரீரத்தோடு உயிருக்குண்டாயிருக்கிற சிநேகம் பறவை முட்டையைத் தனித்து விட்டுப் பறந்துபோனதுபோலாம்.

339. உறங்குவது போலுஞ் சாக்காடுறங்கி
விழிப்பது போலும பிறப்பு. ௯

சாக்காடு - சாவு.

மரணம் தூக்கம்போலும் பிறப்பு தூங்கி விழிப்பதுபோலும்.

340. புக்கிலமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சிலிருந்த வுயிர்க்கு. ௰

புக்கில் - வீடு. துச்சில் - ஒதுக்குக்குடி.

உடம்பில் ஒதுக்குக்குடியிருந்த உயிர்க்கு எப்போதும் இருக்கும்படியான வீடு அமைந்ததில்லையா.



341. யாதனின் யாதனி னீங்கியானோத
லதனினதனினிலன். க
நோதல் - துன்பம்.
ஒருவன் என்னென்னத்தினின்று நீங்கினானோ அவைக ளால துன்பத்தை யடையான்.

342. வேண்டினுண்டாகத் துறக்க துறந்த பி
னீண்டியற் பால பல. உ
துறந்த பின்பு இவ்வுலகிலுண்டாகும் இன்பங்கள் அநே கம். அவைகள் உண்டாக விரும்பினால் துறக்கக்கடவாய்.

343. அடல்வேண்டு மைந்தின்புலத்தை விடல்வேண்
வேண்டிய வெல்லாமொருங்கு. [டும் ௩
அடல் - கெடுத்தல். ஒருங்கு - ஒருமிக்க.
ஐம்புலன்களையுங் கெடுத்தல் வேண்டியது. வேண்டியவை களையெல்லாம் ஒருமிக்கவிடவேண்டும்.

344. இயல்பாகு நோன்பிற்கொன்றின்மையுடைமை
மயலாகு மற்றும்பெயர்த்து. ச
நோன்பு - தவம். பெயர்த்து - விட்டுவிடல்.
தவத்துக்கு ஒரு பற்றுமில்லாதிருக்கை இயல்பாகும். பற் றுடைமை மயக்கமாகித் தவத்தை நீக்கும்.

345. மற்றுந்தொடர்ப்பாடெவன் கொல் பிறப்பறுக்க
லுற்றார்க்குடம்பு மிகை. ரு
தொடர்ப்பாடு - பற்று. மிகை - பாரம்.
பிறவியை நீக்கிப்போட முயற்சிப்பவர்க்கு உடம்பும் பா ரமாம். ஆதலால் பற்று அவர்களை என்னசெய்யும்.

அறத்துப்பால். ௬௯

346. யானெனதென்னுஞ் செருக்கறுப்பான்வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும். சு
புகும் - புகுவான்.

நான் எனது என்னும் மயக்கத்தை அறுப்பவன் தேவர்க்கும் அடைவதற்கரிதாகிய உலகத்தில் பிரவேசிப்பான்.

347. பற்றிவிடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றிவிடாஅதவர்க்கு. எ

பற்றினை - ஆசையை.

பற்றுக்களைப் பற்றிக்கொண்டு விடாதவர்களைத் துன்பங்கள் பற்றிக்கொண்டு விடாது.

348. தலைப்பட்டார் தீரத்துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவர். அ

தீர - முழுவதும். தலைப்பட்டார் - அடைந்தவர்.

முழுதுந் துறந்தவர் முத்தியை யடைவார். மற்றவர்கள் மயங்கி வலையில் அகப்பட்டவராவார்.

349. பற்றற்றகண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப்படும். கூ

அறுக்கும் - நீக்கும்.

பற்று அற்றபோது பிறப்பு நீக்கும். அது அறுதபோது நிலையாமை காணப்படும்.

350. பற்றுக பற்றற்றான் பற்றினையப்பற்றைப்
பற்றுக பற்றுவிடற்கு. ய

கடவுளின் முத்தி வழியைப் பற்றக்கடவாய். உன் ஆசைகள் நீங்கும்படி அப்பற்றைப் பற்றக்கடவாய்.





## 36. மெய்யுணர்தல்.

351. பொருளல்லவற்றைப்பொருளென்றுணரு
மருளானா மாணாப் பிறப்பு. க

பொருளல்லாதவைகளை மெய்ப்பொருளென்று நினைக்கும் மயக்கத்தால் மாட்சிமையற்ற பிறவி உண்டாகும்.

352. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சியவர்க்கு. ௨

மயக்கம் நீங்கின மெய்யறிவுடையவர்களுக்கு இருள் நீங்கின இன்பமுண்டாகும்.

353. ஐயத்தினீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணியதுடைத்து. ௩

நணியது - சமீபமானது.

சந்தேகத்திலிருந்து நீங்கித் தெளிந்தவர்களுக்குப் பூமியிலும் வானஞ் சமீபமாம்.

354. ஐயுணர்வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர்வில்லாதவர்க்கு. ௪
எய்தியக்கண்ணும் - வசப்பட்டாலும்.

மெய்ஞ்ஞானமற்றவர்களுக்கு ஐம்புலன்களும் வசப்பட்டாலும் பிரயோசனம் இல்லை.

355. எப்பொருளெத்தன்மைத்தாயினுமப்பொருண்
மெய்ப்பொருள் காண்பதறிவு. ௫

எந்தப் பொருள் எந்தத் தன்மையை யுடையதாயிருந்தாலும் அப்பொருளினின்றும் மெய்ப்பொருளைக் காண்பது அறிவாகும்.

அறத்துப்பால். ௭௩

356. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. ௬

தலைப்படுவர் - சிறந்தவராவார். நெறி - வழி.

இவ்வுலகில் படித்து மெய்ப்பொருளைக்கண்டறிந்தவர்கள் இவ்வுலகிற்குத்திரும்பிவராதவழியை அறிவார்கள்.

357. ஓர்த்துள்ளமுள்ளதுணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. எ

ஓர்த்து - ஆராய்ந்து. ஒருதலையா - நிச்சயமாக.

ஒருவனின் மனம் நிச்சயமாய் மெய்ப்பொருளை ஆராய்ந்து உணர்ந்தால் அவன் பிறத்தலை மறுபடியும் நினைக்கவேண்டிய தில்லை.

358. பிறப்பென்னும்பேதைமை நீங்கச்சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்பதறிவு. அ

செம்பொருள் - மெய்ப்பொருள்.

பிறப்பென்னும் அஞ்ஞானம் நீங்கச்சிறப்பென்னும் மெய்ப் பொருளைக் காண்பதே அறிவாம்.

359. சார்புணர்ந்துசார்புகெடவொழுகின்மற்றழித்துச்
சார்தரா சார்தருநோய். கூ

சார்பு - பற்று. சார்தரா - சேராது.

ஒருவன் மெய்ப்பொருளையறிந்து ஆசைநீங்க நடந்தால் அவனைச் சேரவிருக்குந துன்பங்கள் திரும்பச் சேராவாம்.

360. காமம் வெகுளி மயக்கமிவை மூன்ற
னாமங் கெடக் கெடு நோய். ம

காமம், கோபம், மயக்கமாகிய இம்மூன்றின் பேருங் கெட்டால் துன்பமுங்கெடும்.





## 37. அவாவறுத்தல்.

361. அவாவென்பவெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. க

அவா - ஆசை. தவா - கெடாத.

எல்லாவுயிர்களுக்கும் எக்காலத்திலும் முடியாத பிறப்பை விளைவிக்கும் விதை ஆசை என்று சொல்லுவார்கள்.

362. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். உ

ஒருவன் ஒன்றை விரும்பினால் பிறவாமையை விரும்ப வேண்டும். இச்சியாமையை விரும்ப அது வரும்.

363. வேண்டாமையன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டுமஃதொப்பதில். ௩

இவ்வுலகில் விரும்பாமையைப் போலுஞ் சிறந்த செல்வமில்லை. அவ்வுலகத்திலும் அதுக்குச் சமதையானதில்லை.

364. தூஉய்மை யென்பதவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். ௪

சுத்தமென்பது ஆசையின்மையாம். அது மெய்ம்மையை ஆசிக்க வரும்.

365. அற்றவரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாகவற்றதிலர். ௫

ஆசையற்றவர் அற்றவரென்னப்படுவார். மற்றவர்கள் அப்படி அற்றவர்கள் அல்ல.

அறத்துப்பால். எ௫

366. அஞ்சுவதோரு மறனே யொருவனை
வஞ்சிப்பதோரும்அவா. ௬

(ஒரும், அசைநிலை.)

ஒருவனை மோசப்படுத்துவது ஆசை; அதற்குஅஞ்சிக்காக்க வேண்டியது தர்மமே.

367. அவாவினையாற்ற வறுப்பிற் றவாவினை
தான் வேண்டுமாற்றான் வரும். எ

அறுப்பில் - நீக்கினால்.

ஒருவன் ஆசையை முழுவதும் நீக்கினால் கெடாமைக்கு ஏதுவாகிய செயல்தான் விரும்பும் வழியால் உண்டாகும்.

368. அவாவில்லார்க்கில்லாகுந் துன்பமஃதுண்டேற்
றவாஅது மேன்மேல் வரும். அ

உண்டேல் - உண்டானால்.

ஆசையற்றவர்களுக்குத் துன்பமில்லை. ஆசை இருந்தால் துன்பம் ஒழியாமல் மேலும் மேலும் வரும்.

369. இன்பமிடையறாதீண்டுமவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். க

துன்பங்களுக்குள் துன்பமாகிய ஆசைகெட்டால் இவ்வுலகிலும் இன்பம் மத்தியில் நீங்காதிருக்கும்.

370. ஆராவியற்கை யவா நீப்பினந்நிலையே
பேரா வியற்கை தரும். ம

ஆரா - நிரம்பாத. இயற்கை - தன்மை. பேரா - மாறாத. நீப்பின் - விட்டால்.

ஒருவன் நிரம்பாத தன்மையையுடைய ஆசையை விட்டு விடுவானானால் அது அப்போதே மாறாத தன்மையைக்கொடுக்கும்.





## 38. ஊழ்.

371. ஆகூழாற்றோன்று மசைவின்மைகைப்பொருள்
போகூழாற்றோன்றுமடி. க

ஊழ் - விதி. அசைவின்மை - முயற்சி. மடி - சோம்பல்.

முயற்சி ஆகும்விதியினால் உண்டாகும்; சோம்பல் கையிலுள்ள பொருள் போகும் விதியினால் தோன்றும்.

372. பேதைப்படுக்கு மிழவூழறிவகற்று

பேதைப்படுக்கும் - அறியாமையாக்கும். ஆகல்-ஆகும்.

இழத்தற்கு ஏதுவாகிய ஊழ்அறியாமையைக் கொடுக்கும். ஆகும் ஊழ்உண்டாகும்போது அறிவை அதிகப்படுத்தும்.

373. நுண்ணிய நூல்பல கற்பினுமற்றுந்தன்
　　னுண்மை யறிவே மிகும்.　　　　　　　　　　ங

நுட்பமாகிய அநேக நூற்களைப் படித்தாலுந் தனது ஊழினாலாகிய அறிவு மேற்படும்.

374. இருவேறுலகத்தியற்கை திருவேறு
　　தெள்ளியராதலும் வேறு.　　　　　　　　　　ச

　　வேறு - பங்கு. தெள்ளியராதல் - அறிவுடையவராதல்.

உலகத்தன்மை இரண்டுபங்கு; செல்வமுடையவராதல் ஒன்று, அறிவுடையவராதல் ஒன்று.

375. நல்லவை யெல்லாஅந்தியவாந் தியவு
　　நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.　　　　　　　　ரு

செல்வத்தை உண்டாக்குவதற்கு நல்லவை யெல்லாந் தீயவையாகும்; தீயவை எல்லாம் நல்லவையாகும்.

அறத்துப்பால்,　　　　　　　　　　எஎ

376. பரியினுமாகாவாம் பாலல்ல வுய்த்துச்
　　சொரியினும் போகா தம.　　　　　　　　　　சு

　　பரியினும் - வருந்தினும். பால் - ஊழ். உய்த்து - கொண்டுபோய்.

ஊழினால் அல்லாமல் தம்முடைய வைகளை வருந்திக்காப் பாற்றினும் ஆகாது; தம்முடையவைகளைச் சொரிந்து வெளியே கொட்டிவிட்டாலும் போகாது.

377. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
　　தொகுத்தார்க்குந் துய்த்தலரிது.　　　　　　　　எ

　　வகுத்தான் - கடவுள். தொகுத்தார் - சேர்த்தவர்.
　　துய்த்தல் - அநுபவித்தல்.

கோடிப்பொருளைச் சேர்த்தவர்க்குக் கடவுள் அமைத்த அமைப்பன்றி அநுபவித்தல் அரிதாகும்.

378. துறப்பார் மற் றுப்புரவில்லாருறற் பால
ஊட்டா கழியு மெனின். அ

துப்புரவு - அநுபவிப்பு. ஊட்டா - அடையாமல். (மன், அசைநிலை.)

அடையுந் தன்மையையுடையவைகள் அடையாமல் நீங்குமானல் அநுபவித்தல் இல்லாதவர் துறப்பார்.

379. நன்றுங்காலநல்லவாக் காண்பவரன்றுங்கா
லல்லற் படுவதெவன். கூ

நல்இன்பத்தைக் கொடுக்குங் காலத்தில் அவைகளை நல்லவைகளாக அநுபவிப்பவர் தீமையாகும் போது துன்பப்படுவானேன்.

380 ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான் முந்துறும். ம

வலி - வல்லமை. முந்துறும் — முந்திக்கொள்ளும்.

ஊழைப்பார்க்கிலும் அதிகப்பலமுடையது எவை இருக்கின்றன. வேறொன்று (முந்த) நினைத்தாலுந் தான் முந்திக் கொள்ளும்.

அறத்துப்பால்.
முற்றிற்று.



# அறத்துப்பால்.

---

## அதிகாரவகராதியட்டவணை.

பக்கம். பக்கம்.



## அறிக்கை.

இதின் இரண்டாம் பங்காகிய பொருட்பால் சீக்கிரத்தில் அச்சடிக்கப்படும்.



# குறள்.

# பொருட்பால்.



## 39. இறைமாட்சி.

381. படை குடி கூழமைச்சு நட்பரணாறு
முடையா னரசரு ளேறு. ௧

குடி - நாடு. கூழ் - பொருள். அமைச்சு - மந்திரி. அரண் - கோட்டை. ஏறு - ஆண்சிங்கம்.

சேனை, நாடு, பொருள், மந்திரி, நட்பு, கோட்டை ஆகிய ஆறையுமுடையவன் இராசாக்களில் ஆண்சிங்கமாவான்.

382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு. ௨

ஈகை - கொடுத்தல். ஊக்கம் - மனவெழுச்சி. எஞ்சாமை - குறையாமை. வேந்தன் - அரசன்.

பயப்படாமை, கொடுத்தல், அறிவு, மனவெழுச்சி ஆகிய இந்த நான்குங் குறையாமை அரசர்க்கு இயல்பாம்.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு. ௩

தூங்காமை - சோம்பலின்மை.

சோம்பலின்மை, கல்வி, துணிவுடைமை ஆகிய இம்மூன்றும் நிலத்தை ஆளுகிறவருக்கு நீங்காமலிருக்கவேண்டும்.

384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. ௪

இழுக்காது - தவறாது. மறம் - வீரம்.

அறத்தினின்று தவறாமல் தகாதவைகளை நீக்கி வீரத்திலிருந்து நீங்காத மானமுடையவன் அரசனாவான்.

385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. ரு

இயற்றல் - சம்பாதித்தல். ஈட்டல் - பெருக்கல்.

பொருளைச்சம்பாதிக்கவும் பெருக்கவும் காக்கவும் காத்ததைச் செலவுசெய்யவுங் கூடியவனே அரசன்.



386. காட்சிக்கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம். சு

மீ - மேலாக.

அரசன் காணுதற்கு எளியவனும் கடுஞ்சொல் சொல்லாதவனுமாயிருந்தால் (உலகம்) அவன நிலத்தை உயர்த்திச் சொல்லும்.

387. இன்சொலாலீத்தளிக்க வல்லாற்குத் தன்சொ
ருள் கண் டனைத்திவ் வுலகு. [லாற் எ

ஈத்து - கொடுத்து. அளிக்க - காப்பாற்ற. கண்டனைத்து - விரும்பின அளவு.

இனியசொல்லோடு கொடுத்துக் காப்பாற்றவல்லவனுக்கு இவ்வுலகம் தன் சொல்லினால் தான் விரும்பும் அளவு ஆகும்.

388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். அ

இறை - கடவுள்.

நீதியை நடபபிததுத (தன் குடிகளைக்) காபபாற்றும் அரசன் மனிதருக்குத் தேவனென்று எண்ணபபடுவான.

389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
கவிகைக் கீழ்த்தங்கு முலகு. [வேந்தன் கூ

கைப்ப - கசப்பானவை. கவிகை - குடை.

காதுக்குக் கசப்பாயிருக்குஞ் சொல்லைப் பொறுத்துக் கொள்ளும நற்குணமுடைய அரசனின் குடைக்கீழ் உலகம் (சந்தோஷமாய்த்)தங்கும்.

390. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானும் வேந்தர்க் கொளி. ௰

அளி - அருள்.

கொடுத்தல், அருள், செங்கோல், குடிகளைக் காப்பாற்றலாகிய நான்கையுமுடையவன் அரசர்க்கு விளக்காவான்.

6*



## 40. கல்வி.

391. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. ௧

கசடு - பழுது.

ஒருவன் படிப்பவைகளைப் பழுதறப்படிக்கக்கடவன். படித்தபின்பு அதற்குத் தகுந்தபடி நிற்கக்கடவன்.

392. எண்ணென்பவேனை யெழுத்தென்ப விவ்விரண்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. [டுங் ௨

ஏனை - மற்ற.

கணிதநூலும் இலக்கண நூலுமாகிய இரண்டையும் வாழுமுயிர்க்குக் கண்ணென்று அறிந்தோர் சொல்லுவார்கள்.

393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். ௩

படித்தவர் கண்களுடையவ ரெனப்படுவார்; படியாதவர்கள் முகத்தில் இரண்டு புண்களுடையவர்.

394. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். ௪

உவப்ப - மகிழ. தலைக்கூடி - சிநேகஞ்செய்து. உள்ள - நினைக்க.

கற்றறிந்தவர்தொழில் (சனங்கள்) மகிழும்படி சிநேகஞ் செய்து அவர்கள் நினைத்துவருந்தும்படி பிரிதலாகிய அத்தன் மையையுடையது.

395. உடையார்மு னில்லார் போலேக் கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். ௫

ஏக்கற்றும் - தாழ்மையாய் நிற்றும்.
செல்வமுடையவர்முன்னே ஏழைகள்போல்தாழ்ந்துநின் றுங் கற்றவராவார். கல்லாதவர் இழிந்தவராவார்.

பொருட்பால். அ

396. தொட்டனைத் தூறு மணற்கேணிமாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. ௬

தொட்ட - தோண்டின, அனைத்து - அவ்வளவு.
மணலிலுள்ளகேணி தோண்டின அளவு சுரக்கும். மனி ருக்கு அறிவு கற்ற அளவு ஊறும்.

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு. ௭

(ஆல், அசைநிலை.)
படித்தவனுக்கு எந்தநாடும் எந்த ஊருஞ்சொந்தமாகும். ஒருவன் சாகுமளவும் படியாதகாரணமென்ன.

398. ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மே மாப் புடைத்து. ௮

ஒருமைக்கண் - ஒரு பிறப்பில். ஏமாப்பு - உதவி.
ஒருவன் ஒருபிறப்பில் படித்தபடிப்பு அவனுக்கு எழு பிறப்பிலும் உதவியாகும்.

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். ௯
இன்புறுவது - இன்பமாயிருந்து.

தமக்கு இன்பமான கல்வி உலகத்திற்கும் இன்பமாயிருக்கக் கண்டு கற்றறிந்தவர்கள் அதை ஆசிப்பார்கள்.

400. கேடில் விழுச்செல்வங் கல்வியொருவற்கு
மாடல்ல மற்றை யவை. ௰

விழு - மேலான. மாடு - ஆஸ்தி.

ஒருவனுக்குக் கெடுதலற்ற மேலான செல்வம் கல்வி. மற்ற வஸ்துக்கள் ஆஸ்தியல்ல.





## 41. கல்லாமை.

401. அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். ௧

அரங்கு - வகுப்பிடம். வட்டு - சூது. கோட்டி - சபை.

நிறைந்த நூலின்றிச் சபையில் பேசுதல் வகுப்பிடம் இல்லாமல் சூது ஆடினது போலாகும்.

402. கல்லாதான்சொற்கா முறுதல் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற்றற்று. ௨

காமுறுதல் - ஆசித்தல்.

படியாத ஒருவன் (சபையில்) பேச ஆசித்தல் இரண்டு கொங்கைகளுமற்றவள் பெண்தன்மையை இச்சித்தல் போலாகும்.

403. கல்லாதவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். ௩

நனி - மிகவும்.

படியாதவரும் படித்தவர்முன் பேசாதிருக்கப் பெறுவாரானால் மிகவும் நல்லவராவார்.

404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். ௪

ஒட்பம் - அறிவு. கழிய - மிக.

படியாதவன் அறிவு மிக நன்றாயிருந்தாலும் அறிவுடையவர்கள் அதை அங்கீகரியார்கள்.

405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். ௫

தகைமை - மதிப்பு. தலைப்பெய்து - கூட்டத்தில் சேர்ந்து. சொல்லாட - பேச. சோர்வுபடும் - கெடும்.

படியாதொருவனின் மதிப்பு கற்றவர்களின் சபையில் பேசக் கெடும்.

[illegible]

406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். ௬

உளர் - இருக்கிறவர். மாத்திரையர் - அளவினர். பயவா - விளையாத. களர் - உவர்நிலம்.

கல்லாதவர் இருக்கிறாரென்னும் அளவினரேயன்றி விளையாத களர் நிலத்துக்கு ஒப்பாவார்.

407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று. ௭

நுண் - நுட்பம். புலம் - அறிவு. எழில் - அழகு. புனை - அலங்கரிக்கப்பட்ட.

நுட்பமாகிய மாட்சிமையுள்ள (நூல்களில்) சென்ற அறிவில்லாதவனின் அழகும் நலமும் மண்ணால் அழகுண்டாக அலங்கரிக்கப்பட்ட பாவையை ஒக்கும்.

408. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. ௮

திரு - செல்வம்.

நல்லவருக்குண்டாகிய வறுமையினும் படியாதவரிடத்தி லுண்டாகிய செல்வம் தீமையாம்.

409. மேற் பிறந்தாராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. ௯

கல்லாதவர் உயர்ந்தசாதியில் பிறந்தாலுந் தாழ்ந்த சாதியில் பிறந்து படித்தவர் அவ்வளவு பெருமையுடையவராகார்.

410. விலங்கொடு மக்களனை யாரிலங்கு நூல்
கற்றாரோ டேனை யவர். ௰

விலங்கு - மிருகம். இலங்கு - விளங்கிய. ஏனையவர் - மற்றவர்.

மிருகங்களுக்கும் மனிசருக்கும் இருக்கும் வித்தியாசம் போல விளங்கிய நூல்களைக் கற்றவருக்கும் மற்றவருக்கும் உண்டு.



௪௧

## 42. கேள்வி.

411. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை. க

செல்வத்துள் உயர்ந்த செல்வம் கேள்விச் செல்வம். அந்தச்செல்வஞ் செல்வங்கள் எல்லாவற்றிலுந் தலைமையானது.

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். உ

காதுக்கு உணவாகிய கேள்வியில்லாதகாலத்தில் கொஞ்சம் ஆகாரம் வயிற்றுக்குங் கொடுக்கலாம்.

413. செவியுணவிற் கேள்வியுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து. ௩

அவி - வேள்வி. ஆன்றார் - தேவர்.

செவியுணவாகிய கேள்வியையுடையவர்கள் பூமியிலிருந்தாலும் வேள்வியாகிய உணவினையுடைய தேவருக்கு ஒப்பாவார்கள்.

414. கற்றிலனாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. ௪

ஒற்கத்தின் - துன்பத்தில். ஊற்றாந்துணை - ஊன்று
கோல.

கல்லாதவனாகிலுங் கேட்கக் கடவன்; அது ஒருவனுக்குத் துன்பகாலத்தில் ஊன்றுகோலாகிய துணையாகும.

415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார் வாய்ச்சொல். ௫

இழுக்கல் - வழுக்கல். உடை - உடைய. உழி - இடம்.

ஒழுக்கமுடையவர்வாய்ச்சொல் சறுக்கல்நிலத்தில் ஊன்றுகோல போலாகும்.



416. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். ௬

ஆன்ற - நிறைந்த.

(ஒருவன்) நல்லவைகளை எவ்வளவாகிலுங் கேட்கக்கடவான்; அவ்வளவுக்கும் நிறைந்தபெருமையைத்தரும்.

417. பிழைத்துணர்ந்தும் பேதைமைசொல்லா ரிழைத்
தீண்டிய கேள்வி யவர். [துணர்ந் ௭

ஈண்டிய - நிறைந்த. கேள்வி - கல்வி.

நுட்பமாகநூல்களை அறிந்து நிறைந்தகேள்வியையுடையவர் பிழையாக உணர்ந்தாலும் அறிவீனமான சொற்களைச் சொல்லார்.

418. கேட்பினுங் கேளாத்தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. ௮

தோட்கப்படாத - துளைக்கப்படாத.

கேள்வியால் தொளைக்கப்படாத காது கேட்டாலுங் கேளாத தன்மையையுடையதாகும்.

419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய

வாயின ராத லரிது. ௯

நுணங்கிய - நுட்பமாகிய.

நுட்பமான கேள்வியையுடையவரல்லாதவர் வணக்கமுடையவாயுள்ளவராயிருக்கிறது அரிது.

420. செவியிற் சுவை யுணரா வாயுணர்வின்மாக்க
ளவியினும் வாழினு மென். ௰

அவியினும் - இறந்தாலும்.

காதுகளால் அறியப்படும் ருசியையுணராமல் வாயால் உண்ணப்படும் ருசியை (மாத்திரம்) அறியும் மனிதர் இறந்தாலும் வாழ்ந்தாலும் என்ன.



கூ பொருட்பால்

## 43 அறிவுடைமை.

421. அறிவற்றங் காக்குங்கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண். க

அற்றம் - முடிவு. கருவி - ஆயுதம்.

அறிவு முடிவுவராமல் காக்குங்கருவியாம்; அது சத்துராதிகளாலும் அழிக்கலாகாத உள்ளான அரணும்.

422. சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. உ

(ஒரீஇ, ஒருவி). உய்ப்பது - செலுத்துவது.

மனதைச்சென்ற விஷயத்தில் செல்லவிடாமல் கெட்டவைகளை நீக்கி நலலதினிடத்தில் செலுத்துவது அறிவாம்.

423. எப்பொருள் யார்யார்வாய்க்கேட்பினுமப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. ௩

எந்தப்பொருளை யாராரவரயால் கேட்டாலும் அப்பொருளினது மெய்ப்பொருளைக்காண்பது அறிவாகும்.

424. எண்பொருளவாகச் செலச்சொல்லித் தான்பிறர்
நுண்பொருள் காண்ப தறிவு. [வாய் ௪

எண - எளிய. பொருளாவாக - பொருளையுடையன வாக.

தெளிவான பொருளையுடையனவாக மனதிற் செல்லும் படிசொல்லித் தான மற்றவர்வாயினின்று பிறக்கும நுட்பமா கடபொருளைக்காண்பது அறிவாம.

425. உலகந்தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மிலல தறிவு. ரு

தழீஇயது (தழுவியது) - கட்பாக்குவது. ஒட்பம்- அறிவுடைமை. மலர்தல - விரிதல். கூம்பல் - குவிதல்.
உயர்ந்தோரைச் சிநேகிப்பது அறிவுடைமை; விரிதலுங் குவிதலுமிலலாதது அறிவாம.



426. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. சு

எவ்வது - எது. உறைவது - நடப்பது.
உலகம் எப்படிநடக்கிறதோ அப்படி உலகத்தோடு நடப் பதே அறிவாம்.

427. அறிவுடையாராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர். எ

வருவதை யறிபவர் அறிவுடையவர், வருவதை அறியப் படியாதவர் அறிவில்லாதவர்.

428. அஞ்சுவதஞ்சாமை பேதமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில். அ

பயபபடவேண்டியதற்குப் பயப்படாமை பேதமையாம. பயப்படவேண்டியதற்கு பயப்படல் அறிவுடையவர் தொழி லாம்.

429. எதிரதாக்காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய். ௯

(தங்களுக்கு வருவதை) முன்னேயறிந்து காக்கவல்ல அறிவுடையவர்க்கு அதிருப்படிவரும் ஒரு துன்பமுமில்லை.

430. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர். ௰

அறிவுடையவர்யாவையுமுடையவர், அறிவில்லாதவர் எல்லாமுடையவராகிலும் ஒன்றுமில்லாதவர்.





## 44. குற்றங்கடிதல்.

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. ௧

செருக்கு - அகங்காரம். பெருமிதம் - மேம்பாடு.
அகங்காரமுங் கோபமுங் காமமும் இல்லாதவர்களின் செல்வம் மேம்பாடுடையது.

432. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு. ௨

இவறல் - லோபித்தனம். இறந்த - நீங்கிய. உவகை- மகிழ்ச்சி. ஏதம் - குற்றம்.
லோபித்தனமும் நன்மையினீங்கிய மானமும் மாட்சிமையில்லாத மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றங்களாம்.

433. தினைத்துணையாங் குற்றம்வரினும் பனைத்துணை
கொள்வர் பழிநாணுவார். [யாக் ௩

பழிக்கு அஞ்சுகிறவர்கள் தினையளவு குற்றம்வந்தாலும் அதைப் பனையளவாக எண்ணிக்கொள்ளுவார்கள்.

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை. ச

அற்றம் - அழிவு.

குற்றமே அழிவைத்தரும்பகையாம். ஆகலால் குற்றம் வாராமையைப் பொருளாகக் காக்கக்கடவன்.

435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். ரு

வை - வைக்கோல். தூறு - போர.

(குற்றம்) வரும்முன் தன்னைக் காத்துக்கொள்ளாதவனின் வாழ்க்கை நெருப்பின்முன் வைக்கோலின் போர்போல் கெடும்.

பொருட்பால். கக

436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு. சு

தன் குற்றத்தை நீக்கிப்பிறர் குற்றத்தைக்கண்டால் அரசனுக்கு எந்தக்குற்றமுண்டாகும்.

437. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும். எ

இவறியான் - லோபி. உயல் - உள்ளது.

செய்யப்படுந் தன்மையையுடையவைகளைச் செய்யாமல் லோபித்தனஞ் செய்தவனின் செல்வம் விர்த்தியாகுந்தன்மையின்றிக்கெடும்.

438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று. அ

இவறன்மை - லோபித்தனம். எற்றுள்ளும் - எல்லாக் குற்றங்களுள்ளும்.

(பொருளைப்) பற்றுகிற உள்ளமென்றும் லோபித்தனம் எல்லாக்குற்றங்களுள்ளும் (வைத்து) நினைக்கப்படும்படியான ஒன்றல்ல.

439. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. சு

வியவற்க - மதியாதிருக்க. நயவற்க - விரும்பாதிருக்க.

ஒருவன் எந்தக்காலத்திலுந் தன்னை மதியாமலிருப்பானாக; நன்மையைக்கொடாத செய்கையை விரும்பாதிருப்பானாக.

**440.** காதல காதலறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல். ௰

காதல - வேண்டியவைகள். உய்க்கில் - அநுபவித்தால். ஏதில - பயனற்ற. ஏதிலார் - சத்துருக்கள். நூல் - எண்ணம்.

தனக்கு வேண்டியவைகளைப் பிறர் அறியாமல் நடப்பித்தால் சத்துருக்கள் எண்ணம் பயனற்றதாகும்.





## 45. பெரியாரைத் துணைக்கோடல்.

**441.** அறனறிந்து மூத்த வறிவுடை யார்கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். க

தேர்ந்து - தெரிந்து.

தர்மவழிகளையறிந்து முதிர்ந்த அறிவுடையவர் சிநேகத்தை (அரசன்) சமயமறிந்து தெரிந்துகொள்ளக்கடவான்.

**442.** உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். உ

உறாமை - வராமல். பெற்றியார் - தன்மையையுடையவர்.

வந்ததுன்பங்களை நீக்கி (அப்படிப்பட்டவை) வாராதபடிக்குமுன்னமே காத்துக்கொள்ளுந் தன்மையையுடையவரை (அரசன்) சிநேகிக்கக்கடவான்.

**443.** அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். ங

தமர் - உரியவர்.

பெரியவர்களை ஆதரித்துத் தமக்குரியவராகக் கொள்ளுதல் அரியவைகளிலெல்லாம் அரிதாம்.

444. தம்மிற்பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. ௪

தம்மைப்பார்க்கிலும் பெரியவர் தமக்குரியவராகும்படி நடத்தல் எல்லாவல்லமையிலும் முதன்மையாம்.

445. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். ௫

சூழ்வார் - மந்திரிகள். சூழ்ந்து - ஆராய்ந்து.

அரசன் மந்திரிகளைக்கண்ணாகக் கொண்டுநடக்கிறபடியால் மந்திரிகளை ஆராய்ந்துபார்த்து வைத்துக்கொள்ளக் கடவான்.



446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந் தில். ௬

இனத்தன் - சினேகிதன். செற்றார் - பகைஞர்.

யோக்கியரின் சினேகிதனாய் நடக்கவல்லவனைப் பகைவர் செய்யக்கிடந்தது ஒன்றுமில்லை.

447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர். ௭

கண்டித்துப்புத்திசொல்லுந் துணையானவரை ஆளும் அரசரைக்கெடுக்குந் தகைமையையுடையவரார்.

448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். ௮

ஏமரா - காவலற்ற.

இடித்துப்புத்திசொல்லுவாரில்லாத காவலற்ற அரசன் கெடுப்பவர்களில்லாதிருந்தாலுங் கெடுவான்.

449. முதலிலார்க் கூதியமில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை. ௯

ஊதியம் - இலாபம். மதலை - தாங்கல. சார்பு- உதவி.

முதற்பொருள் இல்லாதவர்களுக்கு லாபமில்லை. தாங்குந துணையில்லாதவருக்கு நிலையுமில்லை.

450. பல்லார்பகை கொளலிற் பத்தடுத்ததீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். ம

பல்லார் - பலர். தொடர் - நட்பு.

நல்லவரின் நட்பை விட்டுவிடுதல் பலரோடு பகைத்துக் கொள்வதிலும் பத்துப்பங்கு தீமையையுடையதாம்.





## 46. சிற்றினஞ் சேராமை.

451. சிற்றினமஞ்சும்பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். க

பெரியோரியல்பு சிறிய இனத்திற்கு அஞ்சும். சிறியோ ரியல்பு அதைச் சுற்றமாக எண்ணிக்கொள்ளும்.

452. நிலத்தியல்பா னீர் திரிந்தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு. உ

தண்ணீர் நிலத்தின் தன்மையால் வேறுபடுவதுபோல் மனிதருக்குண்டான அறிவு இனத்தன்மையால் வேறுபடும்.

453. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்ப டுஞ்சொல். ௩

மனிதருக்கு அறிவு மனதினாலுண்டாகும்; இவனிப்படிப் பட்டவனென்று சொல்லப்படுஞ் சொல் இவன் கூட்டத்தாலாகும்.

454. மனத்து ளதுபோலக் காட்டியொருவற்
கினத்துள தாகு மறிவு. ச

அறிவொருவனுக்குமனதில் உள்ளதுபோலக்காட்டி அவன் சேர்ந்திருக்கும் இனத்திலிடத்திலுள்ளதாகும்.

455. மனந்தூய்மை செய்வினை தூய்மையிரண்டு
மினந்தூய்மை தூவா வரும். ரு

தூவா = பற்றுக்கோடாக.

மனதின் தூய்மையுஞ்செய்தொழிலின் தூய்மையுமாகிய இரண்டும் இனத்தூய்மையின் பற்றுக்கோடாக வரும்.

456. மனந்தூயார்க்கெச்ச நன்றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை. சு

மனத்தூய்மையுள்ளவர்களுக்கு மக்கள் பேறு நன்றாகும்; இனத்தூய்மையுள்ளவர்களுக்கு நன்மையாகாத கருமமில்லை.

457. மனநல மன்னுயிர்க்காக்க மினநல
மெல்லாப் புகழுந்தரும். எ

மனதின் நன்மை மன்னுயிர்க்குச் செல்வந்தரும்; இனநலஞ் சகல புகழ்ச்சியையுங் கொடுக்கும்.

458. மனநல நன்குடையராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து. அ

நன்கு – நன்மை.

சான்றோர் மனநலத்தை நல்வினையால் உடையவராயிருந்தாலும் அவர்களுக்கு இன நலம் உறுதியுடையது.

459. மனநலத்தினாகு மறுமைமற்றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து. கூ

மனநலத்தால்மறுமை இன்பங்கிடைக்கும்; அதுவும் இன நன்மையால் வலிமையுடையதாகும்.

460. நல்லினத்தி னூங்குந் துணையில்லைத் தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். ௰

ஊங்கும் - மிகுதி.

நல்ல இனத்திற்குமேலான துணை இல்லை; கெட்ட இனத்தைப் போல் துன்பப்படுத்துவைப்பதுமில்லை.







## 47. தெரிந்து செயல்வகை.

461. அழிவதூஉமாவதூஉமாகி வழிபயக்கு,
மூதியமுஞ் சூழ்ந்து செயல். ௧
சூழ்ந்து - ஆராய்ந்து.

(ஒருவன்) அழிவதையும் வருவதையுந் தாக்கிப்பார்த்துப் பின்னுண்டாகும் லாபத்தையும் ஆராய்ந்து ஒருதொழிலைச் செய்யவேண்டும்.

462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்
கரும்பொருள் யாதொன்று மில். [வார்க் ௨

தாந்தெரிந்துகொண்ட இனத்தோடு ஆராய்ந்து (தானாய்) எண்ணிச்செய்பவர்க்கு அருமையான பொருள்யாதொன்றும் இல்லை.

463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். ௩

ஊக்கார் - மேற்கொள்ளார்.

லாபத்தைக் கருதி முதலை இழக்குந்தொழிலை அறிவுடையார் மேற்கொள்ளார்.

464. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர். ௪

இளிவு - இழிவு. ஏதப்பாடு - குற்றம்.

இகழ்ச்சியென்னுங் குற்றத்திற்குப் பயப்படுகிறவர்கள் தெளியப்படாத தொழிலைச்செய்யமாட்டார்கள்.

465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. ௫

வகை - விதம். அற - முற்ற. பாத்திப்படுப்பது - நிலைபெறச்செய்வது.

காரியத்தை முழுவதும் ஆராய்ந்துபாராமல் பகைவர் மேல் செல்லுதல் அவர்களை நிலைபெறச்செய்யும் ஓர்வழியாகும்.



466. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். ௬

ஒருவன் செய்யத்தகாததைச்செய்தால்கெடுவான்; செய்யத்தக்கவைகளைச் செய்யாமையினாலும் கெடுவான்.

467. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு. ௭

நினைத்து ஒரு தொழிலைச்செய்வாயாக; செய்தபின்பு எண்ணுவோமென்பது குற்றமாகும்.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். ௮

ஆற்றின் - வழியால். போற்றினும் - காத்தாலும். பொத்துப்படும் - குற்றப்படும்.

முடியும் உபாயம் அறிந்துவருந்தாத முயற்சி பலர் நின்று காத்தாலும் குற்றப்படும்.

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. ௯
ஆற்றல் - செய்தல்.

அவரவருடைய குணங்களையறிந்து செய்யாதபோது நல்ல உபாயத்தைச் செய்தலுள்ளுங் குற்றமுண்டு.

470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. ௰
எள்ளல் - இகழ்தல்.

தமது நிலைமையோடு பொருந்ாத உபாயங்களை உலகம் அங்கீகரியாது; ஆதலால் இகழப்படாதவைகளை நினைத்துச் செய்யவேண்டும்.





## 48. வலியறிதல்.

471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். ௧
மாற்றான் - எதிரி.

தொழிலின் வலிமையையுந் தன்வலிமையையும் பகைவன் வலிமையையுந் துணை நிற்பவரின் வலிமையையும் ஆராய்ந்து பார்த்துச் செய்யக்கடவன்.

472. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். ௨

ஒல்வது - கூடியது. (கட்டங்கி - கண் தங்கி).

செய்யக்கூடியதையும், அறியவேண்டியவைகளையும் அறிந்து அதில் நிலைத்திருந்து (பகைவர்மேல்) செல்பவர்க்கு முடியாதது ஒன்றுமில்லை.

473. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். ௩

உடை - உரிய. ஊக்கம் - மனஎழுச்சி. ஊக்கி - மேற்கொண்டு.

பலர் தங்கள் பலத்தையறியாமல் ஊக்கத்தால் (போர் செய்யத்) தொடங்கி மத்தியில் தோர்த்தார்.

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும். ௪

அமைந்து - பொருந்தி. வியந்தான் - மெச்சினவன்.

மற்றவருக்குப்பொருந்தி நடவாதவனுந்தன் வலிமையின் அளவை யறியாதவனுமாயிருந்து தன்னை மெச்சிக்கொண்டவன் விரைந்துகெடுவான்.

475. பீலிபெய்சாகாடு மச்சிறுமப் பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். ௫

பீலி - மயிலிறகு. பெய் - ஏற்றின. சாகாடு - வண்டி. இறும் - உடையும். சால - அதிகம்.

மயிலிறகை யேற்றின வண்டியும் அப்பண்டத்தை மிகவும் அதிகப்படுத்தி ஏற்றினால் அச்சுமுறியும்.



476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந்தூக்கின்
உயிர்க் கிறுதியாகி விடும். ௬

கொம்பர் - கொம்பு. இறந்து - கடந்து. ஊக்கின் - முயன்றால். இறுதி - முடிவு.

மரத்தின் நுனிக்கொம்பில் ஏறியிருக்கிறவன் அதுகடந்து மேலே செல்லமுயன்றால் உயிர்க்கு முடிவாகிவிடும்.

477. ஆற்றினளவறிந்தீக வதுபொருள்
போற்றிவழங்கு நெறி. ௭

(பொருள்வரும்) வழியின் அளவையறிந்து கொடுக்கக்கடவன்; அதுபொருளைக்காப்பாற்றி வழங்கும் வழியாகும்.

478. ஆகாறள விட்டிதாயினுங் கேடில்லைப்
போகா றகலாக் கடை. ௮

ஆகாறு - ஆகும்வழி. இட்டிதாயினும் - கொஞ்சமாயிருந்தாலும்.

போகும்வழி விரிவாகாதிருந்தால் பொருள்வரும்வழி அளவில் சிறிதாயிருந்தாலுங் கெடுதியில்லை.

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். ௯

(பொருளின்) அளவையறிந்து வாழாதவனின் வாழ்க்கை உள்ளதுபோலத் தோற்றி இல்லாததாகி அழியும்.

480. உளவரைத் தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். ௰

உள - உள்ள. வரை - அளவை. தூக்காத - ஆராயாத. ஒப்புரவாண்மை - உபகாரமுடைமை. வள - செல்வம். வல்லை - சீக்கிரம்.

தனக்குள்ள பொருள் அளவை ஆராய்ந்து பாராத உபகாரத்தன்மையால் அவன் செல்வத்தளவு சீக்கிரங் கெட்டுப் போகும்.





## 49. காலமறிதல்.

481. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. ௧

இகல் - பகை.

பகலில் காக்கை கோட்டானை வெல்லும்; (அதுபோல்) பகைவரைவெல்லக்கருதும் அரசருக்குப்பொழுதுவேண்டும்.

482. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. ௨

தீராமை - நீங்காமை. ஆர்க்கும் - கட்டும்.

காலத்தோடுபொருந்த நடத்தல் செல்வத்தை நீங்காமல் கட்டுங் கயிறும்.

483. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
காலம் அறிந்து செயின். ௩

அரு - அரிய.

தகுந்த கருவியைக்கொண்டு காலத்தையறிந்து செய்தால் அரியதொழில் என்பதுண்டா.

484. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின். ௪

ஞாலம் - பூமி.

காலம் அறிந்து இடத்தோடுபொருந்தச் செய்தால் பூமி முழுவதையும் (பெற) நினைத்தாலுங் கைகூடும்.

485. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். ௫

இருப்பர் - இருப்பவர்.

பூமியை ஆள நினைத்திருப்பவர் காலத்தைத்தப்பாமல் கருதியிருப்பார்கள்.



486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. ௬

பொரு - சண்டைசெய்யும். தகர் - ஆட்டுக்கடா. தாக்கல்-பாய்தல். பேரும் - பின்வாங்கும். தகைத்து-தன்மையது.

வலிமையுடையவனின் பின்வாங்குதல் சண்டைசெய்யும் ஆட்டுக்கடாபாயும்படிக்குப் பின்வாங்குந் தன்மையையுடையதாம்.

487. பொள்ளெனவாங்கே புறம்வேரார்காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர். ௭

வேரார் - கோபியார். ஒள்ளியவர் - அறிவுடையவர்.

அறிவுடையவர் (பகைவர்) தீங்குசெய்தபொழுதே விரைவாக வெளியில் கோபியார். காலத்தைப்பார்த்து உள்ளே கோபஞ் செய்வார்.

488. செறு நரைக்காணிற் சுமக்கவிறுவரை
காணிற் கிழக்காந் தலை. ௮

செறுநர் - பகைவர். சுமக்க - பணியக்கடவான். இறு

வரை - அழியும் காலம். கிழக்காம் - கீழேவிழும்.

பகைவரைக்கண்டால் பணியக்கடவான். அவர்கள் அழி யுங் காலம்வந்தால் அவர்கள் தலைகீழ் விழும்.

489. எய்தற்கரிய கியைந்தக்கா லந் நிலையே
செய்தற் கரிய செயல். ௯

எய்தல் - அடைதல். இயைந்த - கூடிய.

பெறுவதற்கு அரியவைகள் வந்து கூடினால் உடனேசெய் வதற்கு அரியவற்றைச்செய்யக்கடவாய்.

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. ௰

கூம்பும் - அடங்கும். சீர்த்த - வாய்த்த.

அடங்குங் காலத்தில் கொக்குக்கு ஒத்திரு. சமயம் வாய்த்தபோது அதின் குத்தலுக்கு ஒத்திரு.



## 50. இடனறிதல்.

491. தொடங்கற்கவெவ்வினையுமெள்ளற்கமுற்று
மிடங் கண்ட பின்னல் லது. ௧

எள்ளற்க - இகழாதிருப்பாயாக.

முற்றும் இடத்தைக்கண்டபின் அல்லாமல் எந்தத்தொ ழிலையுந் தொடங்கா திருக்கக்கடவாய்; (பகைவர் சிறியவ ரென்று) இகழாதிருக்கக்கடவாய்.

492. முரண்சேர்ந்தமொய்ம்பினவர்க்குமரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும். ௨

முரண் - மாறுபாடு. மொய்ம்பு - பலம்.

மாறுபாட்டைச் சேர்ந்த வலிமையையுடையவர்க்கும் அரணைச்சேர்ந்து ஆகும் ஆக்கம் பலவற்றையுந்தரும்.

493. ஆற்றாருமாற்றி யடுபவிட னறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். ௩

ஆற்றார் - வலிமையற்றவர். அடுப - வெல்லுவார்கள். போற்றார்கண் - பகைவரிடத்தில்.

இடமறிந்து தம்மைக்காத்துக்கொண்டு பகைவரிடத்தில் யுத்தஞ் செய்தால் வலிமையில்லாதவரும் வலிமையுடைய வராய் வெல்லுவார்கள்.

494. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். ௪

துன்னியார் - சென்றவர். துன்னி - சமீபித்து.

இடமறிந்து சென்றவர் (அரணை) பொருந்தி நின்று யுத்தஞ் செய்தால் (அவரை வெல்ல) எண்ணியிருந்தவர் அவ்வெண்ணத்தை இழந்துபோவார்.

495. நெடும் புனலுள்வெல்லுமுதலையடும்புனலி
னீங்கி னதனைப் பிற. ௫

நெடும் - அதிக. புனல் - நீர். அடும் - கொல்லும்.

முதலை ஆழமான நீரில் வெல்லும்; நீரிலிருந்து வெளிப்பட்டால் அதைப் பிறவுயிர்கள் கொல்லும்.

496. கடலோடா கால்வனெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து. ௬

கால் - உருளை. வல் - பலமுள்ள. நாவாய் - கப்பல்.

பலமுள்ள உருளைகளையுடைய பெரியதேர் கடலில் ஓடாது; கடலில் ஓடும் மரக்கலம் நிலத்தில் ஓடாது.

497. அஞ்சாமையல்லாற்றுணை வேண்டாவெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். ௭

எஞ்சாமை - குறையாமை.

(செய்யுந் தொழிலைக்) குறைவில்லாமல் எண்ணி இடமறிந்து செய்தால் பயப்படாமையை யன்றி வேறுதவி வேண்டியதில்லை.

498. சிறுபடையான் செல்லிடஞ்சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும். ௮

உறுபடை - பெருஞ் சேனை.

சிறியசேனையையுடையவன் செல்லிடத்தைச் சேர்ந்தால் பெருஞ் சேனையையுடையவனின் ஊக்கம் அழிந்துபோகும்.

499. சிறைநலனுஞ் சீருமிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது. ௯

சிறை - அரண். சீர் - வலிமை. உறை - தங்கும். ஒட்டல் - யுத்தஞ் செய்தல்.

கோட்டையின் நலமும் வலிமையும் இல்லாதவராயிருந் தாலும் மனிதர் வாசஞ்செய்கிற இடத்தில் சென்று அவர்க ளோடு போர்புரிதல் அருமை.

500. காலாழ் களரினரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு. ௰

ஆழ் - புதையும். களர் - சேற்றுநிலம். முகத்த - கோத்த. களிறு - ஆண்யானை.

பாகருக்குப் பயப்படாததும் வேலையுடைய ஆட்களைக் கோத்த கொம்பையுடையதும் ஆகிய யானையைக் கால்புதை யுஞ் சேற்று நிலத்தில் நரி கொல்லும்.



பொருட்பால்

## 51. தெரிந்துதெளிதல்.

501. அறம்பொருளின்பமுயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். க

அறம், பொருள், இன்பம், உயிர்ப்பயமாகிய நான்கின் தன்மையை யறிந்து தெளியப்படுவான்.

502. குடிப்பிறந்து குற்றத்தினீங்கிவடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு. உ

வடு - குற்றம். பரியும் - அஞ்சும்.

(அரசன்) உயர்ந்தகுடியிற்பிறந்து குற்றத்திலிருந்து நீங் கிப் பழுது வருமோவென்று அஞ்சி நிற்கும் நாணமுடைய வனைத் தெரிந்துகொள்ளவேண்டியது.

503. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு. ௩

ஆசு - குற்றம். வெளிறு - அறியாமை.

அரிதான நூற்களைக் கற்றுக் குற்றங்களற்றவரிடத்திலும் ஆராயுங்கால் அறியாமையில்லாதிருக்கை அரிதாகும். ௩

504. குணநாடிக் குற்றமு நாடியவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல். ௪

மிகை - அதிகம்.

குணங்களையுங் குற்றங்களையும் ஆராய்ந்து அவற்றுள் அதிகமானவைகளை ஆராய்ந்து மிகுந்தவைகளைக் கொள்ளக் கடவான்.

505. பெருமைக்குமேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக்கல். ௫

ஏனை - மற்ற. கட்டளைக்கல் - உரைக்கல்.

பெருமைக்கும் மற்றச்சிறுமைக்குந் தங்கள்தங்கள் செய்கையே உரைக்கல்லாம்.

மேற்படி பால.

506. அற்றாரைத் தேறுதலோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. ௬

ஓம்புக - ஒழியானுக. பற்றிலா - பற்றில்லாதவர்.

தரித்திரரைத் தெரிந்துகொள்ளுதலை ஒழியக்கடவன், அவர்கள் பற்றில்லாதவராய்ப் பழிக்கு அஞ்சார்.

507. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். ௭

காதன்மை - அன்புடைமை. கந்து - பற்றுக்கோடு.

அன்புடைமை பற்றுக்கோடாக அறியவேண்டியவைகளை அறியாதவரைத் தெரிந்துகொள்ளல் அறிவின்மையை யெல்லாந் தரும்.

508. தேரான் பிறனைத்தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும். ௮

ஆராயாமல பிறனைத் தெரிந்துகொண்டவனின் சந்ததி முறையிலும் நீங்காத துன்பத்தைத் தரும்.

509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
தேறுக தேறும் பொருள். ௯

யாரையும் ஆராயாது தெரிந்துகொள்ளாதிருப்பானாக; ஆராய்ந்தபின் தெளியப்படும் பொருளைத் தெளியக்கடவான்.

510. தேரான்றெளிவுந் தெளிந்தான்கணையுறவுந்
தீரா விடும்பை தரும். ௰

ஐயுறவு - சந்தேகம்.

ஆராயாமல் தெளிதலுந் தெளிந்தவனிடத்தில் சந்தேகப்படுதலும் நீங்காத துன்பத்தைத் தரும்.



அ பொருட்பால்.

## 52. தெரிந்துவினையாடல்.

511. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். ௧

புரிந்த - விரும்பிய. தன்மையான் - தன்மையுள்ளவன்.

நன்மையையுந் தீமையையும் ஆராய்ந்துபார்த்து நலத்தை விரும்பிய தன்மையையுடையவன் ஆளப்படுவான்.

512. வாரிபெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய் வான் செய்க வினை. ௨

வாரி-பொருள்வரும்வழி. வளம்-செல்வம். படுத்து-பெருக்கி.

பொருள்வரும் வழியை விரிவாக்கிப்பொருளை விர்த்திக்கச்செய்து இடையூறுகளை ஆராய்பவன் தொழிலைச்செய்யக்கடவான்.

513. அன்பறிவு தேற்றமவா வின்மையிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு. ௩

அன்பு, அறிவு, கலங்காமை, ஆசையின்மை ஆகிய இந்நான்கையும் நன்றாக உடையவனிடத்தில் (அரசனுக்குத்) தெளிவுண்டாகும்.

514. எனைவகையாற்றேறியக் கண்ணும் வினைவகை
வேறாகு மாந்தர் பலர். [யான் ௪
எனை - எல்லா.

எல்லாவகையிலுந் தெளிந்தபின்னுந் தொழிலின் இயல்பால் வேறாகும் மனிதர் பலர்.

515. அறிந்தாற்றிச்செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.
செய்கிற்பாற்கு - செய்பவனுக்கு.

தொழிலையறிந்து பொறுத்துச்செய்யவல்லவனுக்கு அல்லாமல் வேறொருவனுக்கு, இவன் சிறந்தவனென்று எண்ணி அதைக்கொடுப்பது தகுதியல்ல.

516. செய்வானை நாடி வினைநாடிக்காலத்தோ
டெய்தவுணர்ந்து செயல். ௬
எய்த - பொருந்த.

செய்கிறவனை ஆராய்ந்து தொழிலையும் ஆராய்ந்து காலத்தோடு பொருந்த உணர்ந்து செய்வாயாக.

517. இதனை யிதனாலிவன் முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல். ௭

ஆய்ந்து - ஆராய்ந்து.

இதை இவன் இதினால் முடிப்பானென்று ஆராய்ந்து அதை அவனிடத்தில் விடவேண்டும்.

518. வினைக்குரிமை நாடிய பின்றையவனை
யதற்குரிய னாகச் செயல். ௮
உரிமை - உரியவன். பின்றை - பின்பு.

தன் தொழிலைச்செய்யும் ஒருவனின் தகுதியை ஆராய்ந்து அறிந்துகொண்டபின்பு அவனை அதற்கு உரியவனாகச்செய் யக்கடவான்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறாக
நினைப்பானை நீங்குந் திரு. ௯

தன் தொழிலில் முயற்சியுடையவன் சிநேகத்தை மாறு பட நினைப்பவனை விட்டுச்செல்வம் நீங்கும்.

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. ௰

தொழிற் செய்பவன் கோணுதிருக்க உலகங் கோணுது; (ஆதலால்) அரசன் அவன் செய்வதை நாள்தோறும் ஆராயக் கடவான்.



## 53. சுற்றந்தழால்.

521. பற்றற்ற கண்ணும் பழமைபாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. ௧

செல்வமில்லாதகாலத்திலும் பழமையைக்கொண்டாடு தல் சுற்றத்தாரிடத்திலுண்டு.

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும். ௨

விருப்பு - அன்பு. அறா - நீங்காத. இயையின் - இசைத்தால. அருப்பு - வளர்தல்.

(ஒருவனுக்கு) அன்பு நீங்காத சுற்றங்கிடைத்தால் கிளைத் தல் குறையாத பலசெல்வங்களையுந் தரும்.

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர் நிறைந் தற்று. ௩

அளவளாவு - கலப்பு. குளவளா - குளப்பரப்பு.
கோடு - கரை.

சுற்றத்தோடு கலத்தல் இல்லாதவன் வாழ்க்கை குளப்பரப்பு கரையின்றி நீர் நிறைந்தது போலாகும்.

524. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். ௪

ஒருவன் செல்வத்தைப்பெற்றதினால் உண்டாகும் பிரயோசனம் என்னவென்றால் சுற்றத்தாரால்தான் சூழப்படும்படி நடத்தலாம்.

525. கொடுத்தலு மின்சொல்லு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். ௫

அடுக்கிய - நெருங்கிய.

ஒருவன் கொடுத்தலையும் இனியசொல்லையும் உடையவனாயிருந்தால் அவன் தன்னெருங்கிய பந்துக்களால் சூழப்படுவான்.



526. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். ௬

பேணான் - விரும்பாதவன். மருங்கு - சுற்றம்.

மிகுந்த கொடையாளனும் கோபத்தை விரும்பாதவனுமாயிருந்தால் அவனைப்போல் சுற்றமுடையவர் இந்தப்பெரிய உலகத்தில் இரார்கள்.

527. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள ௭

கரவா - மறையாமல். கரைந்து - அழைத்து.
நீரார் - தன்மையையுடையவர்.

காக்கை மறைக்காமல் அழைத்துண்ணும். செல்வமும் அப்படிப்பட்ட தன்மையை யுடையவர்க்கு உண்டு.

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்

னதுநோக்கி வாழ்வார் பலர். அ

பொது - பொதுவாக. நோக்கான் - பாராதவன்.

அரசன் எல்லாரையும் ஒரே தன்மையாக நோக்காமல் அவரவர் தகுதிக்கேற்றபடி நோக்கினால் அதை நோக்கி வாழுகிறவர்கள் பலராவார்.

529. தமராகித் தற்றுறந்தார் சுற்றமமராமைக்
காரண மின்றி வரும். கூ

அமராமை - பொருந்தாமை.

(முன்னே) சுற்றத்தாராயிருந்து தன்னைப்பிரிந்துபோனவர் பொருந்தாமை காரணம் நீங்கினால் (திரும்பச்) சுற்றத்தாராகுதல் உண்டாகும்.

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல். ய

உழை - இடம். இழைத்திருந்து - செய்துவைத்து.

தன்னிடத்திலிருந்து பிரிந்து ஒருகாரணத்தினால் வந்தவனுக்கு வேந்தன் (அக்காரியத்தை) செய்துவைத்து ஆராய்ந்து பார்த்து ஏற்றுக்கொள்ளக்கடவான்.



ராயஉ. ஷ்பாகுடபால.

## 54. பொச்சாவாமை.

531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு. க

இறந்த - அளவுகடந்த. உவகை - களிப்பு. சோர்வு - மறதி.

மிகுந்தகளிப்பின்மகிழ்ச்சியால் வரும்மறதி அளவுகடந்த கோபத்தைப் பார்க்கிலுந் தீமையாம்.

532. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக் கொன் றாங்கு. உ

பொச்சாப்பு - மறதி. நிச்ச - நித்திய.
நிரப்பு - தரித்திரம். ஆங்கு - போல்.

நித்திய வறுமை அறிவைக்கெடுப்பதுபோல் மறதி புகழைக்கெடுக்கும்.

533. பொச்சாப்பார்க்கில்லைப் புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு. ௩

புகழ்மை - புகழ்ச்சி. எப்பால் - எவ்வகை.

மறதியுடையவர்க்குப் புகழில்லை; அது உலகத்தில் எவ்வகை நூலுடையவர்க்குஞ் சம்மதமாம்.

534. அச்சமுடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. ௪

நன்கு - செல்வம்.

பயமுடையவர்களுக்குக் கோட்டையில்லை; அதுபோல் மறதியுள்ளவர்களுக்குச் செல்வமில்லை.

535. முன்னுறக்காவா திழுக்கியான் றன் பிழை
பின்னூ றிரங்கி விடும். ௫

முன்னுற - முன்னமே. இழுக்கியான் - மறந்தவன். ஊறு - துன்பம். இரங்கிவிடும் - விசனப்படுவான்.

முன்னமே காவாமல் தவறினவன் துன்பம் வந்தகாலத்தில் தன் பிழையைக்குறித்து விசனப்படுவான்.

பொருட்பால். ௱௰௯

536. இழுக்காமையார் மாட்டுமென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். ௬

இழுக்காமை - மறவாமை. வழுக்காமை - தவறாமை. வாயின் - வாய்க்குமானால்.

மறவாமை யாரிடத்தும் எக்காலத்திலுந் தவறின்றி வாய்க்குமானால் அதற்கு ஒப்பானதில்லை.

537. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். ௭

போற்றி - எண்ணி.

மறவாமையாகிய கருவியால் எண்ணிச்செய்தால் அரியவையென்று எண்ணப்பட்டு முடியாதவைகள் இல்லை.

538. புகழ்ந்தவைபோற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில். ௮

புகழ்ந்து சொல்லப்பட்டவைகளை மனவெழுச்சியோடு செய்யவேண்டும். அப்படிச்செய்யாமல் இகழ்ந்தவர்க்கு ஏழு பிறப்பிலும் (நன்மை) இல்லை.

539. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. கூ

மைந்து - மயக்கம்.

தங்கள் மகிழ்ச்சியில் செருக்கடையும்போது மறதியால் கெட்டவரை நினைக்கவேண்டும்.

540. உள்ளியதெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின். ம

உள்ளியது - நினைத்தது. (மன், அசைநிலை.)

தான் நினைத்ததையெப்போதும் நினைக்க வல்லவனானல் தான் நினைத்ததை அடைதல் எளிது.







## 55. செங்கோன்மை.

541. ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்து செய்வஃதே முறை. க

ஓர்ந்து - நாடி. கண்ணோடாது - முகங்கொடாமல்.

(குற்றத்தை) விசாரித்து முகங்கொடாமல் வரிசை வாய்ந்த யாவரிடத்திலும் (குற்றங்களுக்கு தகுந்த தண்டனையை) ஆராய்ந்துசெய்வதே (செங்கோல) முறைமையாம்.

542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. உ

உலகமெல்லாம் மழையை நோக்கிவாழும். குடிகள் அரசனின் செங்கோலை நோக்கிவாழும்.

543. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். ௩

ஆதியாய் - ஆதாரமாய்.

அந்தணர் வேதத்திற்கும் தர்மத்திற்கும் ஆதாரமாய் நின்றது மன்னவன் செங்கோல்.

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு. ௪

ஓச்சும் - செலுத்தும். தழீஇ (தழுவி) - அணைத்து.

குடிகளை அணைத்துச் செங்கோல் செலுத்தும் பெருநில மன்னனது அடியை உலகம் தழுவிக்கொண்டு நிற்கும்.

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. ௫

இயல்புளி - நீதியாய். நாட்ட - நாடுகளில். பெயல் - மழை. விளையுள் - விளைவு. தொக்கு - கூடி.

நீதியாய்ச் செங்கோல் செலுத்தும் மன்னவன் நாட்டில் மழையும் விளைவும் உள்ளனவாகும்.



546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின். ௬

வேல் - ஆயுதம். கோடாது - கோணாது.

மன்னனுக்கு வெற்றியைத் தருவது வேலாயுதமல்ல, செங்கோலாம் அதுவுங் கோணவிட்டால்.

547. இறைகாக்கும் வையகமெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின். ௭

இறை - அரசன். முறை - செங்கோல். முட்டா - தப்பாமல்.

அரசன் பூமியெல்லாங் காப்பான். தப்பாமற் செலுத்துவானால் செங்கோல் அவனைக் காக்கும்.

548. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும். ௮

எண் - எளிதான. பதத்தான் - சமயமுடையவன். ஓரா - ஆராய்ந்து. தண் - தாழ்ந்த.

எளியசமயமுடையவனாகி (அறிவிக்கப்பட்டதுகளை) ஆராய்ந்து உண்மைக்கு ஒப்ப நீதியைச் செய்யாத அரசன் தாழ்ந்த பதவியில் நின்றுதானே கெடுவான்.

549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில. ௯

குடிகளைப் பிறர்வருத்தாதபடிக்குக் காத்துப் பராமரித்து (அவர்கள்) குற்றங்களுக்காகத்தண்டித்தல் பழியல்ல, அரசன் தொழிலாம்.

550. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்
களைகட் டதனொடு நேர். [கூழ் ௰

ஒறுத்தல் - தண்டித்தல். பைங்கூழ் - இளம்பயிர்.

அரசன் கொடியவரைக் கொலையினால் தண்டித்தல் (உழவன்) இளம்பயிர்க்குக் களையெடுத்ததை ஒக்கும்.





## 56. கொடுங்கோன்மை.

551. கொலைமேற் கொண்டாரிற் கொடிதே யலைமேற்
டல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண் க

அலை - வருத்துதலை.

குடிகளைவருத்தப்படுத்தலை மேற்கொண்டு முறையற்றவைகளைச்செய்து நடக்கும் அரசன் கொலைபாதகரினுங் கொடியனாவான்.

552. வேலொடு நின்றானிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. ௨

இரவு - பொருள்கேட்டல்.

அரசன் கொடுங் கோலோடு நின்று பொருள்கேட்குதல் வேலாயுதத்தோடு நிற்கிறவன் (வழிப்போக்கரைப்பார்த்து) கொடுங்கள் என்று சொன்னது போலாகும்.

553. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும். ௩

நாள்தோறுக் (நிலைகளை) ஆராய்ந்து நீதிசெலுத்தாத அரசனின் நாடு நாள் தோறுங் கெடும்.

554. கூழுங் குடியுமொருங் கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு. ௪

கூழ் - பொருள். ஒருங்கு - ஒருமிக்க. கோடி - தப்பி.
எண்ணாமல் முறைதப்பி நடக்கும் அரசன் பொருளையுங் குடிகளையும் ஒருமிக்க இழந்துபோவான்.

555. அல்லற்பட்டாற்று தழுத கண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. ௫

அல்லல் - துன்பம். படை - ஆயுதம்.
துன்பப்பட்டுப் பொறுக்கமாட்டாமல் அழுத கண்ணீர் அரசன் செல்வத்தைத் தேய்க்கும் வாளாகும் அல்லவா.

பொருட்பால. ௱௰௫

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மையஃதின்
மன்னாவா மன்னர்க் கொளி. [றேல் ௬

மன்னுதல் - நிலைபெறுதல். இன்றேல் - இல்லாமையால்.

அரசர்க்கு நிலைபெறுதல் செங்கோலாகும். அது இல்லாவிட்டால் அரசருக்குப் புகழ் உண்டாகாது.

557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு. ௭

எற்று - எப்படி.
பூமிக்கு மழையில்லாமை எவ்வளவு துன்பம் தருமோ அவ்வளவு துன்பத்தை அரசனின் கிருபையில்லாமை தன் குடிகளுக்குத் தரும்.

558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற் கீழ்ப் படின். ௮

முறைமை செய்யாத அரசனின் கோலின் கீழ் வாழ்தல் வறுமையிலுந் துன்பத்தைத் தரும்.

559. முறைகோடி மன்னவன் செய்யினுறைகோடி
யொல்லாது வானம் பெயல். ௯

உறை - பருவமழை. கோடி - இல்லாமற்போக. ஒல்லாது - பொருந்தாது.

மன்னவன் முறை தப்பிப்போனால் பருவமழையில்லாமற் போக மேகம் பொழிதல் பொருந்தாது.

560. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். ௰

ஆ - பசு.

அரசன் காப்பாற்றானாகில் பசுவின் பால்குறையும், வேதியர் சாஸ்திரங்களை மறந்துவிடுவார்கள்.





## 57. வெருவந்த செய்யாமை.

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து. ௧

தக்காங்கு - தக்கபடி. தலைச்செல்லா - விர்த்தியாகாமல். ஒறுப்பது - தண்டிப்பது.

(குற்றத்தை) தகுந்தபடி ஆராய்ந்து பின்னும் அப்படிப்பட்ட காரியம் நடவாதபடிக்கு அக்குற்றத்திற்கு ஏற்கத் தண்டிப்பவனே அரசன்.

562. கடிதோச்சிமெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர். ௨

ஓச்சி - செலுத்தி. எறிக - செய்யக்கடவர்.

செல்வம் நெடுங்காலம் நீங்காமலிருக்க விரும்புகிறவர் (தண்டனை செய்வதில்) அதிகக்கண்டிப்பாயிராமல் மெதுவாயிருக்கக்கடவர்.

563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும். ௩

வெருவந்த - அச்சம். வெங்கோல் - கொடுங்கோல்.
ஒருவந்தம் - நிச்சயம். ஒல்லை - சீக்கிரம்.

பயப்படத்தக்க செய்கைகளைச் செய்து நடக்குங்கொடுங் கோலையுடையவனுயிருந்தால் நிச்சயமாகவே சீக்கிரத்தில் கெடுவான்.

564. இறைகடியனென்றுரைக்கு மின்னுச்சொல்வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். ௪

உறைகடுகி - ஆயுள்குறைந்து.

அரசன் கொடியவனென்று சொல்லப்பட்டு இனிமையில் லாத சொல்லையுடையவனுயிருந்தால் அவன் சீவநாட்கள் குறு கிச்சீக்கிரங்கெடும்.

565. அருஞ்செவ்வி யின்னு முகத்தான் பெருஞ்செல்
பேஎய்கண் டன்ன துடைத்து. [வம் ௫

அரும் - அரிதான. செவ்வி - சமயம். (பேஎய் - பேய்.)

அரிய சமயத்தையும் இனிமையில்லாத முகத்தையும் உடைய அரசனின் பெரிய செல்வம் பேய்கண்டசெல்வத் தைப்போலாகும்.



566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும். ௬

கடுஞ்சொல்லையுடையவனுங் கண்ணோட்டமில்லாதவனு மானுல் அவனது பெரிய செல்வம் நீடித்தவராமல் அப்போ தே கெடும்.

567. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம். ௭

கையிகந்த - அளவுகடந்த. அடும் - வெல்லும்.
முரண் - வலி என்னும் இரும்பு.

கடியசொல்லும் அளவுகடந்த தண்டனையும் அரசனின் பலம் என்னும் இரும்பைத்தேய்க்கும் அரமாகும்.

568. இனத்தாற்றியெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. அ

(காரியங்களை) இனத்தாராகிய மந்திரிகளைக்கொண்டு நடத்தி, தானும் எண்ணிச்செய்யாத அரசன் கோபத்தைச் செலுத்தி அவர்களைச் சீறினால் அவன் செல்வஞ் சுருங்கும்.

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். கூ

செரு - போர். சிறை - அரண். வெரு - பயம். வெய்து - விரைவு.

யுத்தகாலத்தில் அரண்கட்டிக்கொள்ளாத அரசன்பயந்து விரைவில் கெடுவான்.

570. கல்லார்ப் பிணிக்குங் கடுங் கோலதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. ய

பிணிக்கும் - கட்டும். பொறை - பாரம்.

கொடுங்கோலன் கல்லாதவரைத் தன்னிடத்தில் கூட்டிக்கொள்ளுவான். அதல்லாமல் பூமிக்குப் பாரமில்லை.



## 58. கண்ணோட்டம்.

571. கண்ணோட்டமென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு. க

கண்ணோட்டம் - தாட்சிணியம். கழி - மிகவும். காரிகை - அழகு.

தாட்சிணியமென்னும் மிகவும் பெரிய அழகு உண்டாயிருப்பதால் இவ்வுலகு உண்டாயிருக்கிறது.

572. கண்ணோட்டத்துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. உ

உலகநடை தாட்சிணியத்திலிருக்கிறது. அது இல்லாதவர் உளராதல் பூமிக்குப் பாரம்.

573. பண்ணென்னும் பாடற் கியைபின்றேற் கண்ணென்னுங்
கண்ணோட்டமில்லாத கண். ௩

பண் - இசை. இயைபு - இசைவு.

இசை பாடலுக்கு ஒத்துவாராவிட்டால் என்னபயன். தயவு இல்லாதவிடத்தில் கண்ணால் என்னபயன்.

574. உளபோன் முகத்தெவன் செய்யுமளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். ௪

(தகும்) அளவினால் கண்ணோட்டமில்லாதகண் முகத்தில் உள்ளவைபோல் தோற்றினாலும் என்னசெய்யும்.

575. கண்ணிற் கணிகலங் கண்ணோட்டமஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். ௫

அணிகலம் - ஆபரணம்.

தாட்சிணியம் கண்ணுக்கு ஆபரணம்; அதில்லாவிட்டால் (கண்) புண்ணென்று நினைக்கப்படும்.



576. மண்ணோடியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்து கண் ணோடா தவர். ௬

அனையர் - ஒப்பானவர்.

கண்ணோடு பொருந்தியிருந்தும் தாட்சிணியமற்றவர் மண்ணோடு பொருந்தியிருக்கிற மரத்திற்கு ஒப்பாவார்.

577. கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில். ௭

தாட்சிணியமில்லாதவர் கண்ணற்றவர்; கண்ணுள்ளவர் கண்ணோட்டமில்லாதவராதலுமில்லை.

578. கருமஞ்சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. அ

சிதையாமல் - அழியாமல்.

(தமது) தொழில் கெடாமல் தாட்சிணியங் காட்டவல்லவர்க்கு இவ்வுலகு சொந்தமாகும்.

579. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண்ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. கூ

ஒறுத்து - துன்பப்படுத்தி.

தம்மை வருத்தப்படுத்துந் தன்மையையுடையவரிடத்திலுந் தாட்சிணியமுள்ளவராகிப் பொறுத்துக்கொள்ளுந் தன்மையே சிரேஷ்டம்.

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். ய

பெய - இட. அமைவர் - பொருந்துவார். நாகரிகம் - தயவு.

விரும்பப்படத்தக்க தாட்சிணியத்தை வேண்டுகிறவர்கள் (இஷ்டர்) நஞ்சிடக்கண்டும் அதைச்சாப்பிட்டு அவர்களோடு பொருந்தியிருப்பார்.





## 59. ஒற்றாடல்.

581. ஒற்றுமுரைசான்ற நூலுமிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். க

ஒற்று - வேவுகாரன். உரை - புகழ். தெற்றென்க - தெளியக்கடவான்.

அரசன் ஒற்றனும் புகழ்நிறைந்த நீதிநூலுமாகிய இவ்விரண்டையுந் தன் இருகண்களாகத் தெளியக்கடவான்.

582. எல்லார்க்குமெல்லா நிகழ்பவையெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். உ

நிகழ்பவை - நடப்பவை. வல் - விரைவில்.

எல்லாரிடத்திலும் நடப்பவைகளை எல்லாம் காலோ றஞ் சீக்கிரமாய் அறிந்துகொள்ளல் அரசன் தொழிலாம்.

583. ஒற்றினொற்றிப்பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். ௩

ஒற்றி - அறிந்து வரச்செய்து. கொற்றம் - வெற்றி.

ஒற்றனைக்கொண்டு (நடப்பவைகளை) அறிந்துவரச்செய்து (அவைகளால் வரும்) காரியத்தை ஆராயாத அரசன் வெற்றி அடைவதே இல்லை.

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதாரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று. ௪

(தம்முடைய) காரியஞ் செய்பவர், சுற்றத்தார், பகை வர் என்கிற எல்லாரையும் ஆராய்பவனே ஒற்றன்.

585. கடா அவுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகா அமை வல்லதே யொற்று. ரு

கடா - சந்தேகிக்கப்படாத. உகாமை - தெரிவி யாமை.

சந்தேகிக்கப்படாத உருவத்தோடு (ஒருவனின்) கண் ணிற்குப் பயப்படாது எக்காலத்திலும் மனதிலுள்ளவைகளை வெளியிடாமலிருக்கவல்லவனே ஒற்றனும்.

பொருட்பால். ௱௨௩

586. துறந்தார் படி வத்தராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. ௬

படிவத்தர் - விரதவொழுக்கத்தார்.

துறந்தவர்களையும் விரதவொழுக்கத்தாரையும் போலாகி உள்ளே நுழைந்து ஆராய்ந்து (அங்குள்ளோர்) என்னசெய் தாலுஞ் சோர்வில்லாதவனே ஒற்றனும்.

587. மறைந்தவை கேட்கவற்றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று. எ

வற்றாகி - வல்லவனாகி.

மறைவானவைகளைக்கேட்கவல்லவனாயிருந்து அறிந்தவை களில் சந்தேகமில்லாதவன் ஒற்றனுவான்.

588. ஒற்றொற்றித்தந்த பொருளையுமற்றுமோ
ரொற்றினாலொற்றிக்கொளல். ௮

ஒற்றித்தந்த - அறிவித்த.

ஒரொற்றன் மறைவாயறிந்துவந்த காரியத்தையும் (அரசன்) வேறொரு ஒற்றனால் அறிந்துகொள்ளக்கடவான்.

589. ஒற்றொற் றுணராமை யாள்கவுடன் மூவர்
சொற்றொக்க தேறப் படும். ௯

தொக்க - ஒத்திருந்தால்.

(அரசன்) ஒரு ஒற்றன் மற்றொரு ஒற்றனையறியாதபடிக்கு ஆளக்கடவான். மூவருடைய சொற்களும் ஒத்திருந்தால் (மெய்யென்று) தெளியப்படும்.

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை. ௰

(கட்; கண்). புறப்படுத்தான் - வெளிப்படுத்தின வன். மறை - இரகசியம்.

(அரசன்) ஒற்றனுக்குப்பிறர் அறியச்சிறப்புச் செய்யா திருக்கக்கடவன். செய்தால் இரகசியங்களைத்தானே வெளிப் படுத்தினவனாவான்.





## 60. ஊக்கமுடைமை.

591. உடையரெனப்படுவ தூக்க மஃதில்லா
ருடைய துடையரோ மற்று. ௧

உடையவரென்று சொல்லப்படுவது மனவெழுச்சியாம்; அதில்லாதவர் வேறுகாரியங்களை உடையவராயிருந்தாலும் உடையராகார்.

592. உள்ளமுடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். உ

மனவெழுச்சியுடைமை உடைமையாம். பொருளுடைமை நிற்காமல் நீக்கிப்போகும்.

593. ஆக்க மிழந்தேமென் றல்லவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார். ௩

அல்லவார் - மனம்வருந்தார். ஒருவந்தம் - உறுதியாய். கைத்து - கைப்பொருள்.

நிலையுள்ளதாகிய ஊக்கத்தைக்கைப்பொருளாக உடையவர் செல்வத்தை இழந்தவிட்டோமென்று வருத்தப்படார்.

594. ஆக்கமதர் வினாய்ச்செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை. ௪

அதர் - வழி. வினாய் - கேட்டுக்கொண்டு. உழை - இடம்.

அசைவில்லாத ஊக்கமுடையவனிடத்திற்குச் செல்வம் வழியைக்கேட்டுக்கொண்டுபோகும்.

595. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு. ௫

அனைய - அளவு.

மலரின் உயரஞ் சலத்தின் அளவாகும். மனிதர் உயர்வு அவர்கள் மனவெழுச்சியளவினதாம்.



596. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. ௬

(அரசன்) நினைப்பதெல்லாம் உயர்வையே நினைக்கவேண்டும். அது ஊழ்வகையால் கூடாமற்போனாலுந் தள்ளாமைக்குணமுடையதாம்.

597. சிதைவிடத் தொல்காருரவோர் புதையம்பிற் பட்டுப்பா டூன்றுங் களிறு. எ

சிதைவு - அழிவு. ஒல்கார் - தளரார். உரவோர் - அறிவோர். பாடு - பெருமை.

யானை அம்புக்கட்டிலுல் (புண்) பட்டாலுந் தனது பெருமையை நிலைநிறுத்தவதுபோல் மனவெழுச்சியுடைய வர் அழிவுவந்தகாலத்திலுந் தளரார்.

598. உள்ளமிலாதவ ரெய்தா ருலகத்து வள்ளிய மென்னுஞ் செருக்கு. அ

உள்ளம் - மனவெழுச்சி. வள்ளி - ஆபரணம். செருக்கு - மதிப்பு.

மனவெழுச்சியற்றவர் உலகத்தில் நாம் ஆபரணமாயிருக்கிறோமென்னும மதிப்படையார்.

599. பரியது கூர்ங் கோட்ட தாயினும் யானை வெரூஉம் புலிதாக் குறின். கூ

பரியது - பெரியது. கூர்ங்கோட்டது - கூர்மையான கொம்பையுடையது. வெருவும் - பயப்படும். தாக்குறின் - எதிர்ப்பட்டால்.

யானை பெரியதுங் கூர்மையான கொம்பையுடையதுமானாலும் புலி எதிர்ப்பட்டால் அதற்குப் பயப்படும்.

600. உரமொருவற்குள்ள வெறுக்கை யஃதில்லார் மரமக்க ளாதலே வேறு. ய

உரம் - ஞானம். வெறுக்கை - செல்வம்.

திட அறிவு ஒருவனுக்கு மனவெழுச்சியாம். அது இல்லாதவர் மரக்களாவார்; மனிதவடிவாயிருக்கைதான் வித்தியாசம்.





## 61. மடியின்மை.

601. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு மாசூர மாய்ந்து கெடும். க

விளக்கம் - விளக்கு. மடி - சோம்பல். ஊர - நெருங்க. மாய்ந்து - மழுங்கி.

குடியாசிய குறைவற்ற விளக்கு சோம்பலென்னும் மாசு நெருங்கினால் மழுங்கிப்போகும்.

602. மடியைமடியாவொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். உ
(மடியா: மடியாக.)

(தாம் பிறந்த) குடியை (நல்ல) குடியாக்க விரும்புப வர் சோம்பலைச்சோம்பலாகவே நினைத்து நடக்கக்கடவர்.

603. மடிமடிக் கொண்டொழுகும் பேதைபிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. ங

மடி - கேடு. மடியும் - மடிந்துபோகும்.

கேட்டைத்தருஞ் சோம்பலைத் தனக்குள் கொண்டுநடக் கும் பேதையானவன் பிறந்தகுடி அவனுக்கு முந்திக்கெடும்.

604. குடிமடிந்து குற்றம் பெருகுமடி மடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு. ச

மாண்ட - மாட்சிமைப்பட்ட. உஞற்று - முயற்சி.

சோம்பலில் விழுந்து மாட்சிமைப்பட்ட முயற்சியில்லாத வர்க்குக் குடிகெட்டுக் குற்றம் பெருகும்.

605. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன். ரு

நெடுநீர் - தாமதம். மறவி - மறதி. துயில் - தூக் கம். காமக்கலன் - விரும்பியேறுங் கப்பல்.

தாமதமும், மறதியும், சோம்பலும், தூக்கமும் ஆகிய நான்கும் கெட்டுப்போகுந் தன்மையையுடையவர் விரும்பி யேறும் மரக்கலமாம்.



606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடை
மாண்பய னெய்த லரிது. [யார் சு

படி - பூமி. பற்று - செல்வம்.

பூமியையுடையவர் செல்வம் வலிய வந்து சேர்ந்தா லுஞ் சோம்பேறிகள் மாட்சிமையுள்ள பிரயோசனத்தை யுடைவது அரிது.

07. இடிபுரிந்தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர். எ

இடிபுரிந்து - புத்திசொல்லி. எள்ளும் - இகழும்.

சோம்பலைவிரும்பி பெருமைபொருந்திய முயற்சியற்ற ார் கண்டித்துப் புத்திசொல்லி இகழுஞ் சொல்லைக்கேட்பார் கள்.

08. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். அ

(குடிமைக்கட்டங்கிற்றன்: குடிமைக்கண், தங்கில், தன்.) ஒன்னார் - பகைவர்.

சோம்பல் குடிமையையுடையவனிடத்தில் தங்கினால் து அவனைப் பகைஞர்க்கு அடிமையாக்கிவிடும்.

09. குடியாண்மையுள்வந்த குற்றமொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். கூ

ஒருவன் சோம்பலையாளுந் தன்மையை ஒழித்தால் அவன் டியின் ஆண்மையில் வந்த குற்றங் கெடும்.

10. மடியிலா மன்னவனெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. ம

றாஅயது (தாவியது) - கடந்தது.

சோம்பலற்ற அரசன் தன் அடியால் அளந்தகடவுள் ாவின எல்லாவுலகத்தையும் ஒருமிக்க அடைவான்.





## 62. ஆள்வினை யுடைமை.

611. அருமையுடைத்தென் றசாவாமைவேண்டும்
பெருமை முயற்சி தரும். க

அசாவாமை - தளராதிருக்கை.

இது அருமையானதென்று (நினைத்து) தளராதிருக்க வேண்டும். முயற்சி பெருமையைத்தரும்.

612. வினைக்கண் வினைகெட லோம்பல்வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. ௨

ஓம்பல் - ஒழிக்கக்கடவன்.

தொழிலாகிய குறையைச்செய்யாது விட்டவரை உலகம் நீங்கிவிடும். ஆதலால் ஒருவன் தொழிலில் முயற்சியற்றிருப்பதை ஒழியக்கடவான்.

613. தாளாண்மையென்னுந் தகைமைக்கட்டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. ௩

தாளாண்மை - முயற்சி. வேளாண்மை - உபகாரம்.

உபகாரஞ் செய்தலென்னும் மேன்பாடு முயற்சி என்னும் உயர்ந்த குணத்தினிடத்தில் தங்கியிருக்கிறது.

614. தாளாண்மையில்லாதான் வேளாண்மைபேடிகை
வாளாண்மை போலக் கெடும். ௪

முயற்சியில்லாதவனின் உபகாரத்தன்மை பேடியின் கையிலுள்ள வாளைப் போல் கெடும்.

615. இன்பம் விழையான் வினைவிழைவான்றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். ௫

கேள் - பந்து.

இன்பத்தை விரும்பாமல் தொழிலை விரும்புகிறவன் தன் சுற்றத்தாரின் துன்பத்தை நீக்கி அவர்களைத் தாங்குந் தூணாவான்.



16. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும். ௬

முயற்சி செல்வத்தை வளர்க்கும்; முயற்சியின்மை வறுமையை அடைவித்து விடும்.

17. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள். ௭

மாமுகடி - மூதேவி. தாள் - முயற்சி.

சோம்பலினிடத்தில் மூதேவியிருப்பாள். ஸ்ரீதேவி சோம்பலற்றவன் முயற்சியினிடத்திலிருப்பாள் என்பார்கள்.

18. பொறியின்மை யார்க்கும் பழியன்றறிவறிந்
தாள்வினை யின்மை பழி. அ

பொறி - விதி. ஆள்வினை - முயற்சி.

(செல்வத் தரும்) விதியில்லாமை யாவர்க்கும் பழியல்ல
றியவேண்டியவைகளை யறிந்த முயற்சியில்லாமை பழியாம்.

19. தெய்வத்தானாகாதெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். கூ

விதியால் ஆகாவிட்டாலும் முயற்சி தன் உடம்பு வருந்திய வருத்தத்தின் அளவு கூலியைத் தரும்.

20. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். ய

உப்பக்கம் - பின்பக்கம். உலைவு - இளைப்பு. உஞற்றுபவர் - முயல்பவர்.

இளையாமல் தாழ்வற முயல்வோர் விதியையும் புறம்பேருக்கக் காண்பார்கள்.







## 63. இடுக்கணழியாமை.

621. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில். க

நகுக - மகிழ. அடுத்து - மேலும்மேலும். ஊர்வது - நெருக்குவது.

துன்பம் வருங்காலத்தில் மகிழக்கடவாய். அதை மேலும்மேலும் நெருக்கக்கூடியது அதற்கு ஒப்பானது இல்லை.

622. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும். ௨

அனைய - ஒத்த.

வெள்ளத்தை ஒத்த துன்பம் அறிவுடையார் உள்ளத்தில் நினைக்கக் கெடும்.

623. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். ௩

படுப்பர் - உண்டாக்குவார்.

துன்பத்திற்கு வருத்தப்படாதவர் துன்பத்திற்குத் துன்பத்தை உண்டாக்குவார்.

624. மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து. ௪

மடுத்த - தடைப்பட்ட. பகடு - எருமைக்கடா. அன்னான் - போன்றவன்.

தடைப்பட்ட இடங்களிலெல்லாம் எருமைக்கடாபோல் இழுக்கிறவனை அடைந்த துன்பம் துன்பத்தையடையும்.

625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். ௫

மேலும்மேலும் வந்தாலுங் கலங்காதவனை யடைந்த துன்பம் துன்பத்தை யநுபவிக்கும்.



626. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர். ௬

அல்லல் - வருத்தம். (ஓம்புதறேற்றாதவர்: ஓம்புதல், தேற்றாதவர்).

(செல்வத்தைப்) பெற்றோமென்று உலோபஞ்செய்ய அறியாதவர் அற்றோமென்று வருத்தப்படுவாரா.

627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல். ௭

கையாறு - துன்பமாக. மேல் - பெருமை.

உயர்ந்தவர் இந்த உடம்பு துன்பத்திற்கு இலக்கு என்று அறிந்து துன்பத்தைத் துன்பமாகக்கொள்ளமாட்டார்.

628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன். அ

உறுதல் - அடைதல்.

இன்பமடைதலை விரும்பாமல் துன்பப்படுதலை இயற்கையென்று தெளிந்திருப்பவன் துன்பமடையான்.

629. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். கூ

இன்பத்தில் இன்பத்தை விரும்பாதவன் துன்பத்தில் துன்பமடையான்.

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு. ய

இன்னாமை - தீமை. விழையும் - விரும்பும்.

ஒருவன் துன்பத்தை இன்பமென்று கொள்ளுவானானால் தன் பகைஞர் விரும்புஞ் சிறப்புண்டாகும்.







## 64. அமைச்சு.

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு. க

கருவி - சாதனம். அமைச்சு - மந்திரித்தனம்.

(பொருளுஞ் சேனையும் ஆகிய) சாதனங்களும், காலமும், செய்கையும், செய்யப்படும் அரிய தொழில்களும் பொருந்தியவன் மந்திரி.

632. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. உ

வன்கண் - அசைவின்மை. ஆள்வினை - முயற்சி.

அசைவின்மை, குடியைக்காத்தல், கற்றறிதல், முயற்சி யோடு மேலே சொன்ன ஐந்தையும் உடையவனே மந்திரி.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. ௩

பிரிக்கவும், காத்துக்கொள்ளவும், பிரிந்தவரைப்பொருந் தச் செய்யவும் வல்லவனே மந்திரி.

634. தெரிதலுந் தேர்ந்து செயலுமொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. ௪

தலையா - உறுதியாக.

ஆராய்தலும், நாடிச்செய்தலும், உறுதியாகச் சொல்ல லும் வல்லவனே மந்திரி.

635. அறனறிந்தான்றமைந்தசொல்லானெஞ்ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சி துணை. ௫

ஆன்று - நிறைந்து. தேர்ச்சி - ஆலோசனை.

தர்மங்களை யறிந்து நிறைந்தமைந்த சொல்லையுடையவ னாகி எந்நாளிலுந் தொழில் செய்யுந் திறங்களை யறிந்தவன் ஆலோசனைக்குத் துணையாவான்.



636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதி நுட்பம்
யாவுள முன்னிற் பவை. ௬

நுட்பம் - நுண்மை.

இயற்கையான புத்தி நுட்பத்தை நூலறிவோடு உடை யவர்க்கு அதிநுட்பமான எந்த ஆலோசனை முன்னிற்கும்.

637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல். ௭

கடைத்தும் - காலத்திலும்.

ஒரு தொழிலைச்செய்யுந் திறத்தை யறிந்திருந்தாலும் உலக நடையையறிந்து செய்யவேண்டும்.

638. அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். அ

அறி - அறிவை. உழை - பக்கம்.

(அரசன்) அறிவைத்தள்ளி அறியாதவனுயிருந்தாலும் உறுதியானவைகளைச் சொல்லல் மந்திரி கடமை.

639. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். கூ

தெவ் - பகைஞன்.

(அரசனுக்கு) பக்கத்திலிருந்து பழுது நினைக்கும் மந்திரிக்குள் எழுபது கோடிபகைவர் இருப்பார்கள்.

640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பாடி லாஅ தவர். ம

செய்யுந் திறமையில்லாதவர் தகுந்தபடி ஆலோசித்தும் முடிவில்லாமலே செய்வார்கள்.





## 65. சொல்வன்மை.

641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று. க

நாவின் நலமென்று சொல்லப்படும் நன்மை ஆக்கமாகும்; அந்நலம் மற்ற நலங்கள் எல்லாவற்றிலும் மிகுந்தது.

642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. உ

ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால் அவன் சொல்லி லிடத்தில் சோர்வு வராமல் காக்கக்கடவன்.

643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல் ௩

பிணிக்கும் - கட்டும். வேட்ப - விரும்ப.
கேட்டவர்களைக் கட்டுந் தன்மையையுடையவைகளாகிக் கேளாதவரும் விரும்பும்படி சொல்வதே சொல்.

644. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில். ௪

சொல்லை (க்கேட்பார்) திறனறிந்து சொல்லக்கடவன். அதற்கு மேற்பட்ட நன்மையும் பொருளுமில்லை.

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொலச்சொல்லை
வெல்லுஞ் சொலின்மை யறிந்து. ௫

பிறிது - வேறு.
(தாம்) சொல்லுஞ் சொல்லை வெல்லத்தக்க வேறோர் சொல் இல்லாமையை அறிந்து சொல்லக்கடவன்.



646. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற்பயன்கோ
மாட்சியின் மாசற்றார் கோள். [டன் ௬

கோடல் - கொள்ளுதல்.
பிறர் விரும்பத்தாம் சொல்லி மற்றவர்கள் சொல்லின் பயனைக்கொள்ளுதல் மாட்சிமையுள்ளவரது கொள்கையாம்.

647. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல் வெல்லல் யார்க்கு மரிது. ௭

இகல் - போர்.
சொல்லில் வல்லவனுஞ் சோர்வில்லாதவனுமாகிச்சபைக்கு அஞ்சாதவனை மாறுபாட்டால் வெல்லுதல் யார்க்கும் அரிதாகும்.

648. விரைந்து தொழில் கேட்கு ஞாலநிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். ௮

நிரந்து - வரிசையாகக்கோத்து.

உலகம் வரிசையாய்க்கோத்து இனிமையாகச்சொல்லு தலில் வல்லவரைப்பெற்றால் சொல்லப்படுங் காரியங்களை விரைந்து கேட்கும்.

649. பலசொல்லக் காமுறுவர் மன்றமாசற்ற
சில சொல்ல றேற்றா தவர். ௯

காமுறுவர் - இச்சிப்பர்.

குற்றமற்ற சில சொற்களைச்சொல்ல அறியாதவர் பல வார்த்தைகளைச்சொல்ல விரும்புவார்கள்.

650. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். ௰

இணர் - கொத்து. ஊழ்த்து - மலர்ந்து. நாறா - வாசனையில்லாத.

கற்றதுகளைப்பிறர் அறியும்படிக்கு விரித்துச்சொல்லக் கூடாதவர் கொத்தில் மலர்ந்திருந்தும் மணக்காத பூவுக்கு ஒப்பாவார்.





## 66. வினைத்தூய்மை.

651. துணைநலமாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும். ௧

(தரூஉம் - தரும்.)

துணையின் நலம் செல்வந்தரும். தொழிலின் நலம் வேண் டியவைகளையெல்லாங் கொடுக்கும்.

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. ௨

ஒருவுதல் - ஒழிதல். பயவா - தராத.

புகழையும் நன்மையையுந் தராததொழில்களை (ஒருவன்) எக்காலத்திலும் விட்டுவிடவேண்டும்.

653. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர். ௩

ஓஒதல் (ஓதல்) - ஒழிதல். மாழ்கும் - கெடும்.
யா அதும் (ஆதும்) - ஆவோம்.

மேலாகக்கடவோமென்று நினைப்பவர் தங்கள் கீர்த்தி கெடுவதற்கு (க்காரணமாகிய) தொழிலை விட்டுவிடவேண்டும்.

654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். ௪

அசைவற்ற அறிவினையுடையவர் துன்பப்பட்டாலும் இழிவான காரியங்களைச் செய்யமாட்டார்கள்.

655. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. ௫

எற்று - எது.

எப்படிப்பட்டதோவென்று (பின்) வருத்தப்படுபவைகளைச் செய்யாதிருக்கக்கடவான். செய்வானானால் பின்பு அப்படிப்பட்டவைகளைச் செய்யாமை நன்று.



656. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. ௬

தாய் பசித்திருக்கக் காண்பானாயினும் அறிவுடையோர் பழிக்குஞ் செய்கையைச்செய்யாதிருக்கக்கடவன.

657. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. ௭

மலைந்து - மேற்கொண்டு. நல்குரவு - வறுமை.
கழி - மிகுந்த.

பழியைத்தம்மேற்கொண்டு பெற்றசெல்வத்தைப்பார்க்கிலும் அறிவுடையோரின் மிகுந்தவறுமையே சிரேஷ்டம்.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கவைதா
முடிந்தாலும் பீழை தரும். அ

ஓரார் - நீக்கார். பீழை - துன்பம்.

(நூலோர்) தள்ளியதொழில்களை தள்ளிவிடாமற் செய்தவர்களுக்கு அவை முடிந்தாலும் துன்பத்தைக்கொடுக்கும்.

659. அழக்கொண்டவெல்லாமழப்போ மிழப்பினும்
பிறபயக்கு நற்பா லவை. கூ

(பிறர்) அழும்படி சம்பாதித்த பொருளெல்லாம் அழும்படி போய்விடும். நல்லதொழிலால்வந்த பொருளை இழந்தபோதிலும் பிறபாடு பயன் கொடுக்கும்.

660. சலத்தாற் பொருள் செய்தே மார்த்தல்பசுமட்
கலத்துணீர் பெய்திரீ இ யற்று. ய

சலம் - பொய். கலம் - பாத்திரம். இரீஇ (இருத்தி) - தங்கி.

வஞ்சனையால் பொருள் சம்பாதித்தது காப்பாற்றல் பச்சைமண்பாத்திரத்தில் தண்ணீரை ஊற்றிக்காத்ததுபோல் ஆகும்.





## 67. வினைத்திட்பம்.

661. வினைத்திட்ப மென்பதொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற. க

திட்பம் - வலிமை.

தொழில் வலிமையென்னப்படுவது ஒருவன் மனவலிமையாம். மற்றதுகளெல்லாம் அதற்கு நிகரல்ல.

662. ஊறொரா லுற்ற பினொல்காமையிவ்விரண்டி
னாறென்பராய்ந்தவர் கோள். உ

ஊறு - பழுது. ஓரால் (ஒருவல்) - ஒழிதல். ஒல்காமை - தளராமை.

(சிறிதாக்கலை) ஆராய்ந்தறிக்கவரின் கொள்கை, பழுதுபடுக்கொழிலை ஒழிதலும் பழுதுபட்டால் தளராமையுமாகிய இவ்விரண்டின் வழியென்பார்.

663. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மையிடைக்
கொட்கி னெற்றா விழுமந் தரும். ௩

கொட்க - அறியும்படி. கொட்கின் - அறிந்தால். எற்றா - நீங்காத. விழுமம் - துன்பம்.

(ஒருதொழிலை மற்றவர்கள்) முடிவில் அறியும்படி செய்யத்தக்கது ஆண்மையாகும். மத்தியில் வெளிப்பட்டால் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

664. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். ௪

சொல்லுகிறது எல்லாருக்கும் எளிதாகும்; சொல்லியபடிசெய்தல் அரிதாகும்.

665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும். ௫

வீறு - சிறப்பு. எய்தி - பெற்று. ஊறு - மதிப்பு.

சிறப்படைந்த மாட்சிமைப்பட்டவரின் தொழில்வலிமை அரசனால் நன்குமதிக்கப்படும்.



666. எண்ணிய வெண்ணியாங் கெய்துபவெண்ணியார்
திண்ணி யராகப் பெறின். ௬

திண்ணியர் - வலியர்.

தொழிலில் பலமுடையவராயிருந்தால் எண்ணியவர்கள் எண்ணியகாரியங்களை எண்ணியபடி அடைவார்கள்.

667. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்
தேர்க் கச்சாணி யன்னா ருடைத்து. ௭

எள்ளாமை - இகழாமை.

வடிவைப்பார்த்து இகழாதிருக்கவேண்டும்; (உலகம்) உருளுகிற பெரியதேருக்கு அச்சினிடத்தில் சுள்ளாணியைப் போல் இருக்கிறவர்களை உடையது.

668. கலங்காது கண்டவினைக்கட்டுளங்காது
தூக்கங் கடிந்து செயல். அ

துளங்காது - அசையாமல்.

(மனம்) கலங்காமல் துணிந்த தொழிலினிடத்தில் அசைதலின்றி ஆலசியத்தை நீக்கிச்செய்யக்கடவன்.

669. துன்பமுறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை. கூ

உற - மிகவும்.

துன்பம் மிகவும் வந்தாலும் இன்பத்தைக்கொடுக்குந் தொழிலைத் துணிவுடையவனாய்ச் செய்யக்கடவன்.

670. எனைத்திட்பமெய்தியக்கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு. ய

தொழில்வலிமையற்றவர் மற்றவலிமைகளையெல்லா முடையவர்களாயிருந்தாலும் அவர்களைப் பெரியோர் விரும்பார்கள்.





## 68. வினைசெயல்வகை.

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்தலத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது. க

சூழ்ச்சி - ஆலோசனை.

ஆலோசனைக்கெல்லைத் துணிவடைதல். அத்துணிவு ஆலசியப்படுதல் தீதாகும்.

672. தூங்குக தூங்கிச்செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. ௨

ஆலசியித்துச் செய்யுந் தன்மையையுடைய தொழில்களை ஆலசியித்துச் செய்யக்கடவான். ஆலசியஞ் செய்யாமல் செய்யுந தொழிலை ஆலசியஞ் செய்யாதிருக்கக்கடவான்.

673. ஒல்லும்வாயெல்லாம் வினைநன்றேயொல்லாக்கால்
செல்லும் வாய் நோக்கிச் செயல். ௩

ஒல்லும் - கூடும்.

கூடும் இடங்களிலெல்லாந் (தொழிலை விரைவில்) செய்தல் நல்லது. கூடாவிட்டால் அது முடியும் உபாயம் நோக்கிச்செய்யக்கடவன்.

674. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும் ௪

எச்சம் - குறை. தெறும் - கெடுக்கும்.

தொழில், பகையென்னும் இரண்டின் குறையை ஆராய்ந்தால் அது தீயின் குறைபோலக் கெடுக்கும்.

675. பொருள் கருவிகாலம் வினையிடனொடைந்து
மிருடீர வெண்ணிச் செயல். ௫

இருடீர (இருள்,தீர) - சந்தேகந் தீர்தலை.

பொருள், சாதனம், காலம், தொழில், இடம் ஆகிய ஐந்தையும் மயக்கமற எண்ணிச்செய்யக்கடவன்.



676. முடிவுமிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். ௬

தொழில் முடிவையும் அதற்குண்டாகும் இடையூற்றையும் முடித்தால் வரும் பயனையும் ஆராய்ந்துபார்த்துச் செய்யக்கடவன்.

677. செய்வினை செய்வான் செயன்முறையவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல். எ

செய்யப்படுந் தொழிலைச்செய்பவன் செய்யும் முறையாவது அத்தொழிலில் உள்ளவைகளை யறிபவனின் கருத்தை யறிதலாம்.

678. வினையான் வினையாக்கிக் கோடனனைகவுள்
யானையால் யானையார்த் தற்று. அ

நனைகவுள் - நனைந்தகபோலம். ஆர்த்தற்று - கட்டுதல் போல.

ஒருதொழிலால் வேறொருதொழிலைமுடித்துக்கொள்ளல் நனைந்த கபோலத்தையுடைய யானையால் வேறொரு யானையைக் கட்டுதல் போலாம்.

679. நட்டார்க்கு நல்லசெயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல் கூ

சிநேகிதருக்கு நல்லவைகளைச் செய்தலிலும் பகைவரைச் சிநேகிதராக்கிக் கொள்ளுதல் விரைவில் செய்யத் தகுவதாம்.

680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. ய

கொஞ்சமிடமுடையவர் தங்களுடையவரின் நடுங்குதலுக்கு அஞ்சிச்சமாதானப்பட்டால் பெரியவரைப்பணிந்து அதை ஏற்றுக்கொள்ளுவார்.





## 69. தூது.

681. அன்புடைமையான்ற குடிப் பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. க

ஆன்ற - சிறந்த. அவாம் (அவாவும்) - விரும்பும்.

அன்புடைமை, சிறந்தகுடியில் பிறத்தல், இராசாக்கள் விரும்பும் நற்குணமாகிய இவை தூதுக்கு இலட்சணமாம்.

682. அன்பறிவாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்
பின்றி யமையாத மூன்று. [பார்க் உ

இன்றி அமையாத - அவசியம்வேண்டிய.

அன்புடைமையும், அறிவுடைமையும், ஆராய்ந்தவற்றைச் சொல்லுந் திறமுந் தூதுக்கு அவசியம்வேண்டிய மூன்றும்.

683. நூலாருணூல் வல்லனாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. ௩

வேலார் - வேலாயுதத்தையுடையவர்.

வெலினையுடையவரிடத்தில் வெற்றியைத் தருகிறதொழிலைச் சொல்லுகிறவனுக்கு இலட்சணம் நூலையறிந்தவரிடத்தில் நூலில் வல்லவனாகுதலாம்.

684. அறிவுரு வாராய்ந்த கல்வி யிம்மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு. ௪

செறிவு - கூட்டம்.

அறிவும் உருவமும் ஆராய்ந்த கல்வியும் ஆகிய மூன்றையும் அதிகமாகவுடையவன் தூதத்தொழிலுக்குச்செல்லக்கடவான்.

685. தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச் சொல்லி
நன்றி பயப்பதாந் தூது. ௫

தூவாத - பகையான. நக - மகிழ.

தொகுத்துச்சொல்லிப் பகையானசொற்களைத்தள்ளிமகிழும்படி உரைத்து நன்மையைச் செய்பவன் தூதன்.

686. கற்றுக் கண் ணஞ்சான் செலச் சொல்லிக் காலத்
தக்க தறிவதாந் தூது. [தாம் ௬

(நூற்களைப்) படித்து மனங்கொள்ளச்சொல்லிக் கோபப்பார்வைக்குப் பயப்படாதவனுகிக் காலத்துக்குத் தக்கதையறிபவன் தூதன்.

687. கடனறிந்து காலங்கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. எ

(செய்யும்) முறையறிந்து சமயம்பார்த்து இடமறிந்து எண்ணிச்சொல்லுகிறவன் சிரேஷ்ட தூதன்.

688. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. அ

தூய்மையும், துணைமையும், துணிவுடைமையுமாகிய மூன்றோடு கூடிய மெய்மையும் வழிசொல்பவனுக்கு இலட்சணமாம்.

689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். கூ

வடு - பழுதான. மாற்றம் - சொல்.

பழுதான மொழிகளை வாய்சோர்ந்துஞ் சொல்லாத பல முடைய தூதன் (தன்னைசமான) சொன்னபடியே வேற்று அரசருக்குச் சொல்ல வல்லவனுவான்.

690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. ய

இறுதி - முடிவு. எஞ்சாது - அஞ்சிவிடாமல். உறுதி - பிரயோசனம்.

தனக்கு முடிவுவந்தாலும் பயப்படாமல் தன் அரசனுக்குப் பிரயோசனம் வருபவைகளைச் சொல்பவன் தூதன்.



## 70. மன்னரைச்சேர்ந் தொழுகல்.

691. அகலாதணுகாது தீக்காய் வார்போல்க
விகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். க

இகல் - மாறுபாடு.

மாறுபாட்டையுடைய அரசரைச்சேர்ந்து நடக்கிறவர்கள் அகலாமலும் அணுகாமலும் நெருப்பில் குளிர்காய்கிறவர்களைப் போலிருக்கவேண்டியது.

692. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். உ

மன்னிய - நிலைபெற்ற.

அரசன் விரும்பினவைகளைதான் விரும்பாதிருத்தல் அவ்வரசனும் நிலைபெற்ற செல்வத்தைக்கொடுக்கும்.

693. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. ௩

போற்றின் - காக்கவிரும்பினால். கடுத்த - சந்தேகித்த.

தங்களைக்காத்துக்கொள்ள விரும்புகிறவர் அரியபிழைகள் தங்களிடத்தில் வாராமல் காக்கக்கடவார். (வந்தபின்பு) சந்தேகித்தவரைத் தெளிவித்தல் எவர்க்கும் அரிதாகும்.

694. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழு
கான்ற பெரியா ரகத்து. ௪

ஆன்ற - நிறைந்த.

கல்வியால் நிறைந்தவரிடத்தில் காதில் சொல்லுதலையும் பிறரைப்பார்த்துச் சிரித்தலையும் நீக்கி நடக்கக்கடவன்.

695. எப்பொருளுமோரார் தொடரார் மற்றப்பொருளை
விட்டக் காற்கேட்க மறை. ௫

ஓரார் - ஆராயாதவர்.

எந்தப்பொருளையாகிலும் ஆராயாமலும் முடுகினவாமலுமிருந்து (அரசன்) அப்பொருளைச்சொன்னால் இரகசியத்தைக்கேட்கக்கடவன்.

696. குறிப்பறிந்து காலங்கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். ௬

வேட்ப - விரும்புபவை.

குறிப்பறிந்து சமயம்பார்த்து வெறுப்பில்லாதவைகளையும் வேண்டியவைகளையும் (அரசன்) விரும்பிக்கேட்கும்படி சொல்லவேண்டும்.

697. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். எ

வினை - பிரயோசனம்.

(அரசன்) விரும்பியவைகளைச் சொல்லிப் பயனற்றவை களை எக்காலத்தில் கேட்டாலுஞ் சொல்லாதிருக்கக் கட வான்.

698. இளையரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும். அ

இவர் எனக்கு இளையவர், இன்னமுறையினர் என்று அரசனை இகழாமல் அவருக்குத் தகுந்த மரியாதையாய் நடக்க வேண்டும்.

699. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத
துளக்கற்ற காட்சி யவர். [செய்யார் கூ

துளக்கு - அசைவு.

அசைவற்ற அறிவுடையவர் அரசனால் மதிக்கப்பெற்றோ மென்று நினைத்து (அவன்) விரும்பாதவைகளைச் செய்யமாட் டார்கள்.

700. பழையமெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமைகேடு தரும். ௰

கெழுதகைமை - உரிமை.

அரசனுக்குப்பழைய இஷ்டரென்று நினைத்துப் பண்பல் லாதவைகளைச் செய்யும் உரிமை கெடுதியைத்தரும்.







## 71. குறிப்பறிதல்.

701. கூறாமை நோக்கிக் குறிப்பறிவானெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி. க

(வையக்கு - வையத்துக்கு).

அரசன் குறிப்பை அவன் சொல்லாமலே அறிந்துகொள்ளுகிறவன் எக்காலும் வற்றாநீரால் சூழப்பட்டிருக்கிற பூமிக்கு ஆபரணமாவான்.

702. ஐயப்படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். ௨

(ஒருவன்) மனதிலிருப்பதைச் சந்தேகப்படாமல் அறிய வல்லவனைத் தெய்வத்துக்குச் சமானமாகக் கொள்ள வேண்டும்.

703. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். ௩

தமது குறிப்பால் பிறர் குறிப்பை யறிவாரை அரசர் தங்கள் (பொருள்நாடுமுதலிய) அங்கங்களுள் எதையாவது கொடுத்தாகிலுங் கொள்ளக்கடவர்.

704 குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு. ௪

ஒருவன் மனதில் நினைத்ததைச்சொல்லாமல் அறியவல்லவரோடு மற்றவர்கள் அவயவத்தால் ஒரு தன்மையாக ஒத்திருந்தாலும் அறிவால் வேறு ஆவார்.

705. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண். ௫

வாயின் - விட்டால்.

தன் குறிப்பால் பிறர் குறிப்பை அறியாவிட்டால் அவயவங்களுள் கண் என்ன பயன் செய்யும்.

பொருட்பால். ரு.௦ ௪

706. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். ௬

கடுத்தது - மிகுந்தது.

தனக்கருகிலுள்ளதைக் காட்டும் கண்ணாடியைப்போல மனதில் மிகுந்திருப்பதை முகங் காட்டும்.

707. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். எ

முதுக்குறைந்தது - அறிவுமிகுந்தது.

முகத்தைப்போல அறிவு மிகுந்தது உண்டா. (உயி) விரும்பினாலும் வெறுத்தாலும் தான்முற்பட்டு நிற்கும்.

708. முகநோக்கி நிற்க அமையும் அகநோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின். அ

அமையும் - போதும்.

மனதைக்குறிப்பால் அறிந்து அதிலுள்ளதைத் தெரிந்து கொள்வாரைப்பெற்றால் அவர் முகத்தைப்பார்த்து நிற்கப் போதும்.

709. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்
வகைமை யுணர்வார்ப் பெறின். [ணின் கூ

வகைமை - தன்மை

பார்வையின் தன்மையை அறியவல்லவரைப் பெற்றால் பகையையும் நட்பையும் கண் உரைக்கும்.

710. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற. ய

நுட்ப அறிவுடையவராயிருக்கிறோமென்பவர் அளக்குங் கோலாவது பார்க்குமிடத்து கண்ணல்லாமல் வேறே இல்லை.

]10



## 72 அவையறிதல்.

711. அவையறிந்தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். க
அவை - சபை.

சொல்லின் தொகையை யறிந்த சுத்தகுணமுடையவர் சபையை யறிந்து ஆராய்ந்துபார்த்துச் சொல்லக்கடவர்.

712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுகசொல்லி
னடைதெரிந்த நன்மை யவர். உ
இடை - சமயம்.

சொல்லின் நடையை அறிகிற நன்மையை யுடையவர் சமயம் அறிந்து நன்குணர்ந்து சொல்லக்கடவர்.

713. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர்சொல்
வகையறியார் வல்லதூஉ மில. [லின் ௩

சபையின் தன்மையை அறியாதவர்களாய (ஒன்றைச்) சொல்ல முந்திக்கொள்ளுகிறவர்கள் சொல்லின்வகையை அறியாதவர்கள்; அவர்களுக்கு வலிமையுமில்லை.

714. ஒளியார்முன் னொள்ளிய ராதல்வெளியார்முன்
வான் சுதை வண்ணங் கொளல். ச
வெளியார் - அறியாதவர். வான் - வெள்ளை. சுதை - சுண்ணச்சாந்து. வண்ணம் - நிறம்.

அறிவாளிகளின் சபையில் அறிவுடையவரா யிருக்கக்கடவர். மடையர் சபையில் வெண்மையான சுண்ணச்சாந்தின் நிறத்தைக் கொள்ளக்கடவர்.

715. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. ரு
முதுவருள் - தேர்ந்தவர்சபையில். கிளவா - சொல்லாது. செறிவு - அடக்கம்.

முதிர்ந்த அறிவையுடையவர் சபையில் முற்பட்டுச்சொல்லாத அடக்கம் நன்மை என்றவற்றிலும் நன்மையாம்.

716. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. சா
வியன் - விரிந்த. புலம் - பொருள். இழுக்கு - வழுவு.

விரிந்த நூற்பொருளை உட்கொண்டு உணர்பவருக்கு முன் சொல்லிழுக்குப்படுதல் நல்லவழியினின்று ஒருவன் நிலைதளர்ந்து விழுதல் போலும்.

717. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. ௭

குற்றமில்லாமற் சொற்களை ஆராய வல்லவரிடத்தில கற்றறிந்தவரது கல்வி விளங்கும்.

718. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. ௮

உணர்வை உடையவருக்குமுன சொல்லுதல் வளரும் பயிருள்ள பாத்தியில் நீரை விட்டாற்போலும்.

719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்ல
வையு ணன்கு செலச்சொல்லு வார். ௯

புல் - அற்ப.

நல்லவர் சபையில் நல்ல பொருளை மனங்கொள்ளச் சொல்லுகிறவர்கள் கீழ்மக்கள் சபையில மறந்துஞ் சொல்லாதிருக்கக்கடவர்.

720. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். ௰

அங்கணம் - முற்றம். உக்க - விழுந்த. கணத்தார் - இனத்தார். கோட்டிகொளல் - சொல்லல்.

தமது இனத்தாரல்லாதவருக்குமுன் சொல்லுதல் அழுக்கு முற்றத்தில்விழுந்த அமிர்தத்தை யொக்கும்.



## 73. அவை யஞ்சாமை.

721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். ௧

சொற்களின் தொகையையறிந்த சுத்தமுடையவர் சபையின்வகையை யறிந்து கற்றவர்சபையில் பிழைபடச்சொல்

வார்.

722. கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். உ

கற்றவர் சபையில் தாம் படித்தவைகளை அவர் மனங் கொள்ளச்சொல்லுகிறவர்கள் கற்றவருள் கற்றவரெனப்படு வார்.

723. பகையகத்துச் சாவா ரெளியரரிய
ரவையகத் தஞ்சா தவர். ௩

எளியர் - பலர். அரியர் - சிலர்.
பகையிடத்தில் சாகவல்லவர் பலர்; சபையினிடத்தில் அஞ்சாதவர் சிலர்.

724. கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். ௪
மிக்கார் - அதிகமாய்க்கற்றவர்.
படித்தவர் சபையில் தாம் படித்தவைகளை (அவர்கள்) மனங்கொள்ளும்படி சொல்லிக்காட்டி, தாம் படித்தவைகளி லும் அதிகமானவைகளைக் கற்றவரிடத்தில் கொள்ளக்கடவர்.

725. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. ௫

மாற்றம் - உத்தரவு.
சபையில் பயப்படாமல் எதிர்மொழி சொல்லும் பொருட்டு தருக்கவழியால் அளவை நூலை யறிந்து கற்கக்கடவர்.

726. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொ
டென் நுண்ணவை யஞ்சு பவர்க்கு. ௬

வன் கண்ணா - வீரர்.
வீரரல்லாதவர்க்கு வாளாயுதத்துடன் என்ன சம்பந்தம். நுட்பமுடையவராகிய சபைக்குப் பயப்படுவோர்க்கு நூலுடன் என்ன சம்பந்தம்.

727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். ௭

ஒள் - கூர்.

சபைநடுவில் பயப்படுகிறவன் படித்த நூல் யுத்தக்களத்தில் பேடிகையிலுள்ள கூர்மையான வாளை ஒக்கும்.

728. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார். ௮

பயம் - பயன்.

நல்லவர்சபையில் நல்லவைகளை (அவர்கள்) மனங்கொள்ளச் சொல்லாதவர்கள் பல நூல்களைப் படித்தாலும் பயனில்லாதவராவர்.

729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். ௯

படித்திருந்தும் நல்லவர்சபைக்குப் பயப்படுகிறவர்களை மூடரினும் இழிந்தவர்கள் என்று சொல்லுவார்கள்.

730. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். ௰

உளர் - உயிர். களன் - கூட்டம்.

சபைக்குப்பயந்து தாம் படித்தவைகளை மனங்கொள்ளச் சொல்லாதவர்கள் உயிரோடிருந்தாலும் இறந்தவருக்கு ஒப்பாவார்.



## 71. நாடு

731. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு.

தள்ளா - குறையாத.

குறைவின்றி விளைவிப்போரும் அறவோருங் குறைவற்ற செல்வமுடையோருங் கூடி வாழ்வதே நாடாம்.

732. பெரும்பொருளாற் பெட்டக்க தாகியருங்கேட்
டாற்ற விளைவது நாடு [டா உ

பெட்டக்க (பெள், தக்க.)-விரும்பத்தக்க. ஆற்ற-மிக.

பெரும்பொருளுடைமையால் விரும்பப்படத் தக்கதாகிக் கேடில்லாமையாய் கூடி மிக விளைவதே நாடாம்.

733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறை
யிறையொருங்கு நேர்வது நாடு. [வற் ௩

பொறை - பாரம். ஒருங்கு-ஒரேகாலத்தில். நேர்வது-கொடுப்பது.

பாரமெல்லாம் ஒரேகாலத்தில் தன்மேல்வந்தாலுந் தாங்கித் தன் அரசனுக்குவரிமுழுமையையுங்கொடுப்பதே நாடாம்.

734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. ௪

உறு - அதிகம். ஓவா - நீங்காத. செறு - கொல்லும்.

அதிகப்பசியும், நீங்காத நோயும், அழிவு செய்யும்பகையுஞ் சேராமல் இருப்பதான நாடு.

735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்த
கொல்குறும்பு மில்லது நாடு. [லைக்குங் ௫

குழு - கூட்டம். அலைக்கும் - துன்பப்படுத்தும். குறும்பு - வழியில் பறிக்கும் கள்ளர்.

(மாறுபட்டிருக்கும்) பலகூட்டமும் பாழாக்கும் உட்பகையும் அரசனை வருத்தப்படுத்துங் கொலைக்குறும்பரும் இல்லாததே நாடாகும்.

736. கேடறியாக் கெட்டவிடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. ௬

வளம் – செழிப்பு. குன்றா – குறையாத.

கேடறியாததுங் கெட்டகாலத்தில் செழிப்பு குறையாததுமான நாட்டை எல்லா நாடுகளுக்குந் தலை என்பார்கள்.

737. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணு நாட்டிற் குறுப்பு. ௭

புனல் — சலம். உறுப்பு — அவயவம்.

கீழ்நீரும் மேல்நீருஞ் சேர்ந்தமலையும் அதிலிருந்து வருஞ் சலமும் பலமான சுவரும் நாட்டிற்கு உறுப்பாகும்.

738. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. அ

ஏமம் — காவல்.

நோயில்லாமையும், செல்வமும், விளைவும், இன்பமும், காவலும் ஆகிய ஐந்தையும் நாட்டிற்கு ஆபரணமென்பார்கள்.

739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. சு

தேடிவருந்தாத செல்வத்தைக் கொடுப்பதை நாடு என்டார்கள். தேடிவருந்த செல்வத்தைத் தரும் நாடு நாடல்ல.

740 ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. ம

அரசனோடு பொருந்துதலில்லாத நாடு மேற்சொன்ன இலட்சணங்களோடு கூடியிருந்தாலும் பிரயோசனமில்லை.



## 75. அரண்.

741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். க

ஆற்றுபவர் — போர்செய்பவர்.

கோட்டையானது பகைவர் மேல் செல்லுவோர்க்குஞ் சிறந்ததாகும்; பயந்து தன்னை அடைவோர்க்குஞ் சிறந்ததாகும்.

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண். உ

மணி — தெளிந்த. அணி — அடர்ந்த.

தெளிந்த நீரும் வெளி நிலமும் மலையும் அடர்ந்த நிழல் காடும் உடையது கோட்டை.

743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்று ரைக்கு நூல். ௩

திண்மை — வலி. அமைவு — நிறைவு.

உயரமும் அகலமும் வலிமையும் அருமையுமாகிய இந் நான்கின் நிறைவையுடையதைக் கோட்டையென்று நூல் சொல்லும்.

744. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். ௪

ஊக்கம் — வலி.

காக்கவேண்டிய இடஞ் சிறிதாய் அகன்ற இடத்தை உடையதாகித் தன்னைச் சூழ்ந்த பகைவரின் தைரியத்தை அழிப்பது கோட்டையாம்.

745. கொளற்கரிதாய்க்கொண்டகூழ்த்தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண். ௫

கூழ் — உணவு

(பகைவர்களால்) கொள்ளுதற்கரிதாய பலவித உணவுகளை யுடையதாகி உள்ளே இருக்கிறவர்கள் (போர்செய்ய) எளிதாகிய தன்மையையுடையதே கோட்டையாம்.

746. எல்லாப் பொருளுமுடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண். ௬

சகல பொருள்களுமுடையதாகித் தோற்ற காலத்தில் உதவும் நல்லவீரரையுடையதே கோட்டையாம்.

747. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண். ௭

முற்றியும் — சூழ்ந்தும். முற்றாது — சூழாமல். எறிந்து — போர்செய்து. அறைப்படுத்தும் — கீழறைசெய்தும்.

(பகைவர்) சூழ்ந்துஞ் சூழாமலும் போர்செய்துங் கீழ

யுந்தத் திறப்பிந்தும் பிடித்துக்கொள்ளுதற்கு அரியதா கோட்டையாம்.

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண். அ

சூழ்தலில் வல்லவராகிச் சூழ்ந்தோரை உள்ளிருப்போர் பற்றிய விடம்விடாமல் நின்றும்பார்செய்து வெல்லும் இடமுடையதே கோட்டையாம்.

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண். கூ

மாற்றலர் - பகைவர். வீறு - பெருமை.

போர்க்களத்தில் பகைவர் அழியும்படி தொழில் வேறுபாடுகளால் பெருமைபெற்றுச் சிறந்ததே கோட்டையாம்.

750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். ய

எனை - எவ்வளவு.

கோட்டையானது எவ்வளவு மாட்சிமையயுடையதாயிருந்தாலும் தொழிலில்பெருமையில்லாதவரிடத்தில் பயனில்லாததாகும்.



## 76. பொருள் செயல்வகை.

751. பொருளல் லவரைப் பொருளாகச்செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். க

பொருளல்லாதவரையும் பொருளாகச் செய்ய வல்ல பொருளையல்லாமல் வேறு பொருள் இல்லை.

752. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. உ

எள்ளுவர் - இகழ்வார்.

ஏழைகளை எல்லாரும் இகழுவார்கள்; செல்வரையெல்

லாரும் புகழுவார்கள்.

753. பொருளென்னும் பொய்யாவிளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று. ௩

பொருளென்கிற பொய்யாத வெளிச்சம் நினைத்த தேசத்தில் சென்று இருளை நீக்கும்.

754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். ௪

(சம்பாதிக்கும்) திறத்தை அறிந்து தீதில்லாமல் வந்த பொருள் அறத்தையும் இன்பத்தையுங் கொடுக்கும்.

755. அருளொடு மன்பொடும் வாராப்பொருளாக்கம்
புல்லார் புரள விடல். ௫

புல்லார் - ஏற்றுக்கொள்ளார். புரளவிடல் - நீக்கி விடல்.

அருளோடும் அன்போடும் வாராதபொருள் சம்பாத்தியத்தை ஏற்றுக்கொள்ளாமல் நீக்கிவிடவேண்டும்.

756. உறுபொருளு முல்குபொருளுந் தன்னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். ௬

உறுபொருள் - உடையவரில்லாமல் வந்தபொருள். உல்கு - சுங்கம். தெறு - வென்று.

உடையவரில்லாமல் வந்தபொருளுஞ் சுங்கப்பொருளுந் தன் பகைவரைச்செயித்து வந்தபொருளும் அரசன் பொருளாகும்.

757. அருளென்னு மன்பீன் குழவிபொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. ௭

குழவி - குழந்தை. செவிலி - வளர்க்குந்தாய்.

அன்புபெற்ற அருளென்னுங் குழந்தை பொருளென்னுஞ் செல்வத்தையுடைய செவிலித்தாயால் வளரும்.

758. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்
துண்டாகச் செய்வான் வினை. [கொள் அ]

தன்கையில் பொருளுண்டாக ஒரு தொழிலைச்செய்கிற வன் செய்கை குன்றின்மேல் ஏறி நின்று யானைச்சண்டை யைக்கண்டதை ஒக்கும்.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். ௯

செறுநர் - பகைவர். எஃகு - ஆயுதம்.

திரவியத்தைச் சம்பாதிக்கக்கடவர்; அது பகைவரின் அகங்காரத்தை நீக்கும் ஆயுதமாகும். அதைப்பார்க்கிலுங் கூர்மையானது இல்லை.

760. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. ௰

ஒள் - அழகு. காழ்ப்ப - மிகவதிகமாக. எண் - எளிய.

(நல்லவழியில் வரும்) பொருளை மிகவதிகமாகச்சேர்த்த வர்கள் மற்றையிரண்டையும் (அறம், இன்பம்) ஒருமிக்க எளி தில் அடைவார்கள்.





## 78. படைச்செருக்கு.

771. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர். க

ஐ - தலைவன். தெவ்விர் - பகைஞர்.

பகைவரே, என் தலைவர்முன் நிற்காதேயுங்கள்; (என்) தலைவர் முன்னின்று பின் கல்லாக நின்றவர் பலர்.

772. கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. உ

கானம் - காடு.

காட்டில் ஓடும் முயலை எய்த அம்பைப் பார்க்கிலும் யா னையை எதிர்த்துத் தப்பின வேலை ஏந்தல் இனிது.

773. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு. ௩

தறுகண் - அஞ்சாமை. ஊராண்மை - சிநேகத்தன்மை. (மற்று, அசைநிலை.)

பேராண்மையென்பது வீரம்; பகைவர்க்குத் தாழ்வு வந்தால் உபகாரியாந் தன்மை அதற்குக் கூர்மையாகும் என்பார்கள்.

774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். ௪

கைவேலை யானையின்மேலெறிந்து வருபவன் தன்தேகத்திலுள்ள வேலைப் பிடுங்கி மகிழ்வான்.

775. விழித்தகண் வேல்கொண்டெறியவழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு. ௫

ஒட்டு - தோற்பு. இமைப்பின் - இமைத்தால்.

பகைவரைக்கோபித்துப் பார்த்த கண் வேலாயுதத்தால் எறியும்படி அழித்து இமைக்குமானால் வீரர்க்குத் தோற்பு அல்லவா.



776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. ௬

(வீரன்) தன்னாட்களை எண்ணிச் சிறந்த காயம் படாத நாட்களையெல்லாம் பயன்படாமல் கழிந்த நாட்களில் வைப்பான்.

777. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. ௭

இசை - புகழ். யாப்பு - கட்டல். காரிகை - அலங்காரம்.

(பூமியைச்) சூழ்ந்திருக்குங் கீர்த்தியை விரும்பிப் பிழைத்திருத்தலை வேண்டாத (வீரர்) வீரக்கழலைக் கட்டுதல் அலங்காரத்தன்மையாகும்.

778. உயிர்னுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். அ

உறின் — உண்டானால். மறவர் — வீரர். செறின் — கோபித்தால். குன்றலிலர் — குறையார்.

(மோசம்) உண்டானால் உயிர்க்குப் பயப்படாத வீரர் இராசன் கோபித்தாலும் வீரத்தில் குறையார்.

779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். கூ

இழைத்தது — சொன்னது. இகவாமை — தப்பாமல். ஒறுக்கிற்பவர் — இகழ்பவர்.

தாங்கள் சொன்ன சபதம் தப்பாமல் சாக வல்ல வீரர் பிழைத்ததற்காக அவர்களை இகழ்பவர் யார்.

780. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. ய

புரந்தார் — அரசர். மல்க — பெருக. சாகிற்பிற் — செத்தால். (கோட்டக்கது — கொள், தக்கது).

அரசன் கண்களில் நீர் பெருகச் செத்தால் அச்சாவு இரந்துகொள்ளத்தக்க தன்மையையுடையது.





## 79. நட்பு.

781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. க

சிநேகஞ் செய்வதைப்பார்க்க அரிதானது என்ன. அதைப்போல் (பகைவர்) செய்கைக்கு அருமையான காவல் என்ன.

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. ௨

நிறை - வளரும். நீரவர் - அறிவுடையவர். மதி - சந்திரன்.

அறிவுடையவர் சிநேகம் (மூன்றாம்) பிறையைப்போல் வளருந் தன்மையையுடையது. பேதைகள் சிநேகம் பூரண சந்திரனைப்போல் பின்னால் குறையுந் தன்மையையுடையது.

783. நவிற்றொறு நூனயம் போலும் பயிற்றொறும்
பண்புடை யாளர் தொடர்பு. ௩

நவில் - கற்றல். பயில் - பழகல்.

நூலைப் படிக்கப்படிக்க இன்பமாவது போல் நற்குண முடையவர் சிநேகம் பழகப்பழக இன்பமாகும்.

784. நகுதற்பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. ௪

மிகுதிக்கண் - தகாதவைகளைச் செய்கையில்.

சிநேகஞ் செய்தல் சிரித்தல் பொருட்டல்ல. தகாத செய்கையைச் செய்யும்போது முந்திக்கொண்டு கண்டித்தல் பொருட்டாம்.

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும். ௫

கிழமை - உரிமை.

ஓரிடத்திலிருத்தலும் பழகுதலும் வேண்டியதில்லை. ஒத்த அறிவு சிநேகமாகும் உரிமையைக் கொடுக்கும்.



786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. ௬

முகம் மலரச் சிநேகிப்பது சிநேகமல்ல, உள்ளம் மலரச் சிநேகிப்பதே சிநேகமாம்.

787. அழிவினவை நீக்கி யாறுய்த் தழிவின்க

ணல்லல் உழப்பதா நட்பு. ௭

உய்த்து – நடத்தி. உழப்பது – உடனிருப்பது.

அழிவைத் தருபவைகளை நீக்கி நல்வழியில் நடத்திக் கெடுதிகாலத்தில் துன்பத்தைக் கூட அநுபவிப்பதே சிநேக மாம்.

788. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. ௮

உடுக்கை – வஸ்திரம்.

வஸ்திரங் குலைந்தவனின் கை (உதவிசெய்வது) போல் உடனே துன்பத்தை நீக்குவதே சிநேகமாம்.

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை. ௯

கொட்பு - வேறுபாடு. ஒல்லும் - கூடும். வாய் - இடம்.

சிநேகத்திற்கு அரசிருக்கை யாதென்றால் வேறுபாடின்றிக் கூடுமிடங்களிலெல்லாந் தளராமல் தாங்குந் திண்மையாம்.

790. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. ௰

புனையினும் – சிறப்பித்தாலும்.

இவர் எங்களுக்கு (இவ்வளவு) அன்புடையவர், நாங்கள் இவருக்கு (இவ்வளவு) அன்புடையவரென்று சிறப்பித்துச் சொன்னாலுஞ் சிநேகம் அற்பமாகும்.

11*



## 80. நட்பாராய்தல்.

791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. ௧

நாடாது - ஆராயாமல். வீடு - விடுதல்.

சிநேகிப்பவர்க்குச் சிநேகித்தபின் விடுதல் இல்லை. (ஆதலால்) ஆராயாமல் சிநேகித்தலைப்பார்க்கக் கெடுதியில்லை.

792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை
தான்சாந் துயரந் தரும். [முறை - உ

துயரம் - துன்பம்.

ஆராய்ந்துஆராய்ந்துகொள்ளாதவனின் சிநேகம் கடைசியில்தான் சாவதற்கு ஏதுவான துன்பத்தைத் தரும்.

793. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு. ௩

ஆக்க - செய்யக்கடவான்.

(ஒருவன்) குணத்தையுங் குடிப்பிறப்பையுங் குற்றத்தையுங் குறைவற்ற இனத்தையும் அறிந்து சிநேகஞ் செய்யக்கடவான்.

794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. ௪

உயர்ந்தகுடியில் பிறந்து தன்னிடத்தில் பழிக்கு அஞ்சுகிறவனை விலைகொடுத்துஞ் சிநேகஞ் செய்ய வேண்டியது.

795. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். ௫

(ஒருவன்) பாவமானகாரியங்களை (ச்செய்தால்) அழும்படி சொல்லி இடித்து உலகநடை அறிய வல்லவரை ஆய்ந்து நட்புக்கொள்ளவேண்டும்.



796. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். ௬

உறுதி - நன்மை, கிளைஞர் - பந்துக்கள்.

கெடுதிகாலத்திலும் ஒரு நன்மையுண்டு; அது சிநேகிதர்களைச் சரியாய் அறியும்படிக்கான ஓர் கோல்தான்.

797. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். எ

ஊதியம் - இலாபம். (ஒரீஇ, ஒருவி.)

மூடருடைய சிநேகத்தை ஒழித்துவிடுதல் ஒருவனுக்கு இலாபமென்று சொல்லப்படும்.

798. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. அ

சிறுகுவ - சிறுகிப்போகும். ஆற்றறுப்பார் - கைவிடுபவர்.

மனம் தளருந் தொழிலைச் செய்ய நினையாதிரு. துன்ப காலத்தில் கைவிடுபவர் சிநேகத்தைக் கொள்ளாதிரு.

799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மையடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும். கூ

அடும் - சாகும்.

கெடுங்காலத்தில் கைவிடுகிறவர்கள் சிநேகத்தைச்சாகுங் காலத்தில் நினைத்தாலும் உள்ளஞ் சுடும்.

800. மருவுக மாசற்றார் கேண்மை யொன்றீந்து
மொருவுக வொப்பிலார் நட்பு. ய

மருவுக - கொள்ளக்கடவன். ஒருவுக - விடக்கடவன். ஒப்பு - நேர்மை.

குற்றமற்றவர் சிநேகத்தைக்கொள்ளக்கடவான். நேர்மையில்லாதவர் சிநேகத்தை ஒரு பொருளைக்கொடுத்தாயினு விட்டுவிடக்கடவான்.



## 81. பழமை.

801. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. க

கிழமை - உரிமை. கீழ்ந்திடா - சிதைக்காத.

பழைமை என்னப்படுவது எதெனில் எல்லாத்திலும் உரிமையைச் சிதைக்காத சிநேகமாம்.

802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். ௨

கெழுதகைமை - உரிமை.

சிநேகத்திற்கு அவயவம் உரிமையாம்; அதற்கு இனிமையர் ஆதல் சான்றோர் கடமை.

803. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. ௩

உரிமையினால் செய்தவைகளுக்குத் தாஞ் செய்ததுபோல் உடன்படாவிட்டால் பழையதாகிய சிநேகம் என்னசெய்யும்.

804. விழை தகையான் வேண்டியிருப்பர் கெழுதகை
கேளாது நட்டார் செயின். [யாற் ௪

விழைதகையான் - விரும்புந் தன்மையால்.

சிநேகிதர் உரிமைபற்றி (தம்மை) க்கேளாமல் ஒன்று செய்தால் விரும்புந் தன்மையினால் அதை வேண்டியிருப்பார்.

805. பேதைமை யொன்றோ பெருங்கிழமையென்று
நோதக்க நட்டார் செயின். [ணர்க ௫

நோ - நோக.

வெறுக்கத்தக்கவைகளைச் சிநேகிதர் செய்தால் (அதற்குக்காரணம்) அறியாமை யொன்றோ. மிகுந்த உரிமையும் என்று அறியக் கடவான்.

806. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. ௬

தொலைவு – பொருட்கேடு. தொல்லை - பழமை.

(நட்பின்) வரம்பில் நின்றவர் பழமையில் வேறுபடாது நின்றவரின் சிநேகத்தைப் பொருட்கேடுவந்தாலும் விட்டு விடார்.

807. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். ௭

அழி - அழிவு. அறார் - நீங்கார்.

அன்பினால் பழமையாக வந்த நட்புடையவர் அழிவு வருபவைகளைச் செய்தாலும் அன்பினின்று நீங்கார்.

808. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின். ௮

கேள் - நேசர். இழுக்கம் - பிழை.

சிநேகிதரின் குற்றத்தைக் கேளாமல் உரிமைபற்றிய வல்லவர்க்கு நட்பினர் பிழைசெய்தால் அது நல்லநாளாம்.

809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. ௯

கெடாமல் பழமையாய் வந்த சிநேகமுள்ளவர்களின் சிநேகத்தை விடாதவரை உலகம் விரும்பும்.

810. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். ௰

விழையார் - பகைவர். தலைப்பிரியாதார் - விட்டு நீங்காதவர்.

பழய நட்பினரிடத்தில் நற்குணம் நீங்காதவர் பகைவராலும் விரும்பப்படுவார்.



## 82. தீ நட்பு.

811. *பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.*

பருகுவார் - உண்பவர்.

(ஆசையால்) உண்பவர் போலிருந்தாலும் நற்குணமற்றவரின் சிநேகம் வளர்தலிலுங் குறைதல் இனிமை.

812. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். ௨

உறின் - உள்ளகாலத்தில். அறின் - இல்லாதிருந்தால். ஒருஉம் (ஒருவும்) - ஒழியும்.

(பொருள்) உள்ளகாலத்தில் சிநேகித்து இல்லாதகாலத்தில் விட்டுவிடும் ஒப்பில்லாதவரின் சிநேகத்தைப் பெற்றாலென்ன, இழந்தாலென்ன.

813. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர். ௩

உறுவது - அடைவது.

அடைவதைப் பார்க்குஞ் சிநேகிதரும், கொடுப்பதைக் கொள்ளும் வேசிகளும், திருடரும் ஒப்பாவார்கள்.

814. அமரகத்தாற்ற றுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

அமர் - போர். மா - குதிரை.

போரில் தள்ளிப்போட்டுப்போகிற பயிற்சியில்லாத குதிரையைப்போன்றவரது பந்துத்துவத்திலுந் தனிமையாயிருத்தல் நன்று.

815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று. ௫

ஏமஞ்சாரா - நிலையில்லாத. எய்தாமை - அடையாமை.

(சிநேகஞ்) செய்து வைத்தாலும் நிலையில்லாத கீழ்மக்களின் ஈன சிநேகத்தைப் பெறுதலிலும் பெறாமை நன்மை.

816. பேதைபெருங் கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும். ௬

கெழீஇ (கெழுவி) - நெருங்கிய. ஏதின்மை - பகை.

அறிவில்லாதவரின் மிக நெருங்கிய நட்பைப்பார்க்கிலும் அறிவுடையவர் பகை கோடிபங்கு நல்லது.

817. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். ௭

நகைக்கு ஏதுவானவரின் சிநேகத்தைப்பார்க்கிலும் பகைவரால் வருபவைகள் பத்துக்கோடிபங்கு நல்லவைகளாகும்.

818. ஒல்லுங்கரும முடற்று பவர் கேண்மை
சொல்லாடார் சோர விடல். அ

உடற்றுபவர் - வெறுப்போடு செய்பவர். சொல்லாடார் - சொல்லாதவர்.

முடியுந் தொழிலை வெறுப்போடு செய்பவரின சிநேகத்தை சொல்லாமல் விட்டுவிடவேண்டும்.

819. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. கூ

(மன்னோ, அசைநிலை).

தொழில் வேறு சொல்வேறுபட்டவர் சிநேகம் கனவிலும் இனிமையாகாது.

820. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. ம

ஓம்பல் - விலக்கல். மன்றில் - புறம்பே.

வீட்டில் நெருங்கிய நட்புசெய்து புறத்தில் பழிப்பவர் சிநேகம் எவ்வளவாகிலுந் தம்மைச் சேராமல் நீக்கிவிடக்கடவன்.



## 83. கூடா நட்பு.

821. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. க

சீரிடம் - வாய்க்குமிடம். எறிதற்கு - தாக்குதற்கு. நேரா - கூடாதிருந்து. நிரந்தவர் - கூடினவர்.

(உள்ளத்தில்) கூடாதிருந்து (வெளியில்) கூடினவரின் சிநேகம் வாய்க்குமிடங் கண்டால் தாக்குதற்குப்பட்டடையாகும்.

822. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். உ

பந்துக்கள் போலிருந்த பந்துக்களல்லாதவர் சிநேகம் பெண்களின் மனம்போல் வேறுபடும்.

823. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது. ங

மாணார் - பகைவர்.

நன்மையாகிய பலநூல்களைப் படித்திருந்தாலும் மன யோக்கியராகுதல் சத்துருக்களுக்கு அரிது.

824. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். ச

நகாஅ - சிரித்து.

முகத்தால் இனிமையாகச் சிரித்து மனத்தால் இனியராகாத வஞ்சகருக்குப் பயப்படவேண்டும்.

825. மனத்தினமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. ரு

மனத்தால் பொருந்ாதவரை எந்தக்காரியத்திலுஞ் சொல்லினால் நம்புதல் முறைமை அல்ல.

826. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்
சொல்லொல்லை யுணரப் படும். [சொ கூ

ஒட்டார் - பகைவர். ஒல்லை - விரைவு.

சிநேகிதர்போல் நன்மையானவைகளைச் சொன்னாலும் பகைவர் சொல் விரைவில் அறியப்படும்.

827. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்
வணக்கந் தீங்கு குறித்தமை யான். [வணக்கந் எ

வில்லின் வளைவு தீங்கைத்தருகிறபடியால் பகைவர் சொல்லின் வணக்கத்தைக் கொள்ளாதிருக்கக்கடவன்.

828. தொழுதகை யுள்ளும் படையொடுங்குமொன்
னாரழுதகண் ணீரு மனைத்து. அ

கும்பிட்டகையினுள்ளும் ஆயுதம் மறைந்திருக்கும்; சத்ருருக்கள் அழுதகண்ணீரும் அப்படித்தான்.

829. மிகச்செய்து தம்மெள் ளுவாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. கூ

சா - சாக. புல்லல் - சேர்தல்.

மிகவுஞ் செய்து தங்களை இகழ்ச்சிசெய்கிறவர்களை பரிகாசஞ்செய்து (அந்நட்பில்) சாரும்படி சேர்தல் தகுதியாம்.

830. பகை நட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். ய

ஒரீஇ (ஒருவி) - நீங்கி.

பகைவர் நட்பினராகி நடக்கும் காலம்வந்தால் அவர்களை முகத்தால் சிநேகித்து அகத்தால் விட்டுவிடவேண்டும்.



## 84. பேதைமை.

831. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்
கொண் டூதியம் போக விடல். க

ஏதம் - கேடு.

பேதைமையென்பது ஒன்று (அது) யாதென்றால் கேடு தருகிறவைகளைக் கைக்கொண்டு இலாபந் தருகிறவைகளைப் போக விடுதலாம்.

832. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். ௨

காதன்மை - ஆசை. கையல்லதன்கண் - ஆகாத செய்கையிடத்தில்.

பேதைமை யெல்லாவற்றுள்ளும் மிகுந்த பேதைமையாவது ஆகாதசெய்கையில் ஆசை வைத்தலாம்.

833. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். ௩

நாணாமையும் நாடாமையும் அன்பில்லாமையும் யாதொன்றையுங் காப்பாற்றாமையும் மூடரின் தொழில்களாம்.

834. ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். ௪

ஓதி - கற்று.

(நூற்களைக்) கற்றும் அறிந்தும் மற்றவர்களுக்குச் சொல்லியுந் தான் அடங்கி நடவாத மூடரிலும் மூடரில்லை.

835 ஒருமைச்செயலாற்றும் பேதையெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. ௫

புக்கு - புகுந்து. அளறு - நரகம்.

பேதை எழுபிறப்பிலுந் தான்புகுந்து அழுந்துதற்கு இடமாகிய நரகத்தை இப்பிறப்பிலேயே சம்பாதித்துக்கொள்ளுவான்.



836 பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். ௬

கை - செய்முறைமை. புனை - தளை.

செய்யும் முறைமையை அறியாத மூடன் ஒரு தொழிலைச் செய்வானாகில் அது கெடுதியாகிறது ஒன்றுதானா; விலங்கும் போட்டுக்கொள்ளுவான்.

837. ஏதிலா ராரத்தமர் பசிப்பர் பேதை
பெருஞ் செல்வ முற்றக் கடை. எ

ஆர – நிறைய.

மூடன் அதிகச்செல்வமடைந்தால் அந்நியர் அநுபவிக்கப் பந்துகள் பசியோடிருப்பார்கள்.

838. மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். அ

மையல் – பித்தம். (ஆல், அசைநிலை).

பேதை தன்கையில் ஒன்றை உடைமையாகப்பெற்றால் பித்தம் பிடித்தவன் கள்ளுண்டு களித்ததைப் போலாம்.

839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். கூ

பீழை – துன்பம்.

மூடர் சிநேகம் மிகவும் இனிமையுள்ளது, (ஏனெனில்) பிரியும்போது துன்பந் தருவதொன்றுமில்லை.

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். ம

பள்ளி – சயனம். குழாம் – கூட்டம்.

பெரியோர் சபையில் மூடன் புகுதல் கழுவாதகாலைச் சயனத்தின்மேல் வைத்ததுபோலாம்.





## 85. புல்லறிவாண்மை.

841. அறிவின்மை யின்மையுளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. க

பிறிது – வேறு. (ஆ – ஆக).

மூடத்தனம் இல்லாமையுள் இல்லாமையாகும்; உயர்ந்தோர் மற்றப்பொருளில்லாமையை இன்மையாகக்கொள்ளார்கள்.

842. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
இல்லை பெறுவான் றவம். உ

உவந்து – மகிழ்ந்து.

மதியீனன் மனமகிழ்ந்து ஒன்றைக்கொடுத்தல் பெறுகிறவன் தவமே, வேறொன்றுமில்லை.

843. அறிவிலார் தாந் தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. ௩

பீழிக்கும் – வருத்தும். பீழை – துன்பம். செறுவார் – பகைவர்.

அறிவில்லாதவர்கள் தாமே தம்மை வருத்தும் வருத்தத்தைச்செய்தல் பகைவர்க்கும் அரிது.

844. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. ௪

வெண்மை – அறிவின்மை. ஒண்மை – அறிவு.

அறிவின்மை என்னப்படுவது யாதென்றால் நாம் அறிவுடையவர்களென்று எண்ணும் அகங்காரமாம்.

845. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். ரு

கசடு – குற்றம்.

படியாதவைகளை மேற்கொண்டொழுகல் செம்மையாய்ப் படித்தவைகளைப் பற்றியுஞ் சந்தேகத்தை உண்டாக்கும்.



846. அற்றமறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி. ௬

அற்றம் – மறைக்கத்தக்கது. வயின் – இடம்.

தம்மிடத்திலுண்டாகுங் குற்றங்களை மறைக்காவிட்டால் அவயவத்தை மறைத்தலோ அற்ப அறிவாகும்.

847. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. எ

சோரும் - விட்டுவிடும். இறை - வருத்தம்.

அரிய உபதேசப்பொருளை விட்டுவிடும் அறிவில்லாதவன் தனக்குத்தானே மிகுந்த துன்பத்தைச் செய்துகொள்ளு வான்.

848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். அ

செய்கலான் - செய்யான். தேறான் - அறியான்.

(அறிவில்லாதவன்) ஏவப்பட்டுஞ் செய்யமாட்டான்; தானும் ஒன்றை அறியான். அந்த உயிர் போகும் அளவும் ஒருநோய் போல் இருக்கும்.

849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. கூ

அறிவில்லாதவனுக்கு அறிவு புகட்டுகிறவன்தான் அறியாதவனாவான்; அறிவில்லாதவன்தான் அறிந்தபடி அறிந்தவனாவான்.

850. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். ய

உயர்ந்தோர் உண்டென்பதை இல்லையென்பவன் உலகில் ஒரு பேயாக நினைக்கப்படுவான்.





## 86. இகல்.

851. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். க

பகல் - பிரிதல். பாரிக்கும் - வளர்க்கும்.

சகல உயிர்க்கும் பிரிதலென்னுந் தீயகுணத்தை வளர்க்கும் நோய் மாறுபாடு என்பார்கள்.

852. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை. ௨

பற்றா - வெறுப்பவை.

ஒருவன் பிரிதலை நினைத்து வெறுப்பவைகளைச்செய்தாலும் மாறுபாட்டை நினைத்து இனிமையற்றவைகளைச் செய்யாமை முதன்மை.

853. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். ௩

எவ்வம் - துன்பம். தவல் - குறைதல். தாவில் - கெடாத. விளக்கம் - புகழ்.

பகை என்னுந் துன்பத்தைச்செய்யும் நோயை நீக்கினால் (அது) குறைவற்றதுங் கெடுதலில்லாததுமான புகழைத் தரும்.

854. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். ௪

பகை என்னும் மிகுந்த துன்பம் நீங்கினால் மிகுந்த இன்பத்தைக் கொடுக்கும்.

855. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். ௫

மிகலூக்கும் - வெல்ல நினைக்கும்.

பகைக்கு எதிர் சாய்ந்து நடக்க வல்லவரை வெல்ல நினைக்குந் தன்மையையுடையவர் யார்.

856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. ௬

தவல் - குறைவுபடுதல். நணித்து - சமீபித்தது.

பகையில் அதிகப்படுதல் இனிதென்கிறவனின் வாழ்க்கைக்குக் குறைவுபடுதலுங் கெடலுஞ் சமீபமாகும்.

857. மிகன்மேவு மெய்ப்பொருள் காணாரிகன்மேவு
மின்னா வறிவி னவர். ஏ

மிகல் - சிறப்பு. மேவும் - பொருந்தும்.

பகை பொருந்திய துன்பஞ் செய்யும் அறிவையுடையவர் சிறப்புமேவும் மெய்ப்பொருளைக்காணார்கள்.

858. இகலிற் கெதிர் சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. அ

ஊக்கும் - மேற்கொள்ளும்.

பகைக்கு எதிர்நிற்குதல் செல்வம்; அது மிகும்படி மேற்கொண்டால் கேடு அதிகரிக்கும்.

859. இகல்காணா னாக்கம் வருங் காலதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. கூ

(ஒருவன்) செல்வம் வரும்போது பகையைக்காணான் தனக்குக்கேடுண்டாக அதை விர்த்திக்கும்படி காண்பான்.

860 இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு. ௰

நகல் - நட்பு.

பகையால் துன்பமெல்லாமுண்டாகும். நட்பால் நல்ல நயமென்னும் பெருஞ் செல்வமுண்டாகும்.



KURAL. II. 12

## 87. பகைமாட்சி.

861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. க

மாறு - பகை. ஓம்புக - ஒழியக்கடவன். மேக - விரும்பக்கடவன்.

வலியவரைப் பகையாயெதிர்த்தலை விட்டுவிடக்கடவன். மெலியவர்மேல் பகையாதலை ஒழியாமல் விரும்பக்கடவன்.

862. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு. உ

ஆன்ற – வலிய. துவ்வான் – பெலனற்றவன். பரியும் – தொலைப்பான். துப்பு – வல்லமை.

அன்பில்லாதவன், பலமான துணையில்லாதவன், தான் வலிமையற்றவன், தன்மேல் வரும் பகைவரின் வலிமையை எப்படித் தொலைப்பான்.

863. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு. ௩

அமைவு – பொருத்தம். தஞ்சம் – மிகவும்.

அஞ்சுகிறவன், அறிவில்லாதவன், ஒருமையில்லாதவன், உலோபி, பகைவர்க்கு மிகவும் எளிதாய் இரையாவான்.

864. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. ௪

யாங்கணும் – எவ்விடத்திலும்.

கோபம் நீங்காதவன், இரகசியத்தை வெளியிடுகிறவன் எக்காலத்திலும் எவ்விடத்திலும் யாவராலுஞ் சுலுவாய்மேற் கொள்ளப்படுவான்.

865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்
பண்பிலன் பற்றார்க் கினிது. [கான் ௫

பற்றார் – பகைவர்.

நீதிநூற்களைக் கவனியாதவன், தகுந்தவைகளைச் செய்யாதவன், பழியை நோக்காதவன், நற்குணமற்றவன் பகைவர்க்கு இனியனாவான்.



866. காணாச் சினத்தான் கழிபெருங்காமத்தான்
பேணாமை பேணப் படும். ௬

கழி – அதிகம். *பேணாமை – பகைமை.

காணாதகோபத்தையும் மிகுந்த காமத்தையுமுடையவனின் பகைமை விரும்பப்படும்.

867. கொடுத்தும் கொளல்வேண்டு மன்றவடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. எ

மன்ற - நிச்சயம். மாணா - பெருமையற்றவைகள்.
ஒருதொழிலை ஆரம்பித்திருந்து ஏற்காதவைகளைச் செய்பவனின் பகையைச் சில பொருளைக்கொடுத்தாயினும் நிச்சயமாய்க்கொள்ளவேண்டும்.

868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து. அ

ஏமாப்பு - சந்தோஷம்.
(ஒருவன்) நற்குணமில்லாதவனாய்ப் பலகுற்றங்களையுடையவனாக இருந்தால் அவன் சிநேகிதரில்லாதவனாவான். அது பகைவருக்குச் சந்தோஷமாகும்.

869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின். கூ

சேண் - உயர்வு. இகவா - நீங்காத.
அறிவில்லாத அஞ்சுகிற பகைவரைப்பெற்றால் போர் செய்வோர்க்கு உயர்ந்த இன்பம் நீங்காவாம்.

870. கல்லான் வெகுளுஞ் சிறுபொருளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. ய

படியாதவனோடும் பகைத்தலால் வரும் கொஞ்சப்பொருளைப் பெறாதவனை எக்காலும் கீர்த்தி சேராது.





88. பகைத்திறந்தெரிதல்.

871. பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. ௧

பகையென்னுந் தீயகுணம் விளையாட்டிலும் விரும்புந் தன்மையையுடையதல்ல.

872. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. ௨

வில்லேருழவர் - வீரர், சொல்லேருழவர் - ஞானிகள்.

ஒருவன் வீரரோடு பகைகொண்டாலும் மந்திரிகளோடு பகைகொள்ளாதிருப்பானாக.

873. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். ௩

ஏமுற்றவ[illegible]பித்தக்கொண்டவர். தமியன் - ஒண்டி.

ஒண்டியாயிருந்துகொண்டு பல்லோரையும் பகைத்துக்கொள்பவன பித்தக்கொண்டவரினும் ஏழை.

874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையா
றகைமைக்கட் டங்கிற் றுலகு. [ளன் ௪

பகையை நட்பாகச் செய்துகொண்டு நடக்கும் நற்குண முடைய அரசனின் தகைமைக்குள்ளே உலகந் தங்கும்.

875. தன்றுணை யின்றாற் பகையிரண் டாற்றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. ௫

(ஆல், அசை நிலை).

தனக்கு உதவுந் துணையில்லை; பகையிரண்டு; ஒருவனாயிருக்கிற தான் அவற்றிலொன்றை இனிய துணையாகக்கொள்ளக்கடவான்.



876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். ௬

பகாஅன் (பகான்) - நீங்காதவன்.

(பகைவன்) தெளிந்தவனாயிருந்தாலும் தெளியாதவனா யிருந்தாலும் தனக்கு அழிவுவந்தபோது கூடாதவனாகவும் நீங்காதவனாகவு மிருக்கவேண்டும்.

877. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. ௭

மென்மை - பலவீனம்.

வருத்தத்தை அறியாதவர்க்கு அதைச் சொல்லவேண் டாம். பகைவரிடத்தில் வலியின்மையை மேலிட்டுக்கொள்ள வேண்டாம்.

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. ௮

மாயும் - கெடும்.

(தொழில்செய்யும்) விதத்தையறிந்து தனக்கு வேண்டிய வைகளைச்செய்து தன்னைக்காக்கவே பகைவரிடத்திலுண் டான களிப்புக கெடும்.

879. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. ௯

களையுநர் - களைபவர். காழ்த்த - முதிர்ந்த.

முள்மரஞ் சின்னதாயிருக்கும்போதே களையவேண்டி யது. முதிர்ந்தபோனால் களைபவர் கையைக் களையும்.

880. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். ௰

உயிர்ப்ப - மூச்சுவிட. செயிர்ப்பவர் - பகைப்பவர், செம்மல் - பெருமை. சிதைக்கல் - கெடுத்தல்.

சமது பகைவர் பெருமையைக்கெடுக்காதவர் (அவர்கள்) மூசசுவிட நிச்சயமாக உயிரற்றவராவார்.





## 89. உட்பகை.

881. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின். ௧

நிழலும் நீருந் துன்பமுண்டாக்கினால் துன்பமாம். பந்துக்கள் தன்மையர் துன்பமாகச் செய்தால் துன்பமாகும்.

882 வாள்போல பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு ௨

கேள் - உறவினர்.

வாளைப்போற் பகைவருக்கு அஞ்சாதிருக்கக்கடவாய். உறவினர் போன்ற பகைவரின் சிநேகத்துக்கு அஞ்சக்கடவாய்.

883 உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். ௩

மட்பகை - குயவனகத்தி. உலைவிடம் - தளர்ச்சியுற்ற காலம். தெறும் - கெடுக்கும்.

உட்பகையானவருக்குப் பயந்து தன்னைக் காக்கக்கடவன். தளர்ச்சியுற்ற காலத்திலே மண்பாத்திரத்தை யறுக்கும் ஆயுதம்போலத் தப்பாமல் கெடுப்பார்கள்.

884 மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும். ௪

மாணா - திருந்தாத. ஏதம் - குற்றம்.

மனந்திருந்தாத உட்பகை உண்டானால் சுற்றத்தார் வசப்படாத பலகுற்றங்களையுஞ் சேர்க்கும்.

885. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும். [யா ௫

இறன் - இறத்தல்.

உறமுறையார் உட்பகையுண்டானால் இறத்தற்கு ஏதுவான பலகுற்றங்களையுங் கொடுக்கும்.

886. ஒன்றாமை யொன்றியார் கட்படினெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது. சு

ஒன்றாமை - பகைமை. பொன்றாமை - சாகாமை.
ஒன்றல் - கூடுதல்.

தனக்கு வசப்பட்டவரிடத்தில் பகையுண்டானால் சாவா மை கூடுதல் எந்நாளும் அருமை.

887. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. எ

செப்பின் பொருந்துதல்போல் (மேலுக்குக்) கூடினாலும் உள்பகையுள்ள குடி கூடுவதில்லை.

888. அரம் பொருதபொன் போலத்தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. அ

பொருத - தேய்த்த. உரம் - வலிமை.

உட்பகையுள்ள குடி அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்புபோல் பலத்தில் குறைந்துபோகும்.

889. எட்பகவன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு. கூ

பகவு - பிளவு.

உள்பகை எள்ளின் பிளப்பைப் போல் சின்னதாயிருந் தாலும் கெடுதியுள்ளதாகும்.

890. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம் போ டுடனுறைந் தற்று. ௰

குடங்கர் - குடிசை.

மனப்பொருத்தமில்லாதவரோடுகூடி வாழ்தல் ஒரு குடிசையில் பாம்போடு கூடி வாழ்ந்தது போலாகும்.



## 90. பெரியாரைப் பிழையாமை.

891. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. க

ஆற்றுவார் - வல்லவர், ஆற்றல் - வல்லமை.
வல்லவருடைய வல்லமையை இகழாமையே காப்பவருடைய காவல்களெல்லாவற்றினுந் தலையாம்.

892. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும். உ

பேரா - நீங்காத.
பெரியவரை நன்றாய் மதியாமல் நடந்தால் அவரால் நீங்காத துன்பம் உண்டாகும்.

893. கெடல்வேண்டிற் கேளாது செய்கவடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு. ங

ஒருவன் கெடவிரும்பினால் கேளாமல் செய்யக்கடவன்; கொல்லப்பட விரும்பினால் வல்லவருக்குப் பிழைசெய்யக் கடவன்.

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல். ச

விளித்து - அழைத்து.
வல்லமையுடையவர்க்கு வல்லமையில்லாதார் துன்பஞ் செய்தல் எமனைக்கையால் அழைத்ததுபோலாம்.

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்
வேந்து செறப்பட் டவர். [ப்பின் ரு

யாண்டு - எங்கே. வெந்துப்பு - அதிகவலிமை.
செறப்பட்டவர் - கோபிக்கப்பட்டவர்.
அதிகவல்லமையுடையவரால் கோபிக்கப்பட்டவர் எங்கேபோனாலும் எங்கும் உயிர்பிழையார்.

896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். ௬

நெருப்பால் சுடப்பட்டால் பிழைத்தலுண்டாம். பெரியார்க்கு விரோதமாகப் பிழைசெய்து நடப்பவர் பிழைக்க மாட்டார்.

897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு
தகைமாண்ட தக்கார் செறின். [மென்னாம் ௭

தகை - பெருமை. செறின் - கோபித்தால்.

பெருமையில் சிறந்த அருந்தவமுடையோர் கோபித்தால் அங்கங்களால் அழகுபொருந்திய வாழ்வும் மிகுந்த திரவியமும் என்னவாகும்.

898. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. ௮

மலையைப்போன்றவரைக் குறைய மதித்தால் நிலத்தில் நிலைபெற்றாற் போலுள்ளவர் குடியோடு அழிந்துபோவார்.

899. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். ௯

ஏந்திய - உயர்ந்த.

உயர்ந்த விரதமுடையவர் கோபித்தால் அரசனும் நிலைதளர்ந்து அழிந்துபோவான்.

900. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். ௰

மிகுந்தசிறப்புப் பொருந்தியவர் கோபித்தால் மிகவும் அதிகமான சார்புடையராயிருந்தாலுந் தப்ப மாட்டார்.

## 91. பெண்வழிச்சேறல்.

901. மனைவிழைவார் மாண்பயனெய்தார் வினைவிழை
வேண்டாப் பொருளு மது. [வார் ௧

மனையாளை விரும்பி நடப்பவர் பெருமைபொருந்திய பயனை அடையார். தொழிலை விரும்பிச்செய்பவர் இச்சிக்காத பொருளும் அதுதான்.

902. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். ௨

(ஒன்றையும்) விரும்பாமல் பெண்ணாசை கொண்டிருப்பவனின் செல்வம் பெரிய நாணமாகிய வெட்கத்தைக்கொடுக்கும்.

903. இல்லாள்கட்டாழ்ந்தவியல்பின்மையெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும். ௩

இல்லாளிடத்தில் தாழும் ஆண்மையின்மை எப்போதும் நல்லவரிடத்தில் வெட்கத்தைத்தரும்.

904. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று. ௪

வீறு - புகழ்.

பெண்சாதிக்குப் பயப்படும் மறுமைப்பயனில்லாதவனின் தொழில்தன்மை பெருமை பெறுதல் இல்லை.

905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல். ௫

பெண்சாதிக்குப் பயப்படுகிறவன் எக்காலத்திலும் நல்லவர்களுக்கு நல்லவைகளைச் செய்யப்பயப்படுவான்.

906. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். ௬

இமையார் - தேவர். பாடு - பெருமை. அமை யார் - மூங்கில்போலும்.

பெண்சாதியின் மூங்கில் போன்றதோளுக்குப் பயப்படுகிறவர் தேவரைப்போல் வாழ்ந்தாலும் பெருமையில்லாதவராவர்.

907. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னா
பெண்ணே பெருமை யுடைத்து [ணுடைப் ௭

பெண்சாதி சொல்லைக்கேட்டு நடப்பவனின் ஆண்மையைப்பார்க்கிலும் நாணுடைய பெண்தன்மை பெருமையையுடையது.

908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட்
பெட்டாங் கொழுகு பவர். ௮

நுதல் - நெற்றி. பெட்டாங்கு - விருப்பப்படி.

நல்ல நெற்றியையுடையவளின் விருப்பத்தின்படி நடப்பவர் சிநேகிதர் குறையை முடிக்கமாட்டார், நன்மையானவைகளையுஞ் செய்யார்.

909. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். ௯

தர்மசெய்கையுஞ் சிறந்தபொருளும் மற்றச்செய்கையும் மனையாள் ஏவலின்படி செய்பவரிடத்தில் இல்லை.

910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். [ஞான்றும் ௰

இடன் - செல்வம்.

ஆலோசனையோடு சேர்ந்தமனதையுஞ் செல்வத்தையும் உடையவர்களுக்கு எக்காலத்திலும் மனையாளைச்சேர்ந்து ஆகும் அறிவீனம் இல்லை.



## 92. வரைவின்மகளிர்.

911. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொ
ரின்சொ லிழுக்குத் தரும். [டியா ௧

ஆய் - ஆராயும். தொடி - வளையல். இழுக்கு - துன்பம்.

அன்பினால் விரும்பாமல் பொருள்பற்றி விரும்பும் ஆராய்ந்த வளையலையுடைய வேசிகளின் இனியசொல் துன்பந் தரும்.

912. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின்மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். ௨

நயன் - நடக்கை. நள்ளா - சேராமல்.

பொருளின் அளவை அறிந்து நல்லவைகளைச்சொல்லும் பண்பில்லாத வேசிகளின நடக்கையை யோசித்து அவள் சிநேகத்தை விட்டுவிடவேண்டும்.

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்
லேதில் பிணந்தழீஇ யற்று. [டறையி ௩

முயக்கம் - தழுவுதல். ஏதில் - வேறு. (தழீஇ, தழுவி.)

பொருளை விரும்பும்வேசிகளின் பொய்த்தழுவுதல் இருட்டறையில் அந்நிய பிணத்தைத் தழுவினதை யொக்கும்.

914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்
ளாயு மறிவி னவர். [பொரு ௪

தோயார் - தீண்டார்.

செல்வப்பொருளை விரும்பும் வேசைகளின் அற்ப இன்பத்தை அருட்பொருளை ஆராயும் அறிவையுடையவர் தீண்டார்.

915. பொதுநலத்தார் புன்னலந்தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். ௫

பொதுநலத்தார் - பொதுநலத்தை ஆசிக்கிறவர்.

புத்திநன்மையால் மாட்சிமைபொருந்திய அறிவையுடையவர் யாவர்பேரிலும் ஆசையுள்ள பரத்தையரின் அற்ப இன்பத்தை யநுபவியார்.

916. தங்கலம் பாரிப்பார் கோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். சு

பாரிப்பார் – பரப்புபவர். தகை - சிறப்பு. செருக்கி - களிப்பித்து.

தங்கள் புன்மைப்பாப்புவோர் சிறப்புகளால் களித்து அற்ப இன்பத்தைக்கொடுக்கிற விலைமாதர் தோளைச்சேரார்.

917. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். எ

நிறைநெஞ்சம் - நல்லமனம்.

நெஞ்சினால் வேறுபொருளை விரும்பிப் புணருகிற வேசிகளின் தோளை நல்லமனமில்லாதவர்கள் சேர்வார்.

918. ஆயுமறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. அ

ஆராயும் அறிவற்றவர்களுக்கு வஞ்சிக்கும் வேசிகளின் புணர்ச்சி அணங்கு என்பார்கள்.

919. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு. கூ

வரைவு - வரமுறை. புரை - மேன்மை. பூரியா - கீழ்மக்கள். அளறு - நரகம்.

வரமுறையில்லாமல் கூடும் மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய வேசைகளின் மெல்லியதோளானது மேன்மையில்லாத கீழ்மக்கள் அழுந்தும் நரகம்.

920 இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திரு நீக்கப் பட்டார் தொடர்பு. ௰

கவறு – சூது.

இருமனமுடைய வேசிகளுங் கள்ளுஞ் சூதும் இலட்சுமியால் நீக்கப்பட்டவர்க்கு நட்புகளாகும்.



## 93. கள்ளுண்ணாமை.

921. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். க

உட்கப்படார் - பயப்படார்.
கள்ளின்பேரில் ஆசைகொண்டு நடக்கிறவர் எந்நாளும் (பகைவரால்) அஞ்சப்படாமல் புகழை இழந்துபோவார்.

922. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
லெண்ணப் படவேண்டா தார். உ

கள்ளை உண்ணாதிருக்கக்கடவார். பெரியோரால் மதிக்கப்பட விரும்பாதவர் (அதை) உண்ணவேண்டுமானால் உண்ணக்கடவார்.

923 ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. ங

கள்ளுண்டு களித்தல் தாயக்குமுன்னேயும் துன்பஞ்செய்யுமானால் அறிவுடையவர் முன்பாக எப்படியாகும்.

924. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு [னும் ச

கள்ளெனும் (யாவரும்) இகழும் பெரிய குற்றத்தையுடையவரைவிட்டு நாணமாகிய நல்லவள் தூரத்தில் போய்விடுவாள்.

925. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல் ரு

கையறியாமை - செயலறியாமை.

பொருளைக்கொடுத்து மெய்மறதியைக் கொள்ளுதல் ஒழுக்கமறதியை உடையதாம்.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லரெஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். ௬

துஞ்சினார் - தூங்கினவர்.

தூங்குகிறவர் செத்தவரேயன்றி வேறல்ல. கள்குடிப்பவர் எக்காலத்திலும் நஞ்சை உண்பவராவார்.

927. உள்ளொற்றி யுள்ளூரர் நகப்படுவரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். ௭

ஒற்றி - மறைந்து.

கள்ளைக்குடித்து அறிவுமயங்குகிறவர்களின் இரகசியத்தை உள்ளூரார் அறிந்து எந்நாளுஞ் சிரிப்பார்கள்.

928. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். ௮

மனதில் மறைந்திருக்கிறது வெளிப்படுதலால் கள்ளுண்டு அறியேனென்பதை விட்டுவிடவேண்டும்.

929. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. ௯

துரீஇ (தருவி) - தேடி.

கள்குடியனுக்கு நியாயஞ் சொல்லுதல் தண்ணீர்க்குள் முளிகிறவனை விளக்குக்கொண்டுதேடுதல் போலாம்.

930. கள்ளுண்ணாப் போழ்திற்களித்தானைக்காணுங் கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. ௰

கள்ளைக் குடியாதபோது குடித்துக்களிக்கிறவனைக் கண்டால் குடித்தபோது உண்டாயிருந்த தன் சோர்வை நினையானே.



## 94. சூது.

931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினைவென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. [உக் க

(ஒருவன்) வென்றாலுஞ் சூதை விரும்பவேண்டாம். வென்றபொருளுந் தூண்டிலிலுள்ள இரும்பை மீன் விழுங்கினது போலாகும்.

932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
லன்றெய்தி வாழ்வதோ ராறு. உ

எய்தி — அடைந்து.

ஒன்றைப்பெற்று நூற்றை இழக்குஞ் சூதாடுகிறவர்களுக்கு நன்மையைப்பெற்று வாழ்வதாகிய ஒருவழியுண்டா.

933. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். ௩

உருளுஞ் சூதாட்டத்தினால் வந்த ஆதாயத்தை இடைவிடாமற் சொன்னால் பொருளும் லாபமும் போய் அந்நியர் வசமாகும்.

934. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். ௪

பலவிதத்துன்பங்கள் செய்து புகழையுங் கெடுக்குஞ் சூதைப்போலத் தரித்திரியத்தைக்கொடுப்பது ஒன்றுமில்லை.

935. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். ரு

கவறு - சூது. கழகம் - சூதாடுமிடம். தருக்கி - களிப்போடு மேற்கொண்டு. இவறியார் - ஆசைப்பட்டவர்.

சூதையும் சூதாடுமிடத்தையும் ஆடுதற்கு வேண்டிய கருவிகளையுங் களிப்போடு மேற்கொண்டு நடப்பவர் இல்லாதவராவார்.

936. அகடாரா ரல்லல் உழப்பர் சூதென்னு
முகடியான் மூடப்பட் டார். சு

அகடு - வயிறு. ஆரார் - நிறையப்பெறார். உழப்பர் - அநுபவிப்பார். முகடி - மூதேவி.

சூதென்னும் மூதேவியால் விழுங்கப்பட்டவர்கள் வயிறு நிறையப்பெறார். துன்பத்தை அநுபவிப்பார்.

937. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். எ
புகின் - கழித்தால்.

காலஞ் சூதாடுமிடத்தில் கழித்தால் அது நெடுநாளாய் வந்த செல்வத்தையும் நற்குணத்தையுங் கெடுக்கும்.

938. பொருள்கெடுத்துப் பொய்மேற்கொளீஇ யருள்
தல்லல் உழப்பிக்குஞ் சூது. [கெடுத் அ

கொளீஇ (கொளுவி) - நடத்தி.

சூது ஒருவன் பொருளைக்கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச்செய்து அருளை அறப்படுத்தித் துன்பம் விளைவிக்கும்.

939. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். கூ

ஒருவன் சூதைவிரும்பினால் அவனிடத்தில் உடை, செல்வம், ஊண், கீர்த்தி, கல்வி, என்ற ஐந்துஞ் சேராது.

940. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். ய

காதலிக்கும் - ஆசிக்கும்.

தோற்குந்தோறும் அதின்மேல் ஆசைவைக்குஞ் சூதினைப்போல் உயிர்துன்பம் அநுபவிக்குந்தோறும் அதின்மேல் ஆசையுடையதாகும்.





## 95. மருந்து.

941. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. க

வளி – வாய்வு.

மிகுந்தாலும் குறைந்தாலும் நூலோர் வாய்வுமுதலாக எண்ணிய மூன்றும் நோயைச் செய்யும்.

942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கருந்திய
தற்றது போற்றி யுணின். உ

அருந்தியது - உண்ணப்பட்டது. அற்றது - சீரணித்தது.

ஒருவன் சாப்பிட்டது சீரணமானதை அறிந்து சாப்பிட்டால் உடம்புக்கு மருந்துவேண்டியதில்லை.

943. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. ௩

உய்க்கும் - பிழைக்கும்.

சீரணித்தால் அளவையறிந்து சாப்பிடவேண்டும். அப்படிச்செய்வது உடம்பைப்பெற்றவன் நீட்டிப்பிழைக்கும் வழியாகும்.

944. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. ௪

துவர - நன்றாய்.

சீரணித்ததையறிந்து அதில் உற்றியாக விரோதமில்லாத உணவுகளை நன்றாய்ப்பசித்தபின் உண்ணக்கடவாய்.

945. மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. ௫

ஊறுபாடு - சேதம்.

ஒருவன் நல்ல உணவைத் திரும்பவுஞ் சாப்பிட்டால் உயிர்க்குச் சேதமில்லை.



946. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய். ௬

சீரணித்ததை அறிந்து சாப்பிடுகிறவனுக்கு இன்பம் இருக்கிறதுபோல் அதிக உண்டியைச் சாப்பிடுகிறவனிடத்தில் நோய் நிற்கும்.

947. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும். ௭

சீரண சக்தியை அறியாதவனாகி அதிகமாய்ச் சாப்பிடுகிறவனிடத்தில் நோய் அதிகமாய் உண்டாகும்.

948. நோய் நாடி நோய்முத னாடி யது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். ௮

தணிக்கும் - நீக்கும். வாய் - உபாயம்.

(வைத்தியன்) நோயையும் அதற்குக் காரணத்தையும் நோய் நீக்கும் உபாயத்தையும் அறிந்து சரியாய்ச் செய்ய வேண்டும்.

949. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். கூ

மருத்துவன் நோயாளியின் தன்மையையும் நோயின் தன்மையையுங் காலத்தையும் யோசித்துச் செய்யக்கடவான்.

950. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. ம

உழை - பக்கம். கூறு - பங்கு.

நோயாளி, வைத்தியன், மருந்து, அதைச்செய்பவன் என்று நாலுபகுதியுள்ளதே மருந்தாம்.



13*



## (ஒழிபியல்)

## 96. குடிமை.

951. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. க

இற்பிறந்தார் - உயர்ந்தகுடியில் பிறந்தவர்.

செம்மையும் நாணமும் உயர்ந்த குடியில் பிறந்தவ ரிடத்தில் அல்லாமல் (மற்றவர்களுக்குச்) சுபாவமாய் உண்டாயாது.

952 ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். உ

இழுக்கார் - தவறுர்.

உயர்ந்தகுடியில் பிறந்தவர் நன்னடக்கையும் உண்மையும் நாணமுமாகிய மூன்றிலுந் தவறுர்.

953. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. ௩

மெய்மையுடைய குடியிற்பிறந்தவர்க்கு முகமலர்ச்சியும், கொடுத்தலும், இன்சொற்சொல்லுதலும், இகழாமையுமாகிய நான்கும் உரித்தாகும் என்பார்கள்.

954. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். ௪

அநேககோடிபொருளைப் பெற்றாலும் உயர்ந்தகுடியிற் பிறந்தவர்கள் குறைவுபடுபவைகளைச் செய்யமாட்டார்கள்.

955 வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. ௫

உயர்குடியில் பிறந்தவர்கள் பொருள் குறைவுபட்ட காலத்திலுந் தங்கள் நற்குணத்திலிருந்து நீங்கார்கள்.



956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்து மென்பார். ௬

சலம் - வஞ்சனை. சால்பு - மேன்மை.

குற்றமற்ற குலமரபுபற்றி வாழுகின்றோமென்பவர்கள் வஞ்சனையுள்ளவர்களாகித் தகுதியற்றவைகளைச் செய்யார்கள்.

957. குடிப்பிறந்தார் கண் விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. ௭

விசும்பு - ஆகாயம்.

உயர்ந்தகுடியிற் பிறந்தவர்களிடத்தில் உண்டாகுங் குற்றம் ஆகாயத்தில் சந்திரனிடத்துள்ள களங்கம்போல் விளங்கும்.

958. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். ௮

ரார் — அன்பு.

நன்மையுடையவனிடத்தில் அன்பின்மை உண்டானால் அவன் நற்குலமுடையவனல்லவென்று சந்தேகிக்கப்படும்.

959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். அ

நிலத்தின் இயல்பை அதில் முளைக்கும் முளைகாட்டும் உயர்குடியிற் பிறந்தவர் வாய்ச்சொல் அவர்கள் குலத்தைத் தெரிவிக்கும்.

960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. [வேண்டின் ய

நலம் விரும்பில் நாணமுடைமையை விரும்பு. குலமுடைமையை விரும்பில் யாவரிடத்திலும் பணிவை விரும்பு.



ரகஅ பொருட்பால.

## 97. மானம்.

961. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். க

மிகுந்த சிறப்பையுடையதாயிருந்தாலும் குடிப்பிறப்புக் குத்தாழ்ச்சி வருபவைகளை (ஒருவன்) விட்டுவிடக்கடவான்.

962. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். உ

புகழோடு மரியாதையை விரும்புகிறவர்கள் புகழ்ச்சம் பாதிக்கக்கூடிய விடத்திலுஞ் சிறப்பற்றவைகளைச்செய்யார்கள்.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. ௩

செல்வத்தில் தாழ்மைவேண்டும். வறுமையில் உயர்வு வேண்டும்.

964. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௪

இழிந்த – விழுந்த.

(நற்குடியிற்பிறந்தவர்) தங்கள் நிலைமையிலிருந்து தாழ்ந்தகாலத்தில் தலையிலிருந்து விழுந்த மயிருக்கு ஒப்பாவார்.

965. குன்றி னனை யாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். ௫

மலையைப்போன்றவர்களும் தாழுவதற்கு ஏதுவானதை ஒரு குன்றுமணி அவ்வளவுசெய்தால் தாழ்ந்துபோவார்கள்.



966. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதாலென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. ௬

புத்தேணாட்டு (புத்தேள், நாட்டு) - தேவர் உலகம்.
உய்யாது - செலுத்தாது. (ஆல், அசைநிலை.)

தன்னை அவமதிப்பவரைப் பின்சென்று நிற்கையானது புகழுண்டாக்காது, தெய்வலோகத்தில் செலுத்தாது, இனி செய்வது யாது.

967. ஒட்டார்பின் சென்றொருவன்வாழ்தலினந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று. ௭

ஒட்டார் - இகழ்வார்.

தன்னை இகழ்பவர் பின்சென்று பிழைத்திருப்பதிலும் முன் நிலைமையிலிருந்து கெட்டுப்போனனென்று சொல்லப் படுவது நன்மை.

968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கைபெருந்தகை
பீடழிய வந்த விடத்து. [மை அ

ஊன் - உடம்பு. பீடு - வலி.

உயர்ந்த குடிப்பிறப்பு மானங் கெடச் சம்பவித்தால் உடலைக்காப்பாற்றும் வாழ்க்கை (இறவாமைக்கு) மருந்தா.

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். க

நீப்பின் - நீங்கினால்.

ஒரு மயிர் விழுந்துவிட்டால் சாகுங் கவரிமாவுக்கு ஒப் பானவர் அவமானம் வந்தால் தங்கள் உயிரை விட்டுவிடுவார் கள்.

970. இளிவரின் வாழாத மானமுடையா
ரொளிதொழு தேத்து முலகு. ய

இளி - இகழ்ச்சி.

தங்களுக்கு அவமானம் நேரிட்டால் உயிர் வைத்திராத மானமுடையவரின் புகழை உலகு தொழுது துதிக்கும்.

## 98. பெருமை.

971. ஒளியொருவற் குள்ள வெறுக்கையிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். க

உள்ளவெறுக்கை - மனவெழுச்சி.

ஒருவனுக்கு ஒளியானது மனவெழுச்சி. அதற்கு ஒத்த செயலை நீக்கிப்போட்டு வாழ்வோமென்று நினைத்தல் இகழ்ச்சி யாம்.

972. பிறப்பொக்கு மெல்லாவுயிர்க்குஞ்சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். உ

எல்லாவுயிர்க்கும் பிறப்பு (இயல்பு) ஒத்திருக்கும். செய்யுந் தொழில் பேதகத்தால் சிறப்பு (இயல்பு) வேறுபடும்.

973. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். ௩

சிறியோர் மேலேயிருந்தாலும் மேலானவராகார்; கீழிருந்தாலும் பெரியவர் சிறியவராகார்.

974. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. ௪

ஒரே மனமுடைய இஸ்திரிகளைப்போல் தன்னைத்தானே காத்துக்கொண்டு நடந்தால் பெருமை உண்டு.

975. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். ௫

பெருமையுடையவர் அருமையான செய்கைகளைச் செய்யும் வழியை அறிந்து செய்வார்.



976. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக் கொள்வேமென்னு நோக்கு. ௬

பெரியவரை வழிபடுவோமென்னும் எண்ணஞ் சிறியவர் கருத்தில் இல்லை.

977. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். ௭

இறப்பு - மிகுதி.

சிறப்புஞ் சீரல்லாதவரிடத்திலுண்டானால் அது செருக்கை உண்டாக்குந் தொழிலையுடையதாகும்.

978. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து. அ

(உம், அசைநிலை). வியந்து - புகழ்ந்து.

பெருமையுள்ளவர்கள் எப்போதும் பணிந்து நடப்பார்கள். சிறியவர் தங்களை மெச்சிச்சிறப்பித்து நடப்பார்கள்.

979. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். கூ

பெருமிதம் - செருக்கு. ஊர்ந்து - ஏறி.

செருக்கில்லாதிருத்தலே பெருமை. செருக்கைக்கொண்டிருத்தலே சிறுமை.

980. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். ய

அற்றம் - அவமானம்.

பெருமை அவமானத்தை மறைக்கும்; சிறுமை குற்றத்தைக் கூறிவிடும்.





## 99. சான்றாண்மை.

981. கடனென்ப நல்லவையெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. க

கடன - தகுதி.

இது தகுதியென்றறிந்து நிறைந்த தன்மையை மேற்கொளபவர்க்கு நல்லவைகளெல்லாங் கடன் என்று சொல்லுவார்.

982. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று. உ

சான்றோர் நன்மைக் குணங்களாலாகிய நன்மையாம். மற்ற நன்மைகள் எந்த நன்மையிலுமுள்ளதல்ல.

983. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மை
டைந்துசால் பூன்றிய தூண். [யோ ௩

அன்பும், நாணமும், உபகாரஞ் செய்தலும், கண்ணோட்டமும், சத்தியமுமாகிய ஐந்தும் மாட்சிமையைத் தாங்குந் தூண்கள்.

984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. ௪

நோன்மை - தவம்.

கொல்லாத நன்மையே தவம்; பிறரின் தீமையைச் சொல்லாத நன்மையே நிறைவு.

985. ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. ௫

மாற்றார் - பகைவர்.

(ஒரு காரியத்தை) முடிப்பவரின் வல்லமை பணிதலாம். அது சான்றோர் பகைவரை நீக்கும் ஆயுதமாம்.



986. சால்பிற்குக் கட்டளை யாதெனின் தோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். ௬

கட்டளை - உரைகல். தோல்வி - தோற்பு. துலை - ஒப்பு.

சால்பிற்கு உரைகல் யாதெனில் தோல்வியை இழிந்தவரிடத்திலுங் கொள்ளுதலாம்.

987. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. ௭

தமக்குத் துன்பஞ் செய்தவர்களுக்கும் இனிமையான காரியங்களைச் செய்யாதிருந்தால் சான்றாண்மை என்ன பயனுடையதோ.

988. இன்மையொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். அ

சால்பென்னும் பலம் உண்டானால் தாரித்திரியம் ஒருவனுக்கு இழிவல்ல.

989. ஊழிபெயரினுந் தாம் பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படுவார். கூ

ஊழி - காலம். ஆழி - கரை.

காலம் வேறுபட்டாலுந் தாம் வேறுபடாதவர் சான்றாண்மையாகிய கடலுக்குக் கரை என்னப்படுவர்.

990. சான்றவர் சான்றாண்மை குன்றி னிரு நிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. ம

இருநிலம் - பெரியபூமி. (மன்னோ, அசைநிலை).

சான்றவர் சான்றாண்மை குறைந்தால் பெரிய பூமி தானும் பாரந் தாங்காது.





## 100. பண்புடைமை.

991. எண்பதத்தா லெய்த லெளிதென்பயார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. க

எண் - எளிய. எய்தல் - அடைதல். வழக்கு - சமயம்.

யாவரிடத்திலும் எளிய சமயத்தாராயிருந்தால் பண்புடைமையென்னும் நல்லவழியை யடைதல் எளிது என்பார்கள்.

992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தலிவ்விரண்
பண்புடைமை யென்னும் வழக்கு. [டும் உ

அன்புடைமையும் நற்குடியிற் பிறத்தலும் ஆகிய இந்த இரண்டும் பண்புடைமையென்னும் நல்லவழியாம்.

993. உறுப்பொத்தன் மக்களொப்பன்றால்வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு. ௩

வெறுத்தக்க - நெருங்கத்தக்க. (ஆல், அசைநிலை).

அவயவங்களில் ஒத்திருத்தல் மனிதரோடு ஒப்பல்ல, பொருந்துவதாகிய ஒத்தல் நெருங்கத்தக்கதாகிய பண்பி லொத்தலாம்.

994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. ௪

நீதியோடு தர்மத்தை விரும்பிய பயனுடையவர் குணத்தை உலகத்தார் கொண்டாடுவார்.

995. நகையுள்ளு மின்னாதிகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. ௫

பாடு - தன்மை.

இகழ்தல் விளையாட்டிலும் இனிமையல்ல. மற்றவர் தன்மையை அறிபவரிடத்தில் பகையிலும் நற்குணமுண்டு.



996. பண்புடையார் பட்டுண்டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன். ௬

பட்டு - படுதல். மண்புக்கு - மண்ணில் புகுந்து.
இன்றேல் - இல்லாவிட்டால். (மன், அசைநிலை).

பண்புடையவரிடத்தில் உலகியல் உண்டு. அப்படியில்லாவிட்டால் அது மண்ணில் புகுந்து கெடும்.

997. அரம்போலுங் கூர்மையரேனுமரம் போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். எ

நன்மக்களுக்குரிய பண்பற்றவர் அரத்தைப்போலக் கூர்மையுடையவராயிருந்தாலும் மரத்திற்கு ஒப்பாவார்.

998. நண்பாற்றாராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை. அ

சிநேகஞ் செய்யாதவராகிப் பகைசெய்பவரிடத்திலுந் நற்குணமுடையவராய் நடவாமை இழிவாம்.

999. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும் பாற் பட்டன் றிருள். கூ
பட்டன்று - பட்டது.

மகிழ்ச்சியாய்ச் சிநேகஞ் செய்யக்கூடாதவர்களுக்கு மிகவும் பெரிய பூமி பகலிலும் இருளாகும்.

1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. ம
கலம் - பாத்திரம். திரிந்தது - மாறிற்று.

நற்குணமற்றவன் அடைந்திருக்கும் பெரிய செல்வம் நல்ல பால் பாத்திரத்தின் தீமையால் கெட்டதைப்போலாகும்.



## 101. நன்றியில் செல்வம்.

1001. வைத்தான் வாய்சான்ற பெரும்பொருளஃதுண்
செத்தான் செயக்கிடந்த தில. [ணான் க
வாய் - வீடு. சான்ற - நிறைந்த.

வீடு நிறைந்த பெரும்பொருளை வைத்திருக்கிறவன் அதை அநுபவியாவிட்டால் செத்தவனாவான். அதனிடத்தில் அவன் செய்யத்தக்கது ஒன்றுமில்லை.

1002. பொருளானா மெல்லா மென்றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு. உ

இவறும் - உலோபஞ் செய்யும். மருளால் - மயக்கத்தால்.

பொருளினால் யாவும் ஆகுமென்று நினைத்துக்கொடாது உலோபித்தனஞ் செய்யும் மயக்கத்தினால் ஒருவனுக்கு மாட்சிமையற்றதாகிய பிறப்புண்டாகும்.

1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. ௩

ஈட்டம் - சம்பாத்தியம். இசை - புகழ். ஆடவர் - புருஷர்.

சம்பாத்தியத்தை ஆசித்துப் புகழை விரும்பாத புருஷர் தோற்றம் நிலத்திற்குப் பாரமாம்.

1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோவொரு
வனச்சப் படாஅ தவன். [வரா ௪

நச்ச - விரும்ப.

ஒருவராலும் விரும்பப்படாதவன் (இறந்தபின்) தன்னை நினைக்கும்படி பூமியில் என்ன இருக்கிறதென்று நினைப்பானோ.

1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க்கடுக்கிய
கோடியுண் டாயினு மில். ௫

துய்ப்பது - தின்பது.

கொடுப்பதும் அநுபவிப்பதும் இல்லாதவர்களுக்கு அநேக கோடி பொருள் உண்டாயிருந்தாலும் ஒன்றுமில்லை.

1006. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
கீத லியல்பிலா தான். [கொன் ௬

ஏதம் - நோய். துவ்வான் - அநுபவியாதவன்.

தானும் அநுபவியாமல் தகுந்தவர்களுக்கு ஒன்றைக் கொடுக்குந் தன்மையுமில்லாதவனுக்குண்டான பெரிய செல்வம் நோயாகும்.

1007. அற்றார்க் கொன்றாற்றாதான் செல்வமிக நலம்
பெற்றா டமியண்மூத் தற்று. ஏ

(பெற்றாடமியண்: பெற்றாள், தமியள்) தமியள் - தனித்தவள். ஆற்றாதான - கொடாதவன்.

இல்லாதவர்க்கு ஒன்றுங் கொடாதவனின் செல்வம் மிகுந்த அழகுடைய பெண் தனித்தவளாகிக் கிழவியானது போலாம்.

1008. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம் பழுத் தற்று. அ

எவராலும் விரும்பப்படாதவன் செல்வம் ஊரின் நடுவில் எட்டிமரம் பழுத்ததைப்போலாம்.

1009. அன்பொரீஇ தற்செற்றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர். கூ

ஒரீஇ (ஒருவி) — ஒழிந்து. செற்று - வருத்தி. ஈட்டிய - சம்பாதித்த. ஒள் — நிறைந்த.

அன்பைவிட்டுத் தன்னைவருத்தித் தர்மவழியைப்பாராமல் சம்பாதித்த ஒள்ளியபொருளைப் பிறர்கொண்டுபோவார்கள்.

1010. சீருடைச் செல்வர் சிறு துனிமாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. ய

துனி - வறுமை. வறம் — வறுமை.

புகழ்பெற்ற செல்வமுடையவரது சிறிய தரித்திரியம் மேகம் வறுமையை அடைந்ததற்கு ஒப்பாகும்.

## 102. நாணுடைமை.

1011. கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. க

தொழில் காரணமாக வெட்குதல் நாணமாம். மற்றவை அழகிய நெற்றியையுடைய குலமகளின் நாணமாம்.

1012. ஊணுடை யெச்சமுயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. உ

எச்சம் – மீதியானது. வேறல்ல – பொது.

உணவும் உடையும் மற்றவைகளும் உயிர்க்கெல்லாம் பொதுவாம். நாணுடைமை மனிதருக்குச் சிறப்பாகும்.

1013. ஊனைக் குறித்தவுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு. ங

உயிரெல்லாம் உடம்பை இருப்பிடமாகக் கொண்டிருக்கிறது. சற்குணநிறைவு நாணமென்னும் நன்மையைத்தனக்கு இருப்பிடமாகக்கொண்டது.

1014. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃதின்
பிணியன்றோ பீடு நடை. [றேற் ச

பீடு – பெருமை.

சான்றோர்க்கு நாணமுடைமை ஆபரணம் அல்லவா; அதில்லாவிட்டால் அவர் பெருமித நடை நோயல்லவா.

1015. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. ரு

உறைபதி – இருப்பிடம்.

பிறர்பழிக்குந் தமது பழிக்கும் நாணுவாரை உலகத்தார் நாணத்திற்கு இருப்பிடமென்பார்கள்.

1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். ௬

பேணலர் - விரும்பாதவர்.

உயர்ந்தவர் தமக்குக் காப்பாக நாணமாகிய வேலியைக் கொள்ளக்கூடாதாகில் பரந்த பூமியை விரும்பார்.

1017. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். ௭

நாணத்தை விடாதவர் நாணங் கெடாமல்பொருட்டு உயிர் இழப்பர். உயிரின் பொருட்டாக நாணத்தை விடார்கள்.

1018. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து. ௮

பிறர் நாணத்தக்கதைத் தான் நாணாமற் செய்வானானால் அது தர்மம் நாணத்தக்கதாகும்.

1019. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை. ௯

கொள்கை - ஒழுக்கம். பிழைப்பின் - வழுவினால்.

ஒழுக்கம் வழுவிப்போனால் குடிப்பிறப்பைக் கெடுக்கும். நாணமில்லாமை நின்றவிடத்தில் நன்மையைக் கெடுக்கும்.

1020. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. ௰

இயக்கம் - சஞ்சரிப்பு. நாண் - கயிறு. மருட்டி - மயக்கி.

அகத்தில் நாணமில்லாதவரின் சஞ்சரிப்பு மரப்பாவை கயிற்றால் (ஆட்டப்பட்டு) உயிருள்ளதுபோல் மயக்குதலை ஒக்கும்.



# 103. குடிசெயல்வகை.

1021. கருமஞ்செயவொருவன் கைதூவேனென்னும்
பெருமையிற் பீடுடைய தில். ௧

கைதூவேன் - கைவிடேன்.

ஒருவன் தொழில் செய்யக் கைவிடேனென்னும் முயற்சியிலும் மேன்பாடுடையதில்லை.

1022. ஆள்வினையு மான்ற வறிவுமென விரண்டி
னீள்வினையா னீளுங் குடி. ௨

ஆள்வினை - முயற்சி. நீள்வினை - ஒழியாதசெய்கை.

முயற்சியும் நிறைந்த அறிவும் என்னும் இரண்டின் ஒழியாத தொழிலால் குடி உயரும்.

1023. குடிசெய்வலென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும். ௩

மடி - உடை. தற்று - கட்டிக்கொண்டு.

குடியை உயரச்செய்வேனென்கிற ஒருவனுக்குத்தெய்வம் உடையைக் கட்டிக்கொண்டு முன் நிற்கும்.

1024. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. ௪

தாழாது - தாமதியாமல், உஞற்றுபவர் - செய்பவர்.

தமது குடி உயருந்தொழிலை விரைந்து செய்பவர்க்கு ஆலோசிக்கவேண்டாமல் அத்தொழில் தானே முடிவுபெறும்.

1025. குற்றமிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. ௫

குற்றமில்லாதவனாய்த் தன் குடியை உயரச் செய்து, வாழுகிறவனை உலகஞ் சுற்றத்தானாகச் சூழும்.

1026. நல்லாண்மை யென்பதொருவற்குத்தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். ௬

ஒருவனுக்கு நல்ல தன்மையென்பது தான் பிறந்த குடியை உயர்வுபடுத்திக்கொள்ளுதலாம்.

1027. அமரகத்து வன்கண்ணர்போலத்தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. ௭

அமர் - போர். வன்கண்ணர் - வீரர். (மேற்றே, மேலதே).

யுத்தக்களத்தில் வீரர் மேலேறுதல் போல் குடியினிடத்திலும் பாரம்பொறுக்க வல்லவர்மேல் அப்பாரம் ஏறும்.

1028. குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். ௮

மடி - சோம்பல்.

தங்கள் குடியை உயரச்செய்கிறவர்களுக்குக் காலபேதமில்லை. சோம்பலுக்கு இடங்கொடுத்து மானத்தை நினைத்தால் குடி கெடும்.

1029. இடும்பைக்கே கொள்கலங்கொல்லோ குடும்பத்
குற்ற மறைப்பா னுடம்பு. [தைக் ௯

குடும்பத்தைக் குற்றமில்லாமற் காக்க முயல்பவனின் உடம்பு துன்பத்திற்குக் கொள்கலமாகும் அல்லவோ.

1030. இடுக்கண்கால் கொன்றிட வீழுமடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. ௰

கொன்றிட - அழிக்க.

முட்டுக்கொடுத்துத்தாங்கும் நல்லமகன் இல்லாதகுடி இடுக்கத்தில் சாய்ந்து விழுந்துவிடும்.



14*

## 104. உழவு.

1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை. ௧

உலகம் (எப்படி) திரிந்தாலும் ஏரின்வழியதாகும். ஆதலால் வருத்தப்பட்டாலும் உழவே தலை.

1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. ௨

உழவர் மற்றத்தொழில்களில் மேற்படுவாரையெல்லாந் தாங்குகின்றபடியால் அவர்கள் உலகத்திற்குச் சுள்ளாணிபோல் இருக்கிறார்கள்.

1033. உழுதுண்டுவாழ் வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். ௩

உழுது உண்டுவாழுகிறவர்களே வாழுகிறவர்கள். மற்றவர்களெல்லாரும் பிறரைத் தொழுது உண்டு அவரைப்பின் செல்லுகிறவர்களாம்.

1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர். ௪

அலகு - கதிர்.

நெல்லையுடையாராகிய தண்ணளியுள்ளார் பலவேந்தர் குடை நீழலாகிய பூமியையுந் தங்கள் குடைக்கீழ்க் காண்பார்கள்.

1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். ௫

கரவாது - ஒளிக்காமல். மாலையவர் - உடையவர்.

தமது கையால் (உழுதலைச்) செய்து உண்கிற இயல்பையுடையவர் இரக்கார்; இரப்பவர்க்கு ஒன்றை ஒளியாமல் கொடுப்பார்கள்.

1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. ௬

உழவர் கைமடங்கினால் விரும்பும் உணவையும் விட்டு விட்டோமென்பவர்களுக்கு நிற்றல் இல்லை.

1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். ௭

தொடி - ஒருபலம். புழுதி - மண். கஃசா - (கஃசாக) கால்படியாக. உணக்கில் - காயவிட்டால்.

ஒரு பலப்புழுதி கால்பலமாகும்படி காயவிடுவானாகில் ஒரு பிடியெருவும் வேண்டாமல் அதிகமாய் விளையும்.

1038. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
னீரினு நன்றதன் காப்பு. ௮

கட்ட - களைபிடுங்கிய.

உழுதலிலும் எருப்போடுதல் நன்று; களை பிடுங்கினபின் அதைக்காத்தல் நீர்ப்பாய்ச்சலிலும் நல்லது.

1039. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும். ௯

கிழவன் - உரியவன். புலந்து - வெறுத்து. ஊடி - பிணங்கி.

நிலத்திற்குடையவன் அதைப் போய்ப்பார்க்காமலிருந்தால் அந்நிலம் வெறுத்து மனையாளைப்போலப் பிணங்கிவிடும்.

1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும். ௰

அசைஇ (அசைந்து) - சோம்பி. (நல்லாணகும்; நல்லாள் நகும்.)

வறியோம் என்று சோம்பியிருப்பவர்களைக்கண்டால் நிலம் என்கிற நல்ல பெண் சிரிப்பாள்.

## 105. நல்குரவு.

1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது. க

வறுமையைப்பார்க்கிலும் இனிமையில்லாதது எதுவென்றால் வறுமையில் இல்லாமையேயாம்.

1042. இன்மையெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். உ

வறுமை யென்னும் ஒப்பற்றபாவி இம்மை மறுமையின் இன்பமில்லாமல் வருவான்.

1043. தொல்வரவுந் தோலுங்கெடுக்குந்தொகையாக
நல்குர வென்னு நசை. ௩

தோல் - அசை.

வறுமையென்னும் ஆசை பழையகுடி வரவையும் அதற்கான அழகையும் ஒரு மட்டாகக் கெடுக்கும்.

1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். ௪

உயர்ந்தகுடியில் பிறந்தவரிடத்திலும் வறுமை இழிவான சொல் உண்டாகும்படியான சோர்வைத் தரும்.

1045. நல்குரவென்னு மிடும்பையுட் பல் குறைத்
துன்பங்கள் சென்று படும். ௫

(குறை, அசைநிலை).

தரித்திரமென்னுந் துன்பத்தால் பலவித துன்பங்கள் வந்து விளையும்.

1046 நற்பொருணன் குணர்ந்து சொலினுநல்கூர்ந்
சொற்பொருள் சோர்வு படும். [தார ௬

நலகூர்ந்தார் - தரித்திரர்.

நல்லபொருளை நன்கு ஆராய்ந்து சொன்னாலும் தரித்திரர் சொல்ல பொருள் இல்லாமையாகும்.

1047. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். ௭

சாரா - சேராத.

தருமத்தோடு பொருந்துதலில்லாத தரித்திரமுடையவன் தன்னைப்பெற்றதாயாலும் அயலானைப்போல பார்க்கப்படுவான்.

1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. ௮

நெருநல் - நேற்று. நிரப்பு - வறுமை.

நேற்று கொன்றதுபோல வந்த வறுமை இன்றைக்கும் வருமா.

1049 நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. ௯

துஞ்சல் - தூங்கல். கண்பாடு - நித்திரை.

நெருப்பில் கிடந்து தூங்குதலும் கூடும். வறுமையில் யாதொன்றாலும் தூங்குதல் அரிது.

1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. ௰

துப்புரவு - ஆகாரம். துவர - முழுவதும்.

வறியவர் முழுவதும் துறவிகளாகாவிட்டால் (பிறருடைய) உப்பிற்கும் காடிக்கும் எமனாவார்கள்.



## 106. இரவு.

1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. க

இரத்தக்கார் - இரக்கத்தக்கவர். கரப்பின் - ஒளித்தால்.

(வறியவன்) கொடுப்பவரைக்கண்டால் இரக்கக்கடவான். அவர்கள் ஒளித்தால் அவர்களுக்குக் குற்றமாகுமொழிய தனக்குக் குற்றமாகாது.

1052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். உ

உறாஅ (உறாத) - அடையாமல்.

இரந்தவைகள் துன்பம் அடையாமல் வந்தால் ஒருவனுக்கு இரத்தலும் இன்பமாகும்.

1053. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. ௩

கடன் - கடமை. ஏஎர் (ஏர்) - அழகு.

ஒளித்தலில்லாத நெஞ்சினையுடைய மானம் அறிபவர்கள் முன்னின்று இரத்தலும் ஓர் அழகையுடையது.

1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. ௪

கனவிலும் ஒளித்தலை அறியாதவரிடத்தில் இரத்தலுங் கொடுத்தல் போலாகும்.

1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. ரு

ஒளிக்காமல் கொடுப்பவர் உலகத்தில் உண்மையாயிருப்பதினால் இரப்பவர் கண்ணுக்கு முன்னே நின்று இரத்தலை மேற்கொள்ளுவார்.

1056. கரப்பிடும்பையில்லாரைக்காணினிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். ௬

ஒருங்கு - ஒன்றுபட.

ஒளித்தலாகிய நோயில்லாதவரைக்கண்டால் வறுமையாகிய துன்பமெல்லாம் ஒருசேரக் கெடும்.

1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக்காணின்மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. ௭

எள்ளாது - இழிவுசொல்லாமல். உவப்பது - சந்தோஷப்படுவது.

இகழ்ந்து இழிவுசொல்லாமல் கொடுப்பவரைக்கண்டால் உள்ளம் மகிழ்ந்து உள்ளுக்குள்ளே மலர்தலையுடையதாம்.

1058. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. ௮

(ஐ, அசைநிலை). ஈர்ம் - குளிர்ந்த.

யாசகர் இல்லாதிருந்தால் குளிர்ந்த இடமுடைய பெரிய பூமி மரப்பாவை சூத்திரக்கயிற்றால் சென்று வந்ததுபோலுமாம்.

1059. ஈவார்கண் ணென்னுண்டாந் தோற்ற மிரந்து
மேவா ரிலாஅக் கடை. [கோள் ௯

மேவார் - விரும்புவார்.

யாசகத்தை விரும்பி வாங்குபவர் இல்லாவிட்டால் கொடுப்பவருக்கு என்ன புகழ் உண்டாகும்.

1060. இரப்பான் வெகுளாமை வேண்டு மிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. ௰

கரி - சாட்சி.

இரப்பவன் கோபியாதிருக்கவேண்டும்; வறுமையாகிய துன்பந்தானே போதுமான சாட்சி.



## 107. இரவச்சம்.

1061. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். ௧

ஒளிக்காமல் சந்தோஷமாகக் கொடுக்குங் கண்ணைப் போன்றவரிடத்திலும் இரவாமை கோடியங்கு நன்மையாம்.

1062. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். ௨

பரந்து - திரிந்து. இயற்றியான் - படைத்தவன்.

உலகைப் படைத்தவன் (இதில்வாழ்பவர்கள்) யாசித்து சீவிக்க விரும்பினானால் (அவன்) அலைந்து திரிந்து கெட்டுப்போவானாக.

1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். ௩

வன்பாடு - கடுமை

வறுமையால் வருந் துன்பத்தை இரந்து தீர்ப்போமென்கிற கடுமையினும் வலிமையுடையது இல்லை.

1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. ௪

தகைத்து - பெருமை, ஒல்லா - உடன்படாத. சால்பு - நிறைவு.

பொருளில்லாதகாலத்திலும் யாசகத்துக்கு உடன்படாத நிறைவு உலகமெல்லாங் கொள்ளாத பெருமையையுடையதாம்.

1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கி னியதில். ௫

தெள் - தெளிந்த. அடு - சமைத்த. புற்கை - கூழ். தாள் - முயற்சி. (தாடந்தது; தாள், தந்தது.)

சமைத்தகூழ் தெளிந்தநீர்போல் இருந்தாலும் தான் முயற்சிசெய்து சம்பாதித்ததை உண்ணுதலினும் இனிமையானது ஒன்றுமில்லை.



1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். ௬

ஆ - பசு, இளி - அவமானம்.

பசுவுக்குத் தண்ணீர் (வேண்டும்) என்று இரத்தலும் அந்த யாசகத்தைப் போல் நாவிற்கு அவமானமுடையது வேறே இல்லை.

1067. இரப்பன் இரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. எ

இரக்கும்போது ஒளிப்பவரை யாசகஞ் செய்யாதிருக்க வென்று இரப்பவரை யெல்லாம் நான் இரந்துகேட்டுக்கொள் ளுகிறேன்.

1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். அ

ஏமாப்பில் - உறுதியற்ற.

யாசகமென்னுங் காவலற்றமரக்கலம் உலோபம் என்னும் பாரில் தட்டுப்பட்டால் உடைந்துபோகும்.

1069. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும். கூ

யாசகத்தின் கொடுமையை நினைத்தால் உள்ளம் உருகிப் போகும். இல்லையென்பதை நினைத்தால் உள்ளமும் இல்லாமல் கெட்டுப்போகும்.

1070. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்
சொல்லாடப் போஒ முயிர். [பவர் ௰

இயாங்கு - எங்கே. (ஒ, அசைநிலை).

யாசகர்க்கு இல்லையென்று சொன்னால் உயிர்போய் விடும்; ஒளிப்பவர்க்கு உயிர் எங்கே ஒளிக்கும்.



## 108. கயமை.

1071. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண் டதில் ௧

கயவர் - கீழோர்.

கீழ்மக்கள் மற்றமனிதரைப்போல இருப்பார்கள். அவர்களுக்கு ஒப்பானவர்களை நாம் கண்டதில்லை.

1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். ௨

அவலம் - கவலை.

நெஞ்சில் கவலையில்லாத கீழ்மக்கள் நன்மைதானவைகளை அறிபவர்களைப் பார்க்கிலும் பாக்கியமுடையவர்கள்.

1073. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். ௩

கீழ்மக்கள் தாம் விரும்புகிறவைகளைச்செய்து நடத்துவதால் தேவருக்கு ஒப்பாவார்கள்.

1074. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். ௪

அகப்பட்டி - மனம்போனபடி. செம்மாக்கும் - கெர்விக்கும்.

கீழ்மகன் தன் மனம்போனபடி நடக்கிறவர்களைக்கண்டால் அவர்களைப்பார்க்கிலும் கெர்வித்து நடப்பான்.

1075. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. ௫

பயமே தான் கீழ்மக்களின் ஆசாரம். அது நீங்கி அவாவப்பட்ட பொருளுண்டானால் அவர்களுக்கு ஆசாரஞ் சிறிது உண்டாகும்.



1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். ௬

மறை - இரகசியம்.

தாங்கள் கேட்ட இரகசியங்களைக்கொண்டுபோய்ப் பிறர்க்குச் சொல்லலால் கீழ்மக்கள் அறையப்படும் பறைக்கு ஒப்பாவார்.

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. எ

ஈர்ங்கை - ஈரக்கை. விதிரார் - தெறியார். கொடிறு - கன்னம்.

கீழ்மக்கள் கன்னத்தை உடைக்கும் வளைந்த கையை யுடையார் அல்லாதவர்க்கு எச்சில் கையுந் தெறியார்.

1078. சொல்லப்பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். அ

கொல்ல - நெருக்க.

சொல்லச் சான்றோர் பயன்படுவார். கரும்பைப்போல நெருக்கக் கீழ்மக்கள் பயன்படுவார்.

1079 உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். கூ

வடு - குற்றம். வற்று (வல்து) - வல்லது.

கீழ்மக்கள் பிறர் உடுப்பதையும் உண்பதையுங் கண்டால் அவர்களில் குற்றங் காண வல்லவராவார்கள்.

1080 எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. ய

கீழ்மக்கள் எதற்கு உரியவராவார்; அவர்களுக்கு ஒரு துன்பமுண்டானால் சீக்கிரமாகத்தங்களை விலைப்படுத்தலுக்கு உரியராவார்.



# பொருட்பால்.

---


PRINTED

BY E. F. HOBUSCH AT THE F. L. MISSION PRESS.

1873.